உ

சிவமயம்.

# தமிழ்ப்புலவர்சரித்திரம்.



இஃது
இராமநாதபுர
சமஸ்தான பூபதியும்,
மாட்சிமைதங்கிய ஸ்ரீமத்.
இரணிய கர்ப்ப மஹாயாஜி ரவிகுல
முத்து விஜய ரகுநாத சேதுபதிராஜகுல கலாநிதியும்,
மஹாப் பிரபுத்துவ மஹௌதாரிய கனதர
பாஸ்கர சேதுபதி மஹாராஜாவின் புத்திர நிதியும்,
மதுரைத் தமிழ்ச்சங்க அக்கிராசனாதிபதியும்,
சென்னைச் சட்டநிரூபணசபையிற் பிரதிநிதியுமாகிய
மஹாராஜ சமுக பூஜித மகத்துவ ஸ்ரீயுக்த
ராஜ ராஜேஸ்வர சேதுபதி மஹாராஜா அவர்களின்
செந்தமிழ்ப் பரிபாலன விருப்பமும்
சிரத்தையும் நோக்கி
யாழ்ப்பாணத்து
வண்ணார்பண்ணைச்
சைவப்பிரகாச வித்தியாசாலைத்
தலைமையுபாத்தியாயர்
சுன்னாகம்
அ. குமாரசுவாமிப்புலவரவர்கள்
இயற்றியது.

கோக்குவில்
சோதிடபரிபாலனமடம்
ச. இ. சிவராமலிங்கையரால்
சோதிடப்பிரகாசயந்திரசாலையில்
பதிப்பிக்கப்பட்டது.

௲௯௱௰௬ கார்த்திகைமீ.

விலை ரூபா 2|8

# உபக்கிரமணிகை.

தமிழ்ப்புலவர்சரித்திரம் என்பதற்குத் தமிழ்மொழிக்கண்ணுள்ள இலக்கியலக்கணங்களைக் கலக்கமறக் கற்றுத் தெளிந்த மெய்யுணர்வும், பிரபந்தஞ்செய்யும் பெருவலியுமுடைய புலவர்களின் சரித்திரமுரைக்கும் நூல் எனப் பொருள் கொள்க.

தமிழ் என்பது பண்டைக்காலந்தொட்டுப் பரதகண்டத்தின் தென்பாகத்தில் வழங்கிவருவதொரு பாஷை. இது, தென்மொழி, தென்சொல் எனவும், வடமொழியிலே திராவிடம் எனவும் வழங்குவது. முதற்கண் இறையனாரும், முருகவேளும் அகத்தியனார்க்குச் செவியறிவுறுத்தியுஞ் சில சில கவிகள் பாடியுஞ் சிறப்பித்தது; இறையனார் தம்பெயர் நாட்டி இலக்கணஞ் செயப்பெற்றது; இறையனார் முதலிய புலவர்களாலும், காய்சினவழுதி முதலிய பாண்டியர்களாலும் போற்றப்பட்டுச் சங்கங்கள் மூன்றிலுந் தலைமைபெற்றிருந்து பல நூல்களாய் விரிந்து வளர்ந்தது; பின்னும் புலவர்கள் பலராலும் பிரபுத்துவம்மிக்க பெருமக்களாலும் போற்றப்பட்டு வேறும் பல நூல்களாய் விரிந்து பரந்தது; தொண்டர் நாதனைத் தூது விடுத்தது; முதலையுண்ட பாலனை அழைத்தது; எலும்பு பெண்ணுருவாக் கண்டது; மறைக்காட்டிற் பூட்டிய கபாடந் திறந்தது; நீரும் நெருப்பும் அறிந்தது; ஆரும் விரும்பும் அழகு செறிந்தது; தேருந்தோறும் இனிமை பயப்பது.

திருவிளையாடற்புராணம்.

தொண்டர் நாதனைத் தூதிடை விடுத்ததும் முதலை
உண்ட பாலனை யழைத்தது மெலும்புபெண் ணுருவாக்
கண்டதும் மறைக் கதவினைத் திறந்ததுங் கன்னித்
தண்ட மிழ்ச்சொலோ மறுபுலச் சொற்களோ சாற்றீர்.

இப்பெருமைகளையெல்லாம்நோக்கியே தமிழ் என்பதை அடைமொழிகொடுத்துச் செந்தமிழ், பைந்தமிழ் முதலியனவாக நந்தமிழ்ப்புலவர் வழங்குவர். செந்தமிழ், பைந்தமிழ், வண்டமிழ், ஒண்

டமிழ், தண்டமிழ், மென்றமிழ், இன்றமிழ், தீந்தமிழ், மாண்டமிழ், நறுந்தமிழ், செழுந்தமிழ், பெருந்தமிழ், அருந்தமிழ், நற்றமிழ், சொற்றமிழ், மெய்த்தமிழ், திருத்தமிழ், சுவைத்தமிழ், வடிதமிழ், முதுதமிழ், தெய்வத்தமிழ், கன்னித்தமிழ், என இவ்வாறே புலவர்கள் தத்தம் நூல்களிலே ஆங்காங்கு விசேடித்துரைத்தலையும், அந்தந்த அடைமொழிப் பொருள்களையும் ஆராய்ந்துணர்க.

இத்தமிழும் இயற்றமிழ், இசைத்தமிழ், நாடகத்தமிழ் என மூவகைப்படும். இயற்றமிழாவது எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி என்னும் இலக்கணம் ஐந்துந் தழுவிவருவது. இசைத்தமிழாவது சுருதி, சுரம், வண்ணம் என்பன தழுவிவருவது. நாடகத்தமிழாவது இயலிசைகளோடு தாளம், அபிநயம், அணி, சுவை என்பன தழுவி வருவது.

மதிவாணர்வெண்பா.

எழுத்தொடு சொற்பொருள் யாப்பணி யென்று
வழுத்துஞ் சுருதிசுரம் வண்ணம்—அழுத்தும்
தனியொத்துப் பாவஞ் சரச மிரசம்
பனிரண் டிலக்கணமாம் பார்.

தமிழ் வழங்கும் நாடு வேங்கடமலைக்குத் தெற்கே தென் கடற்கு வடக்கே மேலைக்கடற்குங் கீழைக்கடற்கும் நடுவே விளங்குந் தென்னாடு. இது தமிழ்நாடு எனவும், தமிழகம் எனவும் படும்.

தமிழ் என்பதற்குப் பொருள் கூறுவார் பலராவர். பிரயோகவிவேகநூலார் திரமிளம் என்னும் வடசொல்லே தமிழ் எனத் தற்பவமாயிற்று என்பர். மற்றொருவர் இனிமையுடையது என்பர். பேரிசைகாரருந் "தமிழ்சிவமினிமையெனுந்தனிப்பொருளாம்" என்பர். மற்றொருவர் ஒப்பில்லது என்பர். மற்றொருவர் தனி ழகரமுடையது என்பர். மற்றொருவர் தகவுடையது என்பர். மற்றொருவர் மூவினமுமுடையது என்பர். இங்ஙனம் பொருள் கூறுவார் இன்னும் பலராவர்.

திரமிளம் என்பதின் தற்பவம் என்றவர் திரமிளம் - அறியாமை நீக்குவது என்பர். இனிமையுடையது என்றவர் தமிழ் - இனிமை; ஆகுபெயர் என்பர். ஒப்பில்லது என்றவர் தமி - ஒப்பின்மை; ழகரம் விகுதி என்பர். தனி ழகரமுடையது என்றவர் தமி - தனி. தனி

ழகரம் வடமொழிக்கும் உரியதாகாது தமிழ்மொழிக்கே உரியதாய்த் தனியே நிற்கும் ழகரம் என்பர். தகவுடையது என்றவர் தகு என்னும் பகுதி இறுதி கெட்டு மிழ் என்னும் விகுதி சேர்ந்து முடிந்தது என்பர். மூவினமுமுடையது என்றவர் தமிழ் என்பதிலே தகரம் வல்லினம். மகரம் மெல்லினம். ழகரம் இடையினம் என்பர்.

புலவர் என்பது அறிஞர் எனப் பொருள்படும். புலம் - அறிவு. அர் ஒரு விகுதி. வடநூலார் கூறும் வித்வான் என்பதும் இப்பொருட்டு. வித் - அறிதல். வான் ஒரு விகுதி. வித்வானுவான் இருக்கு, யசு, சாமம், அதர்வணம் என்னும் வேதம் நான்கும், சிக்கை, கற்பம், வியாகரனம், நிருத்தம், சந்தோவிசிதி, சோதிடம் என்னும் வேதாங்கம் ஆறும், ஆயுர்வேதம், தனுர்வேதம், காந்தருவவேதம், அருத்தவேதம் என்னும் உபவேதம் நான்கும், புராணம், நியாயம், மீமாஞ்சை, மிருதி என்னும் உபாங்கம் நான்குமாகிய வித்தைகள் பதினெட்டுங் கற்றவன் என ஆறுமுகநாவலர் கூறுவர். வடநூலார் கூறும் மற்றை நாமங்களாகிய தோடஞ்ஞன், கோவிதன், புதன், பிராஞ்ஞன் முதலிய நாமங்களும் அறிவுடைமைபற்றி வந்த நாமங்களாம். தோடஞ்ஞன் என்னும் நாமத்தாலே நூலுரை முதலியவற்றிற் காணப்படும் வழுக்களை எடுத்துரைத்தலும் புலவர்க்கு முறை என்பது புலப்படும். தோடஞ்ஞன் - வழுக்களை அறிவோன். தோடம் - வழு. ஞன் - அறிவோன்.

புலவராவார் இயல், இசை, நாடகம் என்னும் மூன்று தமிழும் முறையேபயின்று ஐந்திலக்கணநெறிகளுந்தழுவிக் கடுங்கவி, இன்பகவி, அருங்கவி, பெருங்கவி என்னும் நால்வகைக்கவிகளையும் பாடும் வலியமைந்த அறிஞர் என நிகண்டுநூலார் கூறுவர். கடுங்கவி—ஆசுகவி. அருங்கவி—சித்திரகவி. புலவரும் கவி, கமகன், வாதி, வாக்கி என நால்வகைப்படுவர். கவியாவான் கடுங்கவி முதலிய நால்வகைக் கவிகளையும் பாடுந் தொழில்வல்ல புலவன். கவி - பண்டிதன். கமகனுவான் பலகலையுணர்ச்சியானும், மதிநலவலியானும் கற்றுணராத நூற்பொருள்களையும் கற்றுணர்ந்தவன்போலக் கற்றுணர்ந்தோர் வியக்குமாறு போதிக்கும் புலவன். கமகன்—போதிப்பவன். வாதியாவான் ஏதுவும் மேற்கோளும் எடுத்துக் காட்டிப் பரமதங்களை மறுத்துச் சுவமதம் ஒன்றையே நிறுத்தி வாதிக்கும் புலவன். வாதி—வாதஞ்செய்பவன். வாக்கியாவான் அறம், பொருள் முதலிய புருடார்த்தங்கள் நான்கையுந் திறம்பட விரித்துரைக்கும் புலவன். வாக்கி—வாக்கில் வல்லவன்.

புலவராய் முற்காலத்திருந்தார் பலர் அரசர்களும் பிரபுத்தன்மையுடைய செல்வர்களும் விரும்பிக் கொடுக்கும் பொருளும் வரிசையும் பெற்று வறுமை என்பது சிறிதும் அறியாது வாழ்ந்தனர். அரசர், செல்வர் என்னும் அவர்களும் புலவர் கவிகளில் அமைந்து புவிகளிற் பரந்து நிலைபெறும் புகழுடம்புமுடையராய் வாழ்ந்தனர். பெருநிலமன்னர்களாகிய சேர சோழ பாண்டியர்களும், குறுநிலமன்னர்களாகிய பாரி, ஓரி, நள்ளி முதலிய வள்ளல்களும், பிற்காலத்துச் சேதுபதியரசர்களும், கல்விப்பிரியர்களாகிய செல்வப்பிரபுக்களும் மிக்க வரிசைகொடுத்தும், தக்க பொருள்கொடுத்தும் புலவர்களைப் போற்றிவந்தார்கள் என்பதும், அவர்கள் புகழ்களும் புலவர் கவிகளால் இன்றும் விளங்குகின்றன என்பதும் பழைய தமிழ்நூல்களைப் படிப்பவர் கேட்பவர் யாவரும் இனிதுணர்வர்.

பதிற்றுப்பத்து என்னும் நூலினாலே சேரர்குலவரசர் புகழ்களும், பட்டினப்பாலை என்னும் நூலினாலே சோழன் கரிகாலன் புகழும், மதுரைக்காஞ்சி என்னும் நூலினாலே பாண்டியன் நெடுஞ்செழியன் புகழும், அகநானூறு, புறநானூறு, நற்றிணை, குறுந்தொகைமுதலிய நூல்களினாலே பாரி, ஓரி, நள்ளிமுதலிய சிற்றரசர் புகழ்களும் இன்றும் விளங்குகின்றன. வில்லிபாரதத்தினாலே "கொங்கர்குலவரபதியாட்கொண்டான்" புகழும், கம்பராமாயணத்தினாலே "மன்னவர்வறுமைநோய்க்கு மருந்தன சடையன்" புகழும், அரசகேசரி ரகுவமிசத்தினாலே "பன்னுசெஞ்சொற் பரராசசேகரமன்னன்" புகழும் இன்றும் விளங்குகின்றன. ஒருதுறைக்கோவை, தளசிங்கமாலை, கல்லாடசாரக்கலித்துறை முதலிய பிரபந்தங்களாலும் பல தனிநிலைகளாலும் இரகுநாதசேதுபதி, பாஸ்கர சேதுபதி முதலிய சேதுபதியரசர்களின் புகழ்களும், ஆபிதானிக நூலாகிய சேந்தன் திவாகரத்தினாலே அம்பற்கிழான் அருவந்தை என்னுங் குருசில் புகழும், வாணன்கோவையினாலே தஞ்சாக்கூர்ச் சந்திரவாணன் புகழும் இன்றும் விளங்குகின்றன. இவருள்ளே சேதுபதியரசர்களின் மரபினோர் இன்றும் புலவர்பாடும் புகழுடையராய் விளங்குகின்றனர்.

புலவர்களை அரசர்களும் பிரபுக்களுமன்றித் திருக்கைலாச பரம்பரைத் திருவாவடுதுறையாதீனம் முதலிய ஆதீன மடாலயங்களிலே அதிபதிகளாய் வீற்றிருந்த தேசிகமூர்த்திகளும் நன்கு

மதித்துப் பேணிவந்தார்கள். இப்போது திருவாவடுதுறையாதீன மடாலயத்திலே அதிபதியாய் வீற்றிருக்கும் ஸ்ரீலஸ்ரீ. அம்பலவாண தேசிகமூர்த்திகளும் புலவர்களை நன்குமதித்துத் தமிழ்மொழியையும் அபிமானித்து வருகின்றார்கள். அவர்களுடைய அறிவு, விவேகம், அருங்கலை விநோதம் முதலியன நோக்கி யாங் கூறிய துதி கவிகளுள்ளும் இரண்டு கவிகள் ஈண்டுக் காட்டுதும்:—

கட்டளைக்கலித்துறை.

க. தேவார மாதி யருட்பெருஞ் செல்வர் திருமுறைகள்
நாவார வோதிக் குசையினுங் கூரிய நன்மதியாற்
பாவாண ருங்கொள நற்பொரு ளாய்ந்து பகர்ந்துமகிழ்
கோவே நமோநம வம்பல வாண குருமணியே.

உ. விருதமர் கோகழி யம்பல வாண வியன்குருவின்
அரிதுணர் கல்வியை யீகையை ஞானத்தை யாடகப்பொன்
பொருதிரு மேனியைச் சைவநல் வேடப் பொலிவழகைக்
கருதிடுஞ் சுன்னைக் குமார சுவாமி கவியிவையே.

புலவருள்ளே பலர் ஆக்கமுங் கேடும் அப்பொழுதே பயக்கும்படி கவிபாட வல்ல வரகவிகளாயும் வாழ்ந்தனர். கடைச்சங்கப் புலவராகிய நக்கீரர் கொண்டான் என்னுங் குயவன் இறக்கப் பாடினர். பின்னர் உயிர்க்கவும் பாடினர்.

இறக்கப்பாடியது.

முரணில் பொதியின் முதற்புத்தேள் வாழி
பரண கபிலரும் வாழி—அரணிலா
ஆனந்த வேட்கையான் வேட்கோக் குயக்கொண்டான்
ஆனந்தஞ் சேர்கசுவா கா.

உயிர்க்கப்பாடியது.

ஆரிய நன்று தமிழ்தீ தெனவுரைத்த
காரியத்தாற் காலக்கோட் பட்டானைச்—சீரிய
அந்தண் பொதியி லகத்தியனா ராணையாற்
செந்தமிழே தீர்க்கசுவா கா.

ஔவையார் வெட்டுண்டு முண்டமாய் நின்ற பலாமரம் ஒன்று இலையுங் கொம்பும் பலமுங் காயுங் கொண்டு தழைத்துச் செழித்துப் பண்டுபோனின்று பயன்தந்து விளங்கப் பாடினர்.

பலாமரந்தழைக்கப்பாடியது.

கூரிய வாளாற் குறைபட்ட கூன்பலா
ஓரிலையாய்க் கொம்பா யுயர்மரமாய்ச்—சீரிய
வண்டுபோற் கொட்டை வளர்காயாய்ப் பின்பழமாய்ப்
பண்டுபோ னிற்கப் பணி.

ஔவையார் தம்மீது பாடல் ஒன்று கூறச் சொன்ன மூடன் ஒருவனை நோக்கி "நீவிர் அவிச்சுவையல்லது தமிழ்ச்சுவை அறியீர் உம்மை எங்ஙனம் பாடுவேன்" என்று நகையாடினர். குமாரகுருபர சுவாமிகளும் "கற்றனகல்லார்செவிமாட்டிக்கையுறாஉங்—குற்றம் நமதே" என்றார். வேறும் புலவர் பலர் மூடர்மீது பாடல் கூற லை வெறுத்தொழிந்தனர். வடநூலாருள்ளே ஆசிரியர் வரருசியாரும் நீதிரத்தினம் என்னும் நீதிநூலிலே பிரமாவை விளித்துப் "பிரமாவே! உமது இச்சைப்படி வேறு துயர்களை நூறுவரையுந் தாரும்! அவைகளையெல்லாம் நான் பொறுத்துக்கொள்வேன். கவிச்சுவையறியாரிடத்துக் கவிச்சுவையறிவித்தலாகிய இத்துயரை எனது தலையிலே எழுதாதே! எழுதாதே! எழுதாதே!" என்று சுலோகம் ஒன்றினாற் பிரார்த்தித்தார்.

சுலோகம்.

இதர தாப ஶதாநி யதேச்சயா
விதர தாநி ஸஹே சதுராநந।
அரஸிகேஷு கவித்வ நிவேதநம்
ஶிரஸி மா லிக மா லிக மா லிக॥

அக்காலத்திலே அரசர்களும், செல்வப் பிரபுக்களும் அபிமானித்துப் பேணுதலாற் புலவரும் பலராயினர். நூலுரைகளும் பலவாயின. தனிநிலைக்கவிகளும் பலவாயின. கற்பவர் கேட்பவரும் பலராயினர். பிழைதெரிவார்க்கஞ்சிப் பிழை நுழையாது பாடுவாரும் பலராயினர். இக்காலத்திலோ கவிச்சுவை தெரிந்து செவித்துணை கொடுக்கும் பெருமக்களுங் குறைந்தனர். கவிபாடும் புலவருங் குறைந்தனர்! நூலுரைகளுங் குறைந்தன! கற்பவர் கேட்பவருங் குறைந்தனர்! திருத்தங்களுங் குறைந்தன!

புலவர்கதைகளுட் சிலசில பாகமும், அதனோடு சம்பந்தமுடைய சிலசில கவிகளும், பிரபந்தநாமாதிகளும் வரல்நோக்கி இத

னச் சரித்திரம் என்றும். சர் - நடத்தல். இத்ர - ஒரு விகுதி. இச்சரித்திரம் வித்தைக்கண் விருப்புடைய பாலகர்பொருட்டுச் செய்தது. பூரணம்பெறச்செய்த ஒரு சரித்திரமன்று. வித்தையின் விருத்திக்கு நன்கு பயன்படாமையும் விரிந்து நீளுதலும் நோக்கித் தெரிந்த சரித்திரங்களுள்ளும் சிலபல சரித்திரங்களை வரைந்து சேர்த்திலம். புலவர்களுள்ளும் இலக்கிய இலக்கணவுணர்ச்சியிலே தக்கவர் என்றும், நூலுரைகள் செய்தலிலே மிக்கவர் என்றும், பல்வகைக் கவிகளையும் பாடுதலிலே வல்லவர் என்றும் எமக்குப் புலப்பட்ட புலவர்களையே பெரும்பாலும் ஈண்டுக் கூறினும். சரித்திரம் நன்கு புலப்படாப் புலவர்களுட் பலர் நாமங்களை இதன் முடிவிற் காட்டினும். அவைகளையும் நோக்கி ஆராய்க.

இதனை அவாவொடுங் கற்பவர் அக்காலத்திலே அரசர்களும் பிரபுக்களும் புலவர்கட்குச் செய்த ஔபசாரிகங்களையும், கல்வி வளர்ச்சிக்கும் உள்ளக்கிளர்ச்சிக்குங் காரணமான சரித்திர பாகதேயங்களையும், பல்வகை நூல்களின் நாமதேயங்களையும், முதலிய பொருள்களையும், சொல்லும் பொருளுஞ் சுவைபடப் பாடிய பல்வகைக் கவிகளையும், கவிகளின் பொருள்களையும், திருக்கு மடக்குச் சிலேடை முதலிய சொல்லணிச் சுவைகளையும், வேறு சுவைகளையும் அரிய சொற்களையும் அறிய வல்லவராவர்.

இவைகளை அறிந்தவர் இன்னும் அறியவேண்டும் என்னும் ‡ ஆர்வமுடையராய்ப் பேரளவிலே அறிந்த நூல்களையெல்லாம் பரிவொடுந் தேடிப் பரிச்சிரமத்தோடும் படித்துப் பண்டிதர்களோடும் பயின்று பயன்பெறுவோமென முயன்று தக்கோர் வாக்குக்களையும், பாக்களின் போக்குக்களையும், சொற்பொருு ணோக்குக்களையும், தொடை * நோக்குக்களையும், கிளவியாக்கங்களையும், o நோக்கனோக்கங்களையும், உறுதிப்பொருள்களையும் அறிய வல்லவராவர்.

இவ்வளவிலமையாது மேலனவாயுள்ள நூலுரைகளையுந் தேடிப் படித்துப் பரிசிலனஞ்செய்வோர் பேதைமை என்பது நீங்கிச்

---

‡ ஆர்வம் - பெறக்கருதிய பொருள்களின்மேல் வைக்கும் பற்று.
* நோக்கு - பிறிதொன்றனை நோக்காது தன்னையே நோக்கி நிற்கும் நிலை.
o நோக்கனோக்கம் - கருத்து.

சுகம் பயப்பனவாகிய ஆதரம், பத்தி, அடக்கம், பொறுமை, நீதி, இன்சொல், நெறிநிலை முதலிய புண்ணியங்களையும், துக்கம் பயப்பனவாகிய கோபம், பொறாமை, கொலை, களவு முதலிய பாவங்களையும், "கற்றவர் விழுங்குங் கற்பகக் கனி"யாகிய கடவுளையும், சிற்றறிவுடைய ஆன்மா எனப்படுந் தம்மையும், அக்கடவுளை வழிபட்டுத் துக்கம் என்பன நீங்கியொழியும் நெறிகளையும் நன்கறிந்து நல்வழிக்கண்ணே நிற்க வல்லவராவர்.

பல்வழிக்கணுஞ் சேறலைவிட்டு நல்வழிக்கணின்று கற்றநூலுரைகளையெல்லாம் அநுசிலனஞ்செய்வோர் அறிவெல்லாம் நிறைவாகிப் பண்டிதர்களாய்ப் பாடஞ்சொல்லும் பெருமையையும், சவையகத்து முந்தியிருக்கும் பெருமையையும், உறுதிபயக்கும் உண்மைப்பொருள்களை உபதேசிக்கும் பெருமையையும், பிரபந்தஞ்செய்யும் பெருமையையும், பெருமக்களும் பிரபுக்களும் "வருக. வருக." என உவகையோடழைக்கும் பெருமையையும், சேரும் நாடும் ஊருந் தமவேயாகி ஆரும்போற்ற அமையும் பெருமையையும், பேரும் பொருளும் ஒருசேரச் சேரும் பெருமையையும், பின்னும் பெறற்பாலனவாகிய * ஐகிகலௌகிக சுகங்களையும், ‡ பாரலௌகிக சுகங்களையும் பெற்று நன்கு வாழ்குவர் என்பதே நமது கருத்து.

புலவர் சிலவருடைய நாடு, நகர், குலம், சமயம், காலம், நூலுரிமை, கவி, கவிப்பாடம், கதை முதலியவைகளிலே சரித்திரகாரர் பலர் தம்முள்ளே முரணுவர். நகர் - ஊர். இடைக்காடர் நாட்டினைச் சிலர் பாண்டிநாடு என்பர். சிலர் மலைநாடு என்பர். ஒட்டக்கூத்தர் நாட்டினைச் சிலர் சோழநாடு என்பர். சிலர் பாண்டிநாடு என்பர். செயங்கொண்டார் நாட்டினைச் சிலர் தொண்டைநாடு என்பர். சிலர் சோழநாடு என்பர்.

ஒட்டக்கூத்தரூரைச் சிலர் சீகாழி என்பர். சிலர் மலரி என்பர். சீகாழி என்றவர் "கம்பனென்றுங் கும்பனென்றுங் காழியொட்டக் கூத்தனென்றும்" என்ற பாட்டுங் காட்டுவர். மலரி என்றவர் "மலரிவருங் கூத்தன்றன் வாக்கு" என்ற தண்டியலங்காரக் காட்டுங் காட்டுவர். பொய்கையாரூரைச் சிலர் காஞ்சிபுரம் என்பர். சிலர்

* ஐகிகலௌகிகம் - இவ்வுலகிற்குரியது.
‡ பாரலௌகிகம் - பரலோகத்திற்குரியது.

பொய்கை என்ற ஊரர் என்பர். காளமேகப்புலவரூரைச் சிலர் நந்திபுரம் என்பர். சிலர் கும்பகோணம் என்பர். நந்திபுரம் என்றவர் "வாச வயனந்தி வரதா" என்ற பாட்டுங் காட்டுவர்.

வெண்பா.

வாசவய னந்தி வரதா திசையனைத்தும்
வீசு கவிகாள மேகமே—பூசுரா
விண்கொண்ட செந்தழல்வாய் வேகுதே யையையோ
மண்டின்ற பாணமென்ற வாய்.

இதன் முதலடியைச் சிலர் பாடம் வேறாகவுங் கூறுவர். அதிமதுரகவிராயரூரைச் சிலர் கோவலூர் என்பர். "கோக்குதிரை நின்குதிரை கோவன்மது ராவொன்னார்" என்ற பாட்டுங் காட்டுவர். நெற்குன்றவாணரூரைச் சிலர் காஞ்சிபுரம் என்பர். சிலர் நெற்குன்றம் என்பர். திருவேங்கடநாதரூரைச் சிலர் ஆமாத்தூர் என்பர். சிலர் மாயூரத்தருகிலுள்ள மாந்தை என்பர். தாயுமானவருடைய தாதையாரூரைச் சிலர் வேதாரணியம் என்பர். சிலர் யாழ்ப்பாணத்துள்ள தென்மராட்சி என்பர்.

நக்கீரர்குலத்தைச் சிலர் பரவர்குலம் என்பர். சிலர் வேதியர் குலம் என்பர். கபிலர்குலத்தைப் பழைய திருவிளையாடல் பாடினவர் வேதியர்குலம் என்பர். வேறு சிலர் வேறுகுலம் என்பர். வேறு சிலர் கபிலநாமந்தரித்துப் புலவராயிருந்தார் பலர் என்பர். கம்பநாடர்குலத்தைச் சிலர் காவலர்குலம் என்பர். சிலர் உவச்சர்குலம் என்பர். அருணகிரிநாதர்குலத்தைச் சிலர் வேதியர்குலம் என்பர். சிலர் வேறு குலம் என்பர்.

திருவள்ளுவர் சமயத்தைச் சிலர் ஆருகதம் என்பர். சிலர் வைஷ்ணவம் என்பர். வேறுசிலர் சைவம் என்பர். செயங்கொண்டார் சமயத்தைச் சிலர் ஆருகதம் என்பர். சிலர் சைவம் என்பர். அபிராமிபட்டர் சமயத்தைச் சிலர் சாக்தேயம் என்பர். சிலர் சைவம் என்பர். பரிமேலழகர்சமயத்தைச் சிலர் வைஷ்ணவம் என்பர். சிலர் சைவம் என்பர். புத்தமித்திரர்சமயத்தைச் சிலர் ஆருகதம் என்பர். சிலர் பௌத்தம் என்பர்.

திருவள்ளுவர் காலத்தைச் சிலர் கடைச்சங்ககாலம் என்பர். சிலர் அதற்கும் பிற்காலம் என்பர். கம்பநாடர் காலத்தைச் சிலர்

"எண்ணிய சகாத்த மெண்ணூற் றேழின்மேல்" என்பர். சிலர் சகாத்தம் நூற்றேழின்மேல் என்பர். காளமேகப்புலவர்காலத்தைச் சிலர் முந்நூறு வருடங்களுக்கு முன்னர் என்பர். சிலர் அறுநூறு வருடங்களுக்கு முன்னர் என்பர். கச்சியப்பசிவாசாரியர்காலத்தை யாம் "அந்தகக்கவிவீரராகவமுதலியார்காலம் என்பர்" என்றும். அது தமிழ்நாவலர்சரிதையிலே வீரராகவமுதலியாரது வித்தியா கம்பீரங் கூறும் "பொங்குபுக ழயோத்தி யில்வாழ்" என்னும் விருத்த முகத்திலே "கவிவீரராகவன் காஞ்சிபுரத்திலே படித்தபோது கந்தபுராணம் கச்சியப்பர் பாடியது" என்ற கூற்றை அநுசரித்தெழுதியது. எமது சம்மதமான கூற்றன்று. கச்சியப்பசிவாசாரியர்காலங் கூறும் "எதமறுசகாத்த மெழுநூற்றின்மேலா யிலகுகந்த புராண மரங்கேற்றி னனே" என்ற கூற்றையும் நோக்குக. காலங்களைக் கணித்துத் துணிந்து கூறுதல் நமக்கியலாமைபற்றியே பலர் கூற்றுக்களையும் படியெடுத்துக்கூறி "என்பர், என்பர்" என்றும். காலங்களைக் கணித்து வாதித்துரைப்பார் பலர். திருவாதவூரர்காலத்திலே பெருவாதம் நிகழ்த்திய காலவாதிகளும் உளர். நூல்களிற் பிரவேசித்து நுதலிய பொருள்களைப் பலமுறை நோக்கி ஆராய்ந்து பயன்கோடல் கற்பவர் யாவர்க்கும் ஆவசியகம். பண்டைக்காலப் புலவர்கள் பலர் அறம், பொருள், இன்பம், வீடு என்னும் உறுதிப் பயன்களைத் திறம்பெறக் கூறலேயன்றிக் காலங் கூறலை மேலதாகக் கொண்டிலர். ஆதலாற் புலவர்கள் காலங்களை நிரூபணஞ்செய்து நிச்சயித்தல் அருங்குரைத்து.

குலோத்துங்கசோழன்கோவையைச் சிலர் கூத்தர்பாடல் என்பர். சிலர் மற்றொருவர் பாடல் என்பர். தெக்கிணகைலாசபுராணத்தைச் சிலர் செகராசமன்னவர்பாடல் என்பர். சிலர் மற்றொருவர் பாடல் என்பர். கருவைப்பதிற்றுப்பத்தந்தாதியைச் சிலர் அதிவீரராமபாண்டியர்பாடல் என்பர். சிலர் வரதுங்கராமபாண்டியர்பாடல் என்பர். யாப்பருங்கலகாரரைப் பாயிரகாரர் "அளப்பருங்கடற்பெய ரருந்தவத்தோனே" என்பர். சிலர் அளப்பருங்கடற்பெயரோன் என்றது அமிர்தசாகரரை என்பர். சிலர் ரகாரம்நீக்கி அமிதசாகரரை என்பர். அமிதம் - அளவின்மை என்பதுங் கூறுவர்.

"கல்லாத வொருவனை" என்னுங் கவியைத் தமிழ்நாவலர்சரிதைகாரர் ஔவை பாடல் என்பர். வேறுசிலர் இராமச்சந்திரகவி

ராயர் பாடல் என்பர். "காவலரீகை கருதுங்கால்" என்னுங் கவியைத் தமிழ்நாவலர்சரிதைகாரர் செயங்கொண்டார்பாடல் என்பர். வேறு சிலர் இரட்டைப்புலவர் பாடல் என்பர். "வாய்த்த வயிரபுர மாகாளியம்மையே" என்னுங் கவியைத் தமிழ்நாவலர்சரிதைகாரர் பொய்யாமொழிப்புலவர் பாடல் என்பர். வேறு சிலர் கம்பநாடர் பாடல் என்பர். கவியிற் பாட வேறுபாடுங் கொள்வர்.

வெண்பா.

வாய்த்த வயிரபுர மாகாளி யம்மையே
ஆய்த்த வருகா ரணிவயலிற்—காய்த்த
கதிரைமா ளத்தின்னுங் காளிங்க னேறுங்
குதிரைமா ளக்கொண்டு போ.

கம்பநாடர் பாடிய "மன்னவனும் நீயோ" என்னுங் கவியின் முன்னீரடியையுந் தமிழ்நாவலர்சரிதைகாரர் "மன்னவனு நீயோ மண்ணுலகு மிவ்வளவோ உன்னையோ யான்புகழ்ந் தோதுவது" என்று பாடங்கொள்வர். மற்றொருவர் "மன்னவனுநீயோ வளநாடு மிவ்வளவோ—உன்னையறிந் தோதமிழை யோதினேன்" என்று பாடங்கொள்வர். கம்பராமாயணத்திலே வருங் கவிப் பாடபேதங்களுங் கணக்கில. கற்பவர்பொருட்டுச் சில காட்டுதும்.

ஆற்றுப்படலத்திலே மறியுடையாயர் மாதர் என்பதை "மறி விழியாயர் மாதர்" எனவும், சேர்த்தநீர்த் திவலை பொன்னு முத்தொடு என்பதைச் "சேர்த்தநீர்த் திவலை யென்னு முத்தொடு" எனவும், நகரப்படலத்திலே கமைப்பெருஞ் செல்வக் கடவுளு முதலோர் கண்டிலா நகரது காண்பான் என்பதைக் "கமைப்பெருஞ் செல்வக் கடவுளு முவமை கண்டில ரங்கது காண்பான்" எனவும், திருவவதாரப்படலத்திலே போகமா மலருறை புனிதன் மீட்டமை—தோகைபா கற்குரைச் சொல்லி னனரோ என்பதைப் "போகமா மலருறை புனித வொல்லையின்—ஏகிநீ மீட்டமை யியம்ப வேண்டுமோ" எனவும் பாடங் கொள்வர்.

விருத்தம்.

பாகசா தனன்றனைப் பாசத் தார்த்தடல்
மேகநா தன்புகுந் திலங்கை மேயநாட்
போகமா மலருறை புனித வொல்லையின்
ஏகிநீ மீட்டமை யியம்ப வேண்டுமோ.

பாகசாதனன்—இந்திரன்; எழுவாய். மேகநாதன் - இந்திரசித்து. புகுந்து ஆர்த்து மேய என முடிக்க. போக-தானுங் கட்டுண்டுசெல்ல. சில பிரதிரூப லேககர்களால் எழுதப்பட்டுக் கதைச் சுருக்கம் உரைக்குங் கவியும் ஒன்றுளது. காட்டுதும்.

கதைச்சுருக்கக்கவி.

பராவரு மிராமன் மாதோ டிளவல்பின் படரக் கான்போய்
விராதனைக் கானை மானைக் கவந்தனை வென்றி கொண்டு
மராமரம் வாலி மார்பு துளைத்தனை வகுத்துப் பின்னும்
இராவணன் குலமும் பொன்ற வெய்துட னயோத்தி வந்தான்.

கவிப்பாடங்களிலன்றிக் கதைகளின்கண் வரும் மாறுபாடுகளும் பல. கலிங்கப்பரணிகாரர் "பத்தொ டாறுநூ றுயி ரம்பெறப் பண்டு பட்டினப் பாலை கொண்டதும்" என்னும் பாட்டினாற் பட்டினப் பாலை என்னும் நூலுக்குக் கொடுத்த பரிசில் பதினாறிலக்கம் பொன் என்பர். சோழமண்டலசதககாரர் "குணைக்கின் மலைபோற் பதினாறுகோடி செம்பொன் கொடுத்தவிலை—இனைக்குமொரு பட்டினப் பாலை" என்னும் பாட்டினாற் பதினாறு கோடி பொன் என்பர். சிதம்பரச்செய்யுட்கோவையைச் சிலர், யாப்பிலக்கணத்துக்கு உதாரணமாகச் சைவநூற்கவிகள் வேண்டும் என்றபோது பாடியது என்பர். சிலர் ஆக்கியோர் தம்மை வரகவி என்று புலவர் ஒருவர் அசதியாடியபோது யாப்பிலக்கண வலிமை புலப்படப் பாடியது என்பர். கம்பநாடர் பாடிய "ஆழியான் பள்ளி யணையே" என்ற கவியைத் தமிழ்நாவலர்சரிதைகாரர் புதுவைச் சேதிராயனைத் தீண்டிய விடந் தீர்க்கப் பாடிய பாடல் என்பர். வேறு சிலர் தில்லைவாழந்தணர் ஒருவரைத் தீண்டிய விடந் தீர்க்கப்பாடிய பாடல் என்பர்.

ஆழியான் பள்ளி யணையே யவன்கடைந்த
வாழி வரையின் மணித்தாம்பே—யூழியான்
பூணே புரமெரித்த பொற்சிலையிற் பூட்டுகின்ற
நாணே யகல நட.

புலவர்களுட் பலர் தாம் இயற்றிய நூல்களிலே தத்தம் நாடு நகர் காலம் முதலிய கூறுதொழிந்தமையானும், இடையிலே காலம் எண்ணில கழிந்தொழிந்தமையானும், சரித்திரகாரர் பலர் ஒருவர் சென்ற வழியே ஒருவர் சேறலைத் தழுவிச் சென்றமையானும்,

வேறு வழி தெரியாமையானும் புலவர்சரித்திரங்களில் இங்ஙனமாய மாறுபாடுகள் சம்பவித்தல் பெரும்பான்மையாகும்.

இப்பிழைகளும் வேறு பிழைகளும் இந்நூலகத்தும் சம்பவித்தல் கூடும். பிழைகளைக்காணும் அறிஞர்கள் செந்தமிழ் முதலிய பத்திரிகைகளில் அவைகளைப் பிரகடனஞ்செய்தல் நன்று. பிழை கூறல் அவமானஞ்செய்தலன்று. அது சம்மானமாய் நமக்கும் பயன்படும். கற்போர் பிறர்க்கும் பயன்படும். திருத்தமும் பலவாகும். பிழைதிருத்தப்பட்டதென்று யாம் பிரகடனஞ்செய்த யாப்பருங்கலக்காரிகை சில வருடங்களின் பின்னர் நோக்குழிப் பிழையுடையதாகிப் பின்னுந் திருத்தப்பட்டுப் பிரகடனமாயிற்று.

நூலுரைகளைப் பிழைநோக்கி நகைப்பாரும், பிழையின்மை நோக்கித் துதிப்பாரும், தாரதம்மியம்நோக்கி மதிப்பாரும், ஆராய்ந்து திருத்தம் நோக்கி ஆக்குவோரும், நிரம்பிய புலமையிலார் கூற்றுக்களை நீக்குவோரும், அறிஞர் அங்கீகாரம் நோக்குவோரும் இக்காலத்தில் அரியராய்ச் சிலராயினர். துவர நோக்காது பாயிரங் கொடுத்துத் துதிப்பாரும், வழுவறிய முடியாது வடிவம் நோக்கி மதிப்பாரும், பாடந் தோடங்கூடலை நாடலின்றி ஆக்குவோரும், தோடஞ்ஞராயிருந்துங் கூறலஞ்சி மௌனம் நோக்குவோரும், தக்கனவாயினும் "கடினம்! கடினம்!" என்று நீக்குவோரும், பழைய நூலுரைகளின் பயிற்சியின்றிப் புதிய நூலுரைகள் ஆக்குமாறு நோக்குவோரும் எளியராய்ப் பலராயினர். புதிய நூலுரைகளை ஆக்குமுன்னரே பழைய நூலுரைகளைப் படித்து நோக்கி அநுசிலனஞ்செய்தல் ஆக்குவோர் யாவருக்கும் ஆவசியகம். அநுசீலனஞ் செய்யின், ஆக்கும் பயிற்சியுந் திருத்தமும் அதிகம் வளரும்.

இதனை எழுதத் தொடங்குமுன் யாம், இங்கே வழங்கும் பழைய நூலுரைகளையே முதற்கண் அநுசிலனஞ்செய்தேம். பின்னர் ஆங்காங்கெய்திய பாயிரங்கள், தனிநிலைக்கவிகள், புலவர்நாமங்கள் முதலியவைகளையும் ஆராய்ந்தேம். அதன்பின் தொண்டைமண்டலசதகம், சோழமண்டலசதகம், தமிழ்நாவலர்சரிதை, புலவர் புராணம், தனிச்செய்யுட்சிந்தாமணி, பாவலர்சரித்திரதீபகம், ஆழ்வார்சரித்திரம், தனிப்பாடற்றிரட்டு முதலியவைகளையும் ஆராய்ந்தேம். அதன்பின் மஹாமகோபாத்தியாயர் வே. சாமிநாதையரவர்களும், சி. வை. தாமோதரம்பிள்ளையவர்களும், வேறும் புலவர்கள்

பலரும் தத்தம் பிரகடனநூல்களின் முகத்தில் எழுதியிருக்குஞ் சரித்திரங்களையும், சேதுசமஸ்தான வித்துவான் ரா. இராகவையங் காரவர்களும், வேறும் பலருஞ் செந்தமிழ்ப் பஞ்சிகையில் எழுதி யிருக்குஞ் சரித்திரங்களையும், பிரத்தியேகமாகப் பிரகடனஞ்செய்த சில சரித்திரங்களையும், பிறவற்றையும் ஆராய்ந்தேம்.

துணைபுரியுங் குணசீலராய சிலசில உபகாரபுருடர்களையும் பலவாறுய துணைவிரும்பித் தழுவினம். அங்கில திராவிட பண்டித ரும், வித்தியாவிநோதருமாய்ச் சென்னைமாநகரில் வசிக்கும் திரு. த. கனகசுந்தரம்பிள்ளையவர்கள் பற்பல திருத்தங்கள் கொண்டு துணைபுரிந்தார்கள். ஆசிரியகல்லூரித் தமிழ்ப்பண்டிதர் தென்கோ வைக் கந்தையபிள்ளை, புன்னைக் கணேசையர், கொக்குவின் முரு கேசையர், தெல்லிச் சின்னத்தம்பியையர், இளவாலைச் சங்கரப் பிள்ளை, உபாத்தியாயர் வண்ணைக் கிருஷ்ணபிள்ளை என்னும் இவர் களுந் திருத்தமும் பிறவுமாகச் சிலசில துணைபுரிந்தார்கள்.

நல்லூர் உபயவேதாகமபண்டிதர் கனகசபாபதியையரவர்கள் சிலசில தனிநிலைக்கவிகளும், கந்தசாமிப்புலவர், கவிராயபிள்ளை, கந்தப்பையர் என்னும் புலவர்கள் சரித்திரமும், பிறவும் உபகரித் துத் துணைபுரிந்தார்கள். திருவாரூர் இலக்கணவிளக்கப் பரம்பரைச் சோமசுந்தரதேசிகரவர்கள் சோழமண்டல சதகமும், பிறவும் உப கரித்துத் துணைபுரிந்தார்கள். நியாயப்பிரதிநிதி பொன்னம்பலப் பிள்ளை, நாவலர்கோட்டம் வித்துவான் முத்துத்தம்பிப்பிள்ளை என் னும் இவர்களுஞ் சிலசில துணைபுரிந்தார்கள்.

முன்னர்ப் பிரகடனஞ்செய்த நூலுரைகளுட் பல விக்கிரயம் பெற்றுத் தக்க இலாபந் தந்திலவாயினும் உத்தமபுருடர் பலர் அபி மானித்துச்செய்த உபகாரத்தால் அவை மனத்திருத்தியையும் மதிப்பையுந் தந்தனவாயின. அவற்றுள்ளே தண்டியலங்காரப் புத் துரைக்கு உபகரித்தவர், பாலவனத்தம் ஜமீந்தார் பாண்டித்துரைத் தேவரவர்கள். யாப்பருங்கலக்காரிகைப் புத்துரைக்குஉபகரித்தவர், சிதம்பர சைவப்பிரகாசவித்தியாசாலைத் தருமபரிபாலகராயிருந்த சதாசிவப்பிள்ளையவர்கள். அகப்பொருட்புத்துரை முதலியவற்று க்கு உபகரித்தவர், மேற்படி வித்தியாசாலைத் தருமபரிபாலகரா யிருக்கும் பொன்னம்பலப்பிள்ளையவர்கள். இலக்கியச்சொல்லகரா திக்கு உபகரித்தவர், வண்ணைச் சைவப்பிரகாசவித்தியாசாலையின் அத்தியக்ஷர் கைலாசப்பிள்ளையவர்கள்.

நீதிநெறிவிளக்கப்புத்துரைக்கு உபகரித்தவர், கிரிமலைத் தரும மடாலயப்பிரதிட்டாபகர் சிறுப்பு கதிரைவேற்பிள்ளையவர்கள். இலக்கணசந்திரிகைக்கும் இரகுவமிசக்கருப்பொருட்கும் உபகரித்தவர், நீதிபதி கதிரைவேற்பிள்ளையவர்கள். சதாசாரக்கவித்திரட்டுக்கு உபகரித்தவர், கந்தரோடை நியாயப்பிரதிநிதி பொன்னம்பலப்பிள்ளையவர்கள். சாணக்கியசதகம் முதலியவைகட்கு உபகரித்தவர், சோதிட மடாலய பரிபாலகர். முத்தகபஞ்சவிஞ்சதிக்கு உபகரித்தவர், சைவவித்தியாநுபாலன யந்திரசாலைத் தலைவர் சுவாமிநாதபண்டிதரவர்கள். ஏகவிருத்த பாரதாதிக்கும் வினைப்பகுபத விளக்கத்துக்கும் உபகரித்தவர், நாவலர்கோட்டம் வித்துவான் முத்துத்தம்பிப்பிள்ளையவர்கள். ஞானக்கும்மிக்கு உபகரித்தவர், செங்கோட்டைச் சீமான் இலக்குமணப்பிள்ளையவர்கள். மேகதூதக்காரிகைக்கு உபகரித்தவர், சட்டநிரூபணசபைத் தமிழ்ப்பிரதிநிதி கௌரவ கனகசபைப்பிள்ளையவர்கள்.

இப்புலவர்சரித்திரத்தை இனிது நோக்கிப் பெரிது மதித்துப் பெருந்தொகைப்பொருளுபகாரஞ்செய்த பெருமையாளரும் ஒருவருளர். அவரோ ஒரு சாமானியமானவரல்லர்; உத்தமபுருடர்க்குள்ளே உத்தமதரபுருடர். அரும்பொருட்கலையுணர்வும், பெரும்பொருள் வருவாயும், பரம்பொருட் பத்தியும், திரம்பெறு புத்தியும், வரம்பிலவாங் கொடையும், விநய வீரியாதி சகல சுகுணங்களும் பரம்பரையாக நிரம்பப்பெற்றுச் செந்தமிழ்ப்பரிபாலனமுஞ் சைவபரிபாலனமுஞ் செய்துவந்த சேதுபதியரசர் திருமரபினர். அவர்கள்போலக் கலையுணர்வும், பொருள்வருவாயும், பத்தியும், புத்தியும், கொடையும், பிறவும் நிரம்பப் பெற்றுச் செந்தமிழ்ப் பரிபாலனமுஞ் சைவபரிபாலனமுஞ் செய்துவருஞ் சீமான். இராமநாதபுர சமஸ்தானக் கோமான். செந்தமிழபிமானியும், சித்தாந்த சைவப்பிரசங்க சிங்கமும், பெருங்கொடை வள்ளலுமாய் விளங்கிய பாஸ்கர சேதுபதி மஹாராஜாவின் பெருந்தவப் புதல்வர். மதுரைத் தமிழ்ச் சங்கத்தின் அக்கிராசன முதல்வர். "சத்தந் தெளிக்குங் கலைவாணர் சங்கத் தமிழ்க் குருகிச்—சித்தங் களிக்கும்" திருவாளர். ராஜ ராஜேசுவர சேதுபதியரசர் எனப் புலவர் பாடும் புகழாளர்.

புலவர் பாடும் புகழாளர் என்பது மேலும் மேலும் புலப்படப் புலவர் பலர் பாடிப் பிரகடனஞ் செய்த கவிகளை நோக்கி யாமுஞ்

சில கவிகள் செந்தமிழிற் பிரசரித்தாம். அவற்றுள் இருகவிகள் கூறுந் தலைமையை இன்னும் பலரறியப் பின்னுங் கூறுதும்.

ஆசிரியவிருத்தம்.

க. பூவரசு தொழுமரசு ராம நாத
புரவரசு கொடையரசு புகழ்போ யெங்குந்
தாவரசு ராசரா சேசு ரப்பேர்த்
தனியரசு தமிழரசு தக்கோர் சங்கம்
மேவரசு மதுரைநகர்த் தமிழின் சங்க
மேலரசாய் வீற்றிருக்கு மேன்மை தந்த
தேவரசு நான்மாடக் கூடல் வைகுந்
திருவிளையாட் டரசுபதஞ் சென்னி சேர்ப்பாம்.

கட்டளைக்கலித்துறை.

உ. துங்கங் கெழுராச ராசே சுரபதி தொன்மதுரைச்
சங்கம் புரப்பவ னுயினன் கேண்மின் தமிழ்ப்புலவீர்
சங்கம் வளருந் தமிழ்நூல் வளருந் தமிழ்ப்புலவர்
அங்கம் வளருந் தமிழும் வளரு மசைவில்லையே.

தந்தையாராகிய பாஸ்கர சேதுபதிமஹாராஜாவவர்கள் சமுகத்திற் பிரசங்கஞ்செய்தும், பிரபந்தம்பாடியும் புலமையின் வலிமை காட்டிப் பரிசிலும் வரிசையும் பட்டமும் பெற்ற புலவர்களுக்கோர் அளவுமுண்டா! யாழ்ப்பாணப் புலவர்களுட் சபாபதிநாவலர், சிவசம்புப்புலவர் என்னும் இருவரும் பெருந்தொகைப் பரிசில் பெற்றதை மறந்தவர் யாவர்! பரிசிற் கொடைவீரந் தோன்றப் புலவர்கள் பலர் பாடிய பிரபந்தங்களுங் கண்டாம். தனிநிலைக் கவிகளுங் கண்டாம். சேதுசமஸ்தான வித்துவான் ரா. இராகவையங்காரவர்கள் பாடிய "கார்புக்க தோகற்ப கம்புக்கதோ" என்னுங் கவிதையுங் கண்டாம். பாண்டித்துரைத்தேவரவர்கள் பாடிய கவிகளுங் கண்டாம். வாயினுற் கூறிய கவிகளுங் கேட்டாம்.

வெண்பா.

கார்புக்க தோகற்ப கம்புக்க தோவறியேன்
சீர்புக்க பாற்கர சேதுபதி—பேர்நிற்க
ஈத்து மலர்ந்திவ் விருநீர் வரைப்பெல்லாங்
காத்து வளர்ந்தநின் கை.

முருகாநுபூதி, பிரமகைவல்லியம் முதலிய நூல்கள் இயற்றிய முத்துராமலிங்க சேதுபதி, இரணிய கர்ப்ப மஹா * யாஜி ரவிகுல முத்துவிஜய ரகுநாத சேதுபதி முதலிய முன்னோர்களின் தலைமை, புலமை, தகுதி முதலிய பெருமைகள் கூறுங் கவிகளும் கண்டாம். முத்துராமலிங்க சேதுபதியைப் புலவர் ஒருவர் "தனங்கனம்பு ரவி தமிழோர்க் குதவுமுத்து ராமலிங்க தளசிங் கேறே" என்பர். இரகுநாத சேதுபதியை அமிர்தகவிராயர் "மன்னுந் தமிழ்ப்பயிர் வாடாது மாரியிற் பாரின்முத்தும்—பொன்னுஞ் சொரியும் ரகு நாதன்" என்பர். இன்னும் படிக்காசுப்புலவர் "பாதுகாத்துவந்த பார்வேந்தரெல்லாம் போய் மறைந்த பஞ்சகாலத்திற் பாவேந்தருக் குத் தேவேந்திர தாரு வொத்தாய்" என்பர்.

கட்டளைக்கலித்துறை.

மூவேந் தருமற்றுச் சங்கமும் போய்ப்பதின் மூன்றொடெட்டு
கோவேந் தருமற்று மற்றொரு வேந்தன் கொடையு மற்றுப் [க்
பாவேந்தர் காற்றி லிலவம் பஞ் சாகப் பறக்கையிலே
தேவேந்த்ர தாருவொத் தாய்ரகு நாத செயதுங்கனே.

இங்ஙனம் புலவர் பாடும் புகழமைந்த இவர்களை யெல்லாம் தாதை, மூதாதை முதலிய முன்னோர்கள் எனக் கொண்ட ராஜ ராஜேசுவர சேதுபதியரசரவர்கட்குப் புலவர் பாடும் புகழ்பட வாழ்தல் அமையாதொழியுமா? "குலவித்தை—கல்லாமற் பாகம் படும்" என்று முன்றுறையரையனார் கூறிய கூற்றுமுண்டன்றோ! ராஜ ராஜேசுவர சேதுபதியரசரவர்களைப் புலவர்கள் பாடிய மஹா நவ ராத்திரி வாழ்த்துக்கவிகளமைந்த பிரபந்தமுங் கண்டாம். செந் தமிழில் வந்த வாழ்த்துக் கவிகளுங் கண்டாம். கவிகளிலே அரச ரவர்கள் பெருமைகளாயமைந்த திராவிட பரிபாலன தனவிதரண விநய வீரியாதி சகலகுண வருணனைகளுங் கண்டாம். இவ்வருணனை களுட் சிலசில நோக்கி யாம் இயற்றிய கவிகளையுங் கூறுகின்றாம். பிரியதரகாரணமா யெழுந்த கவிகளாதலின் அவைகளும் அரச ரவைக்களத்தில் அங்கீகரிக்கப்படுவனவாகும்.

---

* யாஜி—யாகஞ்செய்தவன். இரகுநாத சேதுபதியரசர் இராமேசுவரத்திலே பத்திலக்கத்தின் மேலே செலவிட்டு இரணிய கர்ப்பயாகம் ஒன்று செய்து முடித்தவர் என்று செந்தமிழில் ஆருந் தொகுதியிற் பத்திராதிபர் கூறுவர்.

2493



கட்டளைக்கலிப்பா.

க. சிதை காவல னுதியி னட்டிய
தேவ ராலயம் போற்றிடுங் காவலன்
நீதி காவலன் தொன்னெறி காவலன்
நீடு முன்னவர் செய்தரு மங்களின்
பாது காவலன் பாவலர் காவலன்
பழைய வைதிக சைவர்கள் காவலன்
சேது காவலன் செந்தமிழ் காவலன்
சீர்த்தி ராஜரா சேசுர மன்னனே.

வாழ்த்துவிருத்தம்.

உ. ஓதுதமிழ்ப் புலவர்சரித் திரமா மிந்நூல்
உயர்ச்சிபெற வுபகரித்த செல்வச் சீமான்
தாதுமலி தளவமலர் மாலை மார்பன்
சயவீர ராசரா சேசுரப் பேர்ச்
சேதுபதி நரபாலன் பலநூல் கற்றோன்
செய்யதமிழ் வளர்க்குமபி மான சீலன்
மாதுபதி ராமேச னருளால் வேண்டும்
வரங்களெல்லாம் பெற்றினிது வாழி மாதோ.

இன்னும் இந்நூலின் பொருட்டுஞ் சுருக்கி எழுதப்பட்டுப் பிரகடனஞ் செய்ய அமைந்திருக்கும் இதோபதேசம் என்னும் நூலின் பொருட்டுந் திரவிய சகாயஞ் செய்த உபகார புருடர்கள் பலருளர். அவர் நாமாதிகளையுங் கூறுவாம்.

---

## உபகார புருடர்கள்.

தேவிகோட்டை. ரூபா.

அரு. அரு. சோம. சோமசுந்தரச்செட்டியாரவர்கள் ... ௫௫

மெ. அரு. நா. இராமநாதச்செட்டியாரவர்கள் ... ... உ0

கொழும்பு.

மு. திருவிளங்கம் அவர்கள், Proctor & Notary ... ... ௫0

| சென்னபட்டணம். | ரூபா. |
| --- | --- |
| வே. மாசிலாமணிப்பிள்ளையவர்கள், Official Referee High Court ... ... | உரு |
| க. அமிர்தலிங்கம்பிள்ளையவர்கள், Personal Assistant to the Post Master General ... | உரு |
| **கொழும்பு.** | |
| Sir. பொ. அருணாசலம் அவர்கள். ... ... ... ... | உ0 |
| கௌரவ. க. பாலசிங்கம் அவர்கள், Advocate ... ... | உ0 |
| கு. ஸ்ரீகாந்தமுதலியாரவர்கள், Litt. D. ... ... ... | க0 |
| க. ஞானசேகரம் அவர்கள், J. P., Shroff ... ... ... | க0 |
| க. நமசிவாயம் அவர்கள், J. P., Shroff ... ... ... | க0 |
| த. சொக்கநாதரவர்கள், Shroff ... ... ... ... | க0 |
| Dr. மு. சின்னத்தம்பியவர்கள், ... ... ... ... | க0 |
| ச. வைத்தியநாதரவர்கள், Tamil Interpreter to the Governor... ... | க0 |
| ச. வேலுப்பிள்ளையவர்கள், Contractor. ... ... ... | க0 |
| ஆ. செல்லமுத்துப்பிள்ளையவர்கள், Broker... ... ... | க0 |
| T. காராளபிள்ளையவர்கள், Broker. ... ... ... | ரு |
| வே. சிற்றம்பலம் அவர்கள்... ... ... ... ... | ரு |
| கா. மதியாபரணம் அவர்கள்... ... ... ... ... | ரு |
| **யாழ்ப்பாணம்.** | |
| கௌரவ. அ. கனகசபைப்பிள்ளையவர்கள், Advocate. ... | க0 |
| வே. சி. பொன்னம்பலப்பிள்ளையவர்கள், Proctor... ... | க0 |
| ச. சபாரத்தினமுதலியாரவர்கள், J. P., Deputy Fiscal... ... | க0 |
| அ. பொன்னம்பலப்பிள்ளையவர்கள், S. D. O., P. W. D. Burma. | க0 |
| வை. சி. சி. குமாரசுவாமிப்பிள்ளையவர்கள், B. A. ... ... | க0 |
| வை. துரைச்சாமிப்பிள்ளையவர்கள், Advocate. ... ... | ரு |
| சு. இராஜரத்தினப்பிள்ளையவர்கள், Advocate. ... ... | ரு |
| சு. கனகசபைப்பிள்ளையவர்கள், Advocate... ... ... | ரு |
| ச. இளையதம்பிப்பிள்ளையவர்கள், Advocate. ... ... | ரு |
| தா. பொன்னம்பலப்பிள்ளையவர்கள், Pensioner, Travancore State ... ... | ரு |
| வ. குமாரசுவாமிப்பிள்ளையவர்கள், Proctor. ... ... | ரு |

| யாழ்ப்பாணம். | ரூபா. சதம். |
|---|---|
| க. தம்பையாபிள்ளையவர்கள், Proctor. ... ... | ரு |
| சு. கதிரேசப்பிள்ளையவர்கள், Proctor. ... ... | ரு |
| ஆ. கதிரைவேற்பிள்ளையவர்கள், Proctor, J. P. & U. P. M. | ரு |
| வே. முதலியார். முத்துவேற்பிள்ளையவர்கள், Landed Proprietor... | ரு |
| இ. குமாரகுலசிங்கம் அவர்கள், Maniagar, Valigamam North | ரு |
| செ. இராசநாயகம் அவர்கள், Secretary, District Court... | ரு |
| க. நல்லதம்பிப்பிள்ளையவர்கள், Superintendent, Forest Office, Rangoon ... | ரு |
| சி. செல்வத்துரைப்பிள்ளையவர்கள், Principal, Hindu College... | ரு |
| ச. சபாபதிப்பிள்ளையவர்கள், Notary. ... ... | ரு |
| தி. சிவசிதம்பரப்பிள்ளையவர்கள், Notary... ... | ரு |
| மு. தம்பிப்பிள்ளையவர்கள், Sub-collector, Customs | ரு |
| வே. ச. நாகலிங்கப்பிள்ளையவர்கள், தமிழ் மாணவகர் | ரு |
| சு. குமாரசுவாமிப்பிள்ளையவர்கள் ... ... ... | ரு |

கடாரம்.

| | |
|---|---|
| P. Samson Udayar Avl., Advocate... ... ... | ரு |

பினங்கு.

| | |
|---|---|
| M. Jamaludin Sahib Avl... ... ... ... | ரு |

யாழ்ப்பாணம்.

| | |
|---|---|
| அ. அம்பலவாணரவர்கள், Proctor ... ... | உ—ரு0 |
| R. R. நல்லையபிள்ளையவர்கள், Proctor ... ... | உ—ரு0 |
| சி. தம்பையபிள்ளையவர்கள், Proctor ... ... | உ—ரு0 |
| Dr. சு. ஆறுமுகம்பிள்ளையவர்கள் ... ... ... | உ—ரு0 |
| ச. துரையப்பாப்பிள்ளையவர்கள், Notary... ... | உ—ரு0 |
| சி. வை. சின்னப்பாப்பிள்ளையவர்கள், Pensioner ... | உ—ரு0 |
| நா. கதிரவேலுப்பிள்ளையவர்கள், Post Master, Chunnakam... | உ—ரு0 |

இவர்களெல்லாம் தமிழுணர்ச்சியும், தமிழபிமானமுந் தக்க செயல்களிற் பொருளுபகரிக்கும் வன்மையுமுடையவர்கள். இவருட் பலர் அங்கில தேசிக மொழியுணர்ச்சியுமுடையவர். உத்தியோக புருடலக்கணமுமுடையவர். தனித்தனி விரித்து நம்மாற் புகழப்படுந் தகுதியுமுடையவர். இந்த உபகார புருடர்களும் சிந்தித மனோரத சித்திகள் பெறும்பொருட்டுச் சிவபிரான் திருவருள் புரிக. எச்செயலையும் உயிர்க்குயிராய்நின்று முடித்தருளுந் தற்பர மஹாதேவ குணாதீத கருணாமய பரசிவ விசுவமூர்த்தியை மன மொழி மெய்களாலே நினைத்துத் துதித்து வணங்குகின்றாம்.

### வேதசாரசிவத்துதி.

𑌨𑌮𑌸𑍍𑌤𑍇 𑌭𑌗𑌵𑌨𑍍 𑌵𑌿𑌭𑍋 𑌵𑌿𑌶𑍍𑌵𑌨𑌾𑌥
𑌮𑌹𑌾𑌦𑍇𑌵 𑌶𑌂𑌭𑍋 𑌮𑌹𑍇𑌶 𑌤𑍍𑌰𑌿𑌨𑍇𑌤𑍍𑌰 ।
𑌶𑌿𑌵𑌾 𑌕𑌾𑌨𑍍𑌤 𑌶𑌾𑌨𑍍𑌤 𑌸𑍍𑌮𑌰𑌾𑌰𑍇 𑌪𑍁𑌰𑌾𑌰𑍇
𑌤𑍍𑌵𑌦𑌨𑍍𑌯𑍋 𑌵𑌰𑍇𑌣𑍍𑌯𑍋 𑌨𑌮𑌾𑌨𑍍𑌯𑍋 𑌨𑌗𑌣𑍍𑌯𑌃 ॥

(இ—ள்) சூலபாணியே! எங்கும் நிறைந்தவரே! மஹாதேவரே! மகேசரே! முக்கண்ணரே! உமாதேவிக்கு நாயகரே! சாந்தமுடையவரே! காமாரியே! புராரியே! உமக்கு நமஸ்காரம். உம்மினும் சிரேட்டரில்லை! பூசிக்கத் தக்கவரும் இல்லை. கணிக்கத்தக்கவரும் இல்லை (நீரே கணித்து வழிபடற்குரிய சிரேட்டர். எமக்கு அருள்புரிக) எ-று.

### தேவாரம்.

வாழ்க வந்தணர் வானவ ரானினம்
வீழ்க தண்புனல் வேந்தனு மோங்குக
ஆழ்க தீய தெல்லா மர னாமமே
சூழ்க வையக முந்துயர் தீர்கவே.

சுன்னாகம்:
நள ௵
கார்த்திகை ௴.

அ. குமாரசுவாமிப்பிள்ளை.

---

† உபக்கிரமணிகை என்பது உபந்யாசம், பிரதமாரம்பம், முகபந்தனம், ஆமுகம் எனவும், தமிழ்மொழியிலே முகவுரை, பாயிரம் எனவுஞ் சொல்லப்படும்.

# சுத்திபத்திரம்.



| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| ௧௫ | ௮ | சுந்தர னென்றனே. | சுந்தரனென்றெனே. |
| ௩௨ | ௩௧ | கடநாதா | கடனாதா. |
| ௪௦ | ௧௧ | நீதி. | நீதி. |
| ௭௦ | ௭ | காரர் | காரர். |
| ௧௨௮ | ௧௯ | உணாந்தவர் | உணர்ந்தவர். |
| ௧௩௪ | ௫ | வித்துவான் | சேதுசமஸ்தானவித்துவான். |
| ௧௩௧ | ௩௦ | தொண்டை | சோழ |
| ௧௪௪ | ௧௫ | வேற்றங்கள் | வேறறங்கள். |
| ௧௫௦ | ௭ | ராச | ராசா |
| ,, | ௮ | குவலாயனந்தம் | குவலயானந்தம். |
| ,, | ௧௦ | ,, | ,, |
| ௧௮௭ | ௨௫ | திபனாறு | பதினாறு |



## அருஞ்சொற்பொருள்.

| | | | |
|---|---|---|---|
| ௩ | ௧௭ | விட்டுணுவின்சங்கு. | விட்டுணுவின்தண்டாயுதம். |



## உபக்கிரமணிகை.

| | | | |
|---|---|---|---|
| ௮ | ௧௧ | நமதே | தமதே |



சிவமயம்.

# தமிழ்ப்புலவர்சரித்திரம்.

## அகத்தியனார்.

அகத்தியனார் பொதியமலை வாசர். காசியினின்றும் வந்தவர். சிவபிரானிடத்தும், முருகபிரானிடத்துந் தமிழ்மொழியைக் கற்றவர். தமிழ்மொழிக்கு இலக்கணவரம்புசெய்து தென்னாட்டிற் பரப்பிய செந்தமிழ்க்குரவர். "தமிழெனு மளப்பருஞ் சலதி தந்தவன்" என்றும், "தழற்புரை சுடர்க்கடவு டந்ததமிழ் தந்தான்" என்றும் இராமாயணகாரர் கூறுவர். பலவித கலைகளும் அறிந்தவர். "அருமறை யாகம மருங்கலை நாறெரிந்த அகத்தியன்" என்று அருணந்திசிவாசாரியர் கூறுவர். தலைச்சங்கத்திலும் இடைச்சங்கத்திலும் வீற்றிருந்து தமிழ்மொழி ஆராய்ந்த தலைமைப்புலவர். தொல்காப்பியர், அதங்கோட்டுமுனிவர், பனம்பாரனார், அவிநயனார் முதலிய பன்னிருவருக்குந் தமிழாசிரியர்.

காஞ்சிப்புராணம்.

காசியி னின்று போந்து கம்பர்தா மருளப் பெற்று
மாசிலாக் கச்சி மூதூர் மன்னிவீற் றிருந்து பூமேல்
ஆசிலாத் தமிழ்ப ரப்பி யருந்தமிழ்க் குரவு பூண்ட
தேசினன் மலய வெற்பிற் குறுமுனி திருத்தாள் போற்றி.

இவர் தமிழ்முனி எனவும் படுவர். இயல், இசை, நாடகம் என்னும் முத்தமிழிலக்கணங்களையும் விரித்து விளக்கித் தமிழ்மொழிக்கோர் இலக்கணஞ் செய்தவர். அதன் பெயர் அகத்தியம். அது, முதல் இடை கடை என்னும் சங்கம் மூன்றிலும் இலக்கணமாயிருந்தது. அகத்தியமன்றி வேறும் பலவகை நூல்கள் செய்தவர் என்றும், வடமொழியிலுஞ் சிலநூல்கள் செய்தவர் என்றுங் கூறுவர். அகத்தியமொன்றே மகத்துவமுடையது. அகத்தியம் முற்றச் சிதைந்தொழிந்தது என்பர். தொல்காப்பிய இளம்பூரணவுரை, இலக்கணவிளக்கவுரை, நன்னூல்விருத்தியுரை, வேதகிரிமுதலியார்

எழுதிய இலக்கணக்களஞ்சியம் முதலியவற்றிற் சிலசில சூத்திரங்கள் அகத்தியம் என்று பெயருங் காட்டி எழுதப்பட்டிருக்கின்றன. அவை அகத்தியச் சூத்திரங்களல்ல என்பார் பலர். ஆயினுங் கற்பவர்பொருட்டுச் சில சூத்திரங்களை இங்கே எழுதுவாம்.

இலக்கணலக்கியம்.

க. பூவினுள் வாசம் பொருந்துதல் போல
இலக்கண விலக்கிய மியைபுடைத் தாகும்.

இலக்கணம்.

௨. இலக்கண மென்ப திலக்கிய முறையுற
வைத்த தென்று வழங்கப் படுமே.

௩. இலக்கிய மின்றி யிலக்கண மின்றே
எள்ளின் றாகி லெண்ணெயு மின்றே
எள்ளினின் றெண்ணெ யெடுப்பது போல
இலக்கியத் தினின்றே யெடுபடு மிலக்கணம்.

இலக்கியம்.

௪. இலக்கிய மென்ப திலக்கணச் சான்றாய்
வழங்கியவ் விலக்கண மயங்கிய தாமே.

அளபெடை.

௫. அவையே;—
இயற்கை செயற்கை யின்னிசை சொல்லிசை
நெடில்குறி லொற்றாயி ரெழுத்துப்பே றளபெடை.

இயற்கையளபெடை இசை, விளி, பண்டமாற்று முதலியவற்றில் வருவது. செயற்கையளபெடை சீருந்தளையும் வேண்டுமிடத்துப் புலவனாற் செய்துகொள்ளப்படுவது. இன்னிசையளபெடை இனிய இசைகாரணமாக வருவது. சொல்லிசையளபெடை சொல்லின் இசைகெடாமை காரணமாக நசைஇ என்பதுபோல வருவது. எழுத்துப்பேறளபெடை காரணமின்றி அளபெடைபோன்று எழுத்துத்தோன்றி நிற்பது. உ-ம். அராஅப்பாம்பு.

சொல்லிலக்கணம்.

௬. வயிர வூசியு மயன்வினை யிரும்புஞ்
செயிரறு பொன்னைச் செம்மைசெய் யாணியும்
தமக்கமை கருவியுந் தாமா மவைபோல்
உரைத்திற முணர்த்தலு முரையது தொழிலே.

## வேற்றுமை.

எ. எழியன் முறைய தெதிர்முக வேற்றுமை
வேறென விளம்பான் பெயரது விகாரமென்
றோதிய புலவனு முளனொரு வகையால்
இந்திர னெட்டாம் வேற்றுமை யென்றனன்.

## மெய்ப்பாடு.

அ. மெய்ப்பாட் டியல்வகை மேதக விரிப்பின்
மெய்க்கட் பட்டு விளங்கிய தோற்றம்
செவ்விதிற் றெரிந்து செப்பின்மற் றதுவே
சுப்பிர யோகம் விப்பிர யோகம்
சோக மோக மரண மென்னும்
ஐவகைக் கணையு ளாக்கிய காமம்
பைய முறுகிடப் படரு மவற்றுட்
சுப்பிர யோகஞ் சொல்லு நினைப்பும்
விப்பிர யோகம் வெய்துயிர்ப் புறுதல்
சோகம் வெப்புஞ் சோறுண் ணாமையும்
மோகம் மயக்கமு மொழிபல பிதற்றலும்
மரண மணங்கலும் வருந்தலு மென்பர்
அரணஞ் சான்ற வறிவி னோரே.

## அகமெய்ப்பாடு.

௯. அகமெய்ப் பாடே யறையுங் காலை
விளர்ப்பே பசப்பே மெலிவே விதிர்ப்பே
துளக்கந் துயர்த றும்மல் சோர்தல்
வேர்த்தல் வெருவுதல் விம்முதல் விரும்புதல்
ஒப்பி லாமை யுருகுதன் மயங்கல்
மூரி யுயிர்ப்பு மூர்ச்சனை முறுவல்
காரிகை கடத்தல் கழிகண் ணோட்டம்
இருந்துழி யிராமை யிராக மிகழ்தல்
வருந்திக் காட்டுதல் வாய்நனி யுறுதல்
சிந்தனை கூர்தல் சேர்துயி லின்மை
கண்டது மறுத்தல் காட்சி விரும்பல்
உண்டி விரும்பாமை யுரைத்தது மறுத்தல்
கண்ணீர் வழிதல் கனவுநனி காண்டலென
எண்ணாற் றுறையு மென்மனார் புலவர்.

புறமெய்ப்பாடு.

க0. புறமெய்ப் பாட்டைப் புகலுங் காலை
நற்சிருங் கார நகையே வியப்பே
அச்சம் வீர முட்கோ ளிரக்கம்
இழிவெனத் தோன்றின விவ்வகை யெட்டும்
ஒவ்வொன்று நான்கா யுறழ்ந்திட வவைதாம்
முப்பா னிரண்டென மொழிந்தனர் புலவர்.

சிருங்காரம்.

கக. அவற்றுள்;
இளமையும் வனப்பும் வளமையுங் கல்வியுங்
களனுத் திரிதருஞ் சிருங்கா ரம்மே.

நகை.

க௨. மயக்கம் பெயர்ப்பே யிகழ்வே நோக்கம்
நயப்பத் தோன்று நகையது நலனே.

வியப்பு.

க௩. நறுகண்மை புலமை பொருளே பண்பே
பெறுவழித் தோன்றும் பெருந்தகு வியப்பே.

அச்சம்.

க௪. சீற்ற மொடுங்கல் சிந்தை கலங்கல்
மாற்றலர் விலங்கு மற்றவர்ச் சேர்தல்
ஆற்றத் தோன்று மச்சத்தின் விளைவே.

வீரம்.

க௫. பகையே செருவே யிகலே முனிவே
மிகுவழித் தோன்றும் வீரத்தின் விளைவே.

உட்கோள்.

க௬. ஐவகைக் குரவர் தேவர் மன்னர்
எய்தா தெய்திய வியல்பவை யுட்கோள்.

இரக்கம்.

க௭. வருத்த மிகழ்வே வலியின்மை பெருமை
இரக்கந் தோன்று மிந்நா லிடத்தே.

இழிவு.

க௮. நாற்றஞ் சுவையே தோற்ற மூறென்
றிந்நால் வகைத்தா மிழிவெனப் படுமே.

## கலிப்பாவிலக்கணம்.

கக. இருவயி னோர்க்கு மொவ்வா வியலினும்
தெரியிழை மகளிரொடு மைந்த ரிடைவரூஉம்
கலப்பே யாயினும் புலப்பே யாயினும்
ஐந்திணை மரபி னறிவரத் தோன்றிப்
பொலிவொடு புணர்ந்த பொருட்டிற முடையது
கலியெனப் படூஉங் காட்சித் தாகும்.

## இதுவுமது.

உ0. தரவே யெருத்த மராகங் கொச்சகம்
அடக்கியல் வகையோ டைந்துறுப் புடைத்தே.

## அராகம்.

உக. அராகந் தாமே நான்கா யொரோவொன்று
வீதலு முடைய வீரிரண் டடியே.

---

## திரவியலக்கணம்.

## பிருதிவி.

உஉ. மண்ணிடத் திருப்பன தாவர சங்கமமே.

## அப்பு.

உந. புனலிடத் திருப்பன சலசரம் முதலிய.

## தேயு.

உச. அனலிடத் திருப்பன புகைசுடர் முதலிய.

## வாயு.

உரு. காலிடத் திருப்பன விருகந்தம் முதலிய.

## ஆகாயம்.

உசா. விண்ணிடத் திருப்பன விண்மணி மதிமுதல்.

## காலம்.

உஎ. காலக்க ணிருப்பன கோடைகுளிர் மாரிமுதல்.

## திக்கு.

உஅ. திசையிடத் திருப்பன கடன்மலை முதலிய.

## உயிர்.

உகூ. உயிரிடத் திருப்பன வுயர்ஞானம் முதல்.

## மனம்.

ந0. மனத்திடத் திருப்பன வாடல் பாடல்பிற.

---

## அதிமதுரகவிராயர்.

இவர் திருமலைராயன்சவையில் வீற்றிருந்த புலவர்களுள்ளே தலைவர். சுவையதிகம் பயக்குங் கவிபாடுந் திறத்தால் அதிமதுரகவி எனப்பட்டவர். காளமேகப்புலவர் திருமலைராயன் சவையிற் கவி பாடி வந்து வீரங் கூறியபோது தமது வீரத்தையும் ஒரு கவியாற் கூறினவர். காராமணி என்பதற்குப் பிரதியாகக் கார் - மேகம். ஆ - பசு. மணி - இரத்தினம் எனக்கொண்டு காளமேகப்புலவர் வாசஞ்செய்த கடைச்சாலையிலே "மேகமும் பசுவும் இரத்தினமும் விலைக்கு வாங்கி வருக" என ஒருவனை விட்டவர். கடைவியாபாரி காளமேகப்புலவராற் "காராமணிப் பயறு" என்று தெரிந்து காரா மணிப்பயறு அனுப்பப் பெற்றவர்.

வெண்பா.

மூச்சு விடுமுன்னே முந்நூறு நானூறும்
ஆச்சென்று லைந்நூறு மாகாதோ—பேச்சென்ன
வெள்ளைக் கவிக்காள மேகமே யுன்னுடைய
கள்ளக் கவிக்கடையைக் கட்டு.

---

## அதிவீரராமபாண்டியர்.

இவருடைய இராசதானி பாண்டிமண்டலத்திலே திருநெல் வேலியின் தென்கரையிலுள்ள கொற்கைமாநகரி. குலம் பாண்டிய ராசகுலம். சமயம் சைவம். காலம் இற்றைக்கு ஐந்நூறு வருடத் துக்கு முன் என்பர். இவர் சிவகசிந்தாமணி, கம்பராமாயணம் முத லிய காப்பியங்களிலே நற்பயிற்சியுடையவர் என்பது இவரியற்றிய பிரபந்தங்களாலே இனிது விளங்குகின்றது. இவரியற்றிய பிரபந் தங்கள் நைடதம், கூர்மபுராணம், காசிகண்டம் முதலியன. "நைட தம் புலவரவுடதம்" என்பர். நைடதத்திலே வரும் "முல்லையங் கோதை நல்லார்" என்ற கவியையும், இராமாயணத்தில் வரும் "தோ யும் வெண்டயிர்" என்ற கவியையும் நோக்குக. வருணனையால் இரண்டும் ஒன்றே என்பது புலப்படும்.

நைடதம்.

முல்லையங் கோதை நல்லார் முகமதி வெயர்வு தோன்ற
வல்விறன் மருக்கு ளேவ வால்வளை வாய்விட் டார்ப்ப
மெல்விரற் காந்தள் சேப்ப வெண்டயிர் கடையு மோதை
கொல்புலி முழக்க மென்ன வயின்றொறுங் குளிறு மாதோ.

இராமாயணம்.

தோயும் வெண்டயிர் மத்தொலி துள்ளவும்
ஆய வெள்வளே வாய்விட் டரற்றவும்
தேயு நுண்ணிடை சென்று வணங்கவும்
ஆயர் மங்கைய ரங்கை வருந்துவார்.

இங்கே வந்த "வெண்டயிர் கடையு மோதை—கொல்புலி முழக்க மென்ன வயின்றெறுங் குளிறு மாதோ" என்பதையும், சீவகசிந்தாமணியிலே வரும் "கடைதயிர்க்குரலவேங்கை" என்பதையும் நோக்குக. வேங்கை - புலி. இன்னும் இந் நைடதத்திலே வரும் "கொங்கு விம்மு கோதை" "மயிர் வாய்ச் சிறுகட் பிடி" என்பவைகளையுஞ், சீவகசிந்தாமணியிலே வரும் "கொங்கு விம்மு கோதை" "மயிர் வாய்ச் சிறுகட் பெருஞ் செவி" என்பவைகளையும் நோக்குக. வருணனையால் ஒன்றுதல் நன்கு புலப்படும்.

---

## அந்தகக்கவிவீரராகவமுதலியார்.

இவருடைய பிள்ளைத்திருநாமம் வீரராகவமுதலியார். குருடரும், புலவருமாதல்பற்றி அந்தகக் கவி என விசேடிக்கப்பட்டார். அந்தகர் - குருடர். கவி - புலவர். இவரூர் தொண்டைமண்டலத்துள்ள பொற்களத்தூர். கச்சியப்பர் பூதூர் என்பர். தந்தையார் வடுகநாத முதலியார். சமயம் சைவம். குலம் வேளாளர் குலம். காலம் ஏறக்குறைய இற்றைக்கு இருநூற்றெண்பது வருடங்களுக்கு முன் என்பர். இவர் "ஏடாயிரங்கோடி யெழுதாது தன் மனத் தெழுதிப் படித்த விரகர்." அவதானத்திலுங் கவிபாடுந் திறத்திலுஞ் சிறந்தவர். பாதேயத்தை நாய் கவர்ந்தோடியபோது "சீராடை" என்ற தனிநிலைக்கவி பாடினவர். அப்பொழுதை அரசர் சிலர் மீதும், பிரபுக்கள் சிலர் மீதும் பலவகைக் கவிகள் பாடிப் பலவகைப் பரிசில்களும் பெற்றவர்.

யாழ்ப்பாணம் வந்து பரராசசேகரமன்னன் முன்னிலையிலே வண்ணக்கவி அரங்கேற்றிப் பொன்னின்பந்தம், மத்தயானை முதலிய உத்தமப் பரிசில்களும் பெற்றவர். பரிசி லீந்த பெருமையைப் பாராட்டிக் கவிகளுஞ் சொற்றவர். இப் பெருமையை "ஈழ மண்டல மளவுந் திறைகொண்ட கவிவீர ராகவன் விடுக்கு மோலை" என்று பின்னெரு சீட்டுக் கவியிலுஞ் சுட்டிச் சொன்னவர். பரிசில்களன்றி மன்னன் பாடிய துதிகவிகளும் பெற்றவர். விற்பிடித்து மன்னன்

நின்றபோது வெண்பா ஒன்று சொற்றவர். சேயூர்முருகன்பிள்ளைத்தமிழிலே "ஐயதென்கதிர்காமமென்னுமலைமுதலாய" என்று கதிர்காமத்தையும் புகழ்ந்தவர். இவர் இயற்றிய பிரபந்தங்கள் கழுக்குன்றப்புராணம், கழுக்குன்றமாலை, சந்திரவாணன்கோவை, திருவாரூருலா, சேயூர்முருகன்பிள்ளைத்தமிழ், சேயூர்க்கலம்பகம், கயத்தாற்றரசனுலா முதலியன.

ஆசிரிய விருத்தம்.

பொங்குதமி ழயோத்திவாழ் தசரதனென் போனிடத்தும் பூதூர் வேந்தன்
றுங்கவடி கன்னிடத்தும் வீரரா கவரிருவர் தோன்றி னரால்
அங்கொருவ னொருகலைமா னெய்திடப்போய் வசைபெற்று னவனி பாலன்
இங்கொருவன் பலகலைமா னெய்திடப்போய்க் கவியினலிசைபெற் றானே.

இக்கவி காஞ்சிபுரத்திலே தம்மொடு கற்குங் காலத்திலே கச்சியப்பர் பாடிய கவி என்பர். வீரராகவர் என்பது கவிவீரராகவருக்கும் இராமபிரானுக்கும் பொதுவாய் நின்றது. கலைமான் - ஆண்மான், சரசுவதி. அவனிபாலன் - அரசன்.

கட்டளைக்கலித்துறை.

சீராடை யற்ற வயிரவன் வாகனஞ் சேரவந்து
பாராரு நான்முகன் வாகனந் தன்னைமுன் பற்றிக்கவ்வி
நாரா யணனுயர் வாகன மாயிற்று நம்மைமுகம்
பாரான்மை வாகனன் வந்தே வயிற்றினிற் பற்றினனே.

இது பாதேயத்தை நாய் கவர்ந்தோடியபோது பாடியது என்பர். பாதேயம் - வழியுணவு. வயிரவன் வாகனம் - நாய். நான்முகன் வாகனம் - அன்னம்; சோறு. நாராயணன் வாகனமாயிற்று - கருடனாயிற்று; பறந்தது. மைவாகனன் - அக்கினி. மை - ஆடு.

வெண்பா.

பொங்குமிடி யின்பந்தம் போயதே யென்கவிதைக்
கெங்கும் விருதுபந்த மேற்றதே—குங்குமந்தோய்
வெற்பந்த மானபுய வீரபர ராசசிங்கம்
பொற்பந்த மின்றளித்த போது.

இது பொற்பந்தங் கொடுத்தபோது பாடியது என்பர். மிடி - வறுமை. பந்தம் - தொடர்ச்சி. விருதுபந்தம் - வெற்றிவிளக்கு. பொற்பந்தம் - பொற்கிழி.

விருத்தம்.

க. வீரகன் முத்தமிழ் வீர ராகவன்
வரகவி மாலையை மதிக்கும் போதெலாம்
உரகனும் வாணனு மொப்பத் தோன்றினுற்
சிரகர கம்பிதஞ் செய்ய லாகுமே.

இது வண்ணக் கவி சொன்னபோது மன்னன் பாடியது என்பர். விரகன் - நிபுணன். உரகன் - ஆதிசேடன். வாணன் - மாவலி மகன். சிரகம்பிதஞ் செய்ய ஆயிரந்தலையுடைய ஆதிசேடனும், கர கம்பிதஞ் செய்ய ஆயிரங் கரமுடைய வாணாசுரனும் வேண்டும் என்க. கம்பிதம் - அசைத்தல்.

கட்டளைக்கலித்துறை.

உ. இன்னங் கலைமகள் கைம்மீதிற் புத்தக மேந்தியந்தப்
பொன்னம் புயப்பள்ளி புக்கிருப் பாளென்ன புண்ணியமோ
கன்னன் களந்தைக் கவிவீர ராகவன் கச்சியிலே
தன்னெஞ்ச மேடெனக் கற்றா ளொருமுத் தமிழையுமே.

இது முதலியார் வாய்ப்பாடமாக இராமாயணக் கவிகள் சொல்லி உரைப்பிரசங்கஞ் செய்தபோது மன்னன் பாடியது என்பர். அம்புயப்பள்ளி - தாமரைச்சேக்கை.

வெண்பா.

வாழு மிலங்கைக்கோ மானில்லை மானில்லை
ஏழு மராமரமோ வீங்கில்லை—ஆழி
அலையடைத்த செங்கை யபிராமா வின்று
சிலையெடுத்த வாறெமக்குச் செப்பு.

இது மன்னன்கையிலே வில்லும் அம்புங் கொடுத்துவிட்டு மன்னன் கோலம் எவ்வாறு என்று மந்திரிமார் சிலர் வினவிய போது முதலியார் பாடியது என்பர்.

கழுக்குன்றமாலை.

மாடேறு தாளு மதியேறு சென்னியு மாமறையோன்
ஓடேறு கையு முடையார் தமக்கிட மூருழவர்
சூடேறு சங்கஞ் சொரிமுத்தை முட்டையென் றேகமலக்
காடேறு மன்னஞ் சிறகா லணைக்குங் கழுக்குன்றமே.

சந்திரவாணன்கோவை.

மாலே நிகராகுஞ் சந்திர வாணன் வரையிடத்தே
பாலேரி பாயச்செந் தேன்மாரி பெய்யநற் பாகுகற்கண்
டாலே யெருவிட முப்பழச் சாற்றி னமுதவயன்
மேலே முளைத்த கரும்போவிம் மங்கைக்கு மெய்யெங்குமே.

---

# அநதாரியப்பர்.

இவரூர் தொண்டைமண்டலத்துள்ள வாயல் என்னுமூர். தொண்டைமண்டல சதககாரரும் "வண்டமிழ்க் கும்ப னநதாரியுந் தொண்டைமண்டலமே" என்பர். சமயம் சைவம். கம்பன் என்னும்

வெண்பாவாற் புனைந்துரைக்கப்பட்ட புலமையாளர். கல்லூர் அதிபனுயிருந்த திருவிருந்தவன் விரும்பியவாறே வடமொழிக்கணுள்ள சுந்தரபாண்டியம் என்னும் மதுரைமான்மியத்தைச் செந்தமிழிற் பெயர்த்து விருத்தயாப்பில் யாத்தவர். அதனை அவ்வதிபன் முன்னிலையிலே அறுகாற் பீடத்திலிருந்து அரங்கேற்றினவர்.

வெண்பா.

கம்பனென்றுங் கும்பனென்றுங் காழியொட்டக் கூத்தனென்றுங்
கும்பமுனி யென்றும்பேர் கொள்வாரோ—அம்புவியில்
மன்னு வலர்பரவும் வாயலந் தாரியப்பன்
அக்காளி லேயிருந்தக் கால்.

சுந்தரபாண்டியம்.

மதுரை நாயகன் சுந்தர பாண்டிய வடநூற்
கதிரு லாமணி யாறுகாற் பீடத்திற் கல்லூர்
அதிப னுந்திரு விருந்தவ னவையினில் வாயற்
பதியில் வாழந் தாரிசெந் தமிழினிற் பகர்ந்தான்.

---

## அபிராமிபட்டர்.

இவரூர் சோழமண்டலத்துள்ள திருக்கடவூர். குலம் வேதியர் குலம். சமயம் சைவம். இவர் தேவி வழிபாட்டிற் சிறந்தவர். தஞ்சைச் சரபோசி மகாராசாவுக்கு அமாவாசியைப் பௌர்ணிமை என்று தாங் கூறியதைச் சாதிக்கும்பொருட்டு உமாதேவியைப் பிரார்த்தித்துக் கீழே வெட்டிய குழியிலே நெருப்பெரியவிட்டு மேலே தூக்கிய நூறு வடங்கொண்ட உறியொன்றிலே ஏறியிருந்து "அபிராமி தேவி அருளாதொழியின்; அக்கினியில் வீழ்வேன்" என்று வஞ்சினங் கூறி அபிராமியம்மைமீதில் அந்தாதி ஒன்று பாடத் தொடங்கிப் பாடுகையில் ஒரு கவி முடிவில் ஒரு வடமாக உறியின் வடங்களையும் அறுத்துவந்தவர். "விழிக்கே யருளுண்டு" என்னுங் கவியும் முடியத் தேவியும் வெளிப்பட்டுக் காதுத் தோடுகளுள் ஒன்றைக் கழற்றி ஆகாசத்தில் வீசிப் பௌர்ணிமை காட்டப் பெற்றவர் என்பர். பின்னர்த் தேவியின் கருணையைப் பாராட்டி மற்றைக் கவிகளையும் முடித்தவர். இவ்வந்தாதி அபிராமியந்தாதி எனப்படும். பாராயணஞ்செய்வோர்க்குப் பரபத்தியும், வரசித்தியுங் கொடுக்கும். சந்தவின்பமும் பொருட்சுவையுமுடையது.

அபிராமியந்தாதி.

விழிக்கே யருளுண் டபிராம வல்லிக்கு வேதஞ்சொன்ன
வழிக்கே வழிபட நெஞ்சுண் டெமக்கவ் வழிகிடக்கப்
பழிக்கே சுழன்றுவெம் பாவங்க ளேசெய்து பாழ்நரகக்
குழிக்கே யழுந்துங் கயவர்தம் மோடென்ன கூட்டினியே.

---

## அம்பலவாணபண்டிதர்.

இவரூர் யாழ்ப்பாணத்துள்ள தெல்லிப்பழை. குலம் வேளாளர் குலம். சமயம் சைவம். காலம் இற்றைக்கு முப்பத்தேழு வருடங்களுக்கு முன். இவர் கோப்பாய் அருளம்பலமுதலியாருக்கு மைந்தர். சேனாதிராயமுதலியாருக்கு மாணவகர். தமிழ்மொழியிற் பலநூல்களுங் கற்றவர். பாரதம், இராமாயணம், இரகுவமிசம் முதலிய பெருங்காப்பியங்களிலும், கோவை, அந்தாதி, உலா முதலிய பலவகைச் சிறுகாப்பியங்களிலும் பெரும்பயிற்சியுடையவர். காவிய சாத்திர விநோதத்தாற் பெரிதுங் காலங் கழித்தவர். சேனாதிராய முதலியார் பாடிய நல்லைவெண்பா, நீராவிக்கலிவெண்பா என்பவைகளைப் பரிசோதித்து அச்சிட்டவர். இவருடைய கல்விப்பெருமை, செல்வப்பெருமை, சிவபத்தி, வாக்குவன்மைமுதலியவைகளை இவர் மீது சி. வை. தாமோதரம்பிள்ளை பாடிய சரமகவிகள் இனிது விளக்கும். அவற்றுள்ளும் ஒன்று காட்டுதும்.

வெண்பா.

தெல்லி நகரந் திருவிழந்த தோதமிழ்மா
தில்லந் தனையின் றிழந்தாளோ—சொல்லரிய
வித்தார வாய்மை விறலம் பலவாணன்
செத்தானென் றூரோ சிவா.

---

## அம்பிகாபதி.

இவர் கவிச்சக்கரவர்த்தியாகிய கம்பருடைய புத்திரர். கல்வி கற்றுக் கவிபாடுந்திறமும்பெற்றவர். குலோத்துங்கசோழமகாராசாவின் சமஸ்தானவித்துவானாயும் இருந்தவர் என்பர். கம்பராமாயணத்துக்குச் "சம்புநாள்" என்ற பாயிரங் கொடுத்தவர். அம்பிகாபதிக்கோவை பாடினவரும் இவர் என்பர். தமிழில் அலங்காரஞ் செய்த தண்டியின் பிதாவும் இவர் என்பர்.

இராமாயணப்பாயிரம்.

சம்ப நாடன் னுமைசெவி சாற்றுபூங்
கொம்ப னுடன் கொழுந னிராமப்பேர்
பம்ப நாடழைக் குங்கதை பாச்செய்த
கம்ப நாடன் கழறலை யிற்கொள்வாம்.

சம்பு அநாள் தன் - சிவன் அக்காலத்திலே தன்னுடைய. பூங்கொம்பு அனாள் - பூங்கொம்புபோன்றவளாகிய சிதை. உமை செவி சாற்றிய இராமகதை அத்தியாத்துமராமாயணம்.

அம்பிகாபதிக்கோவை.

கனமே கருங்குழல் கங்குலன் றேசண் கருவிளையின்
இனமே குவளையு நெய்தலு மல்ல விவர்க்கிடையென்
மனமே வளரிள வஞ்சியன் றேவஞ்ச மாரன்வைத்த
தனமே தனங்கன கத்தட மேருச் சயிலமன்றே.

---

## அம்பிகைபாகர்.

இவரூர் யாழ்ப்பாணத்துள்ள இணுவில். குலம் வேளாளர் குலம். சமயம் சைவம். காலம் இற்றைக்குப் பன்னிரண்டு வருடங்களுக்கு முன். பாரதம், கந்தபுராணம், தணிகைப்புராணம் முதலிய இலக்கியங்களையும், தொல்காப்பியம், நன்னூல் முதலிய இலக்கணங்களையுங் கற்றவர். நாவலரிடஞ் சேனாவரையத்தையும், நடராசையரிடம் சிவஞானசித்தியார் முதலிய சித்தாந்த சாத்திரங்களையும் பாடங்கேட்டவர். இணுவையந்தாதி, தணிகைப்புராணத்தில் நகரப்படலம்வரையுமுரை, சூளாமணிவசனம் முதலியன செய்தவர்.

இணுவையந்தாதி.

திருத்தங் கிதழி யுடைத்தாமர் தில்லைத் திருச்சபையில்
நிருத்தங் கொளீச ரளித்தமுன் னேன்சிர நீண்மருப்பொன்
றுருத்தங் கொசித்த வுணற்செற்ற முன்னே னுறுதுணைகா
மருத்தங் கிணுவையந் தாதியென் வாயில் வருவிக்கவே.

---

## அமிர்தகவிராயர்.

இவரூர் பாண்டிமண்டலத்துள்ள பொன்னங்கால் என்னுமூர். குலம் வேளாளர் குலம். சமயம் சைவம். காலம் இற்றைக்கு இருநூற்றைம்பது வருடங்கட்கு முன் என்பர். இவர் அமிர்தம் போன்றினிக்கவும் பலபொருள்கள் தொனிக்கவுங் கவிபாடுந் திற

முடையவர். இராமநாதபுரத்திலே அரசராயிருந்த தளவாய் இரகுநாதசேதுபதியுடைய சமஸ்தானப்புலவர்கள் சவையிலே தலைவராய் வீற்றிருந்தவர். ஒருநாள் அரசர் புலவர்கள் பாடிவந்த பாட்டுக்களைக்கேட்டு வியந்து மகிழ்ந்து வீற்றிருக்கும்போது புலவர்களை நோக்கிப் "புலவீர்காள்! நீவிர் அகப்பொருளிற் சொல்லப்பட்ட துறைகளுள் ஒருதுறையே ஒவ்வொரு கவியிலும் வருமாறு பல கவிகள் பாடுவீர்களா?" என்றபோது பத்து, இருபது, ஐம்பது பாடலாம் என்ற புலவர்களெல்லாம் நாணுமாறு நான், நூறுபாடுவேன் என நிச்சயித்துக்கொண்டு "நானூறு பாடுவேன்" என்றனர்.

நானூறு என்பதற்கு நான்கு நூறு எனப் பொருள்பண்ணி மற்றைப் புலவர் சிலவர் "இவர் நானூறு பாடுவேன்" என்கின்றார் என்று வாதித்துச் சலஞ்சாதித்தபோதும் அதற்கு உடன்பட்டு இடையூறு கிளத்தலிலமைந்த நாணிக்கண்புதைத்தல் என்னும் துறையையே அமைத்து நானூறு கவிகள் பாடினவர். இதன்பெயர் ஒருதுறைக்கோவை. கவியெல்லாங் கட்டளைக்கலித்துறை. முன்னீரடிகளிலும் இரகுநாத சேதுபதியரசரின் "அருள்வலியாண்மை கல்வி" முதலிய சீர்த்திப் பேறுகளைச் சிறப்பித்துக் கூறுவர். பின்னீரடிகளிலும் நாணிக்கண்புதைத்தல் என்னும் அகப்பொருளும் மற்றொரு புறப்பொருளும் சிலேடைநெறியானும் தொனிநெறியானுந் தோன்றுமாறு கூறுவர். புறப்பொருளிலே சாதிவிடயம், சோதிடவிடயம், இலக்கணவிடயம், நகரவிடயம், பாரதகதை, இராமாயணகதை, பெரியபுராணகதை முதலிய பலவகைகளையும் படிக்கப்படிக்கச் சுவைபயக்குமாறு வெளிக்கக் காட்டுவர்.

ஒருதுறைக்கோவை.

க. மஞ்சாங் கருதலர் போர்ப்படை மேற்சண்ட மாருதம்போல்
விஞ்சாங்க மூல பலரகு நாதன் வியன்சிலம்பிற்
பஞ்சாங்க மோதி மறைகாட்டிச் சொர்க்கமிப் பாற்படுத்தி
அஞ்சாங் குலத்தவர் பார்ப்பாரைச் சேர்ந்த ததிசயமே.

மஞ்சு - முகில். கருதலர் - பகைவர். பஞ்சாங்கம் - ஐந்துறுப்பு. ஓதி - அளகம். மறை என்றது வேதம்போன்ற இடையை. சொர்க்கம் - தனம். அஞ்சாங்குலத்தவர் - அஞ்சு விரலையுடையவராகிய கையார், சங்கரசாதியார். கையார் என்றது கையை. பார்ப்பார் என்றது கண்களையும் அந்தணரையும்.

உ. தீனத்தை வென்ற கொடைப்புகழ் கேட்குஞ் செவிக்கமுத
பானத்தை யொத்த ரகுநாத சேதுபதி வரைவாய்க்
கானத்தை வானத்தை நேர்சொ லிடையொரு கன்னியத்தம்
மீனத்தை நாடிச் செலக்கும்ப ராசி வெளிப்பட்டதே.

தீனம் - வறுமை. கானம் - இசை. அத்தம் - கை. மீனம் என்றது மீன்போன்ற கண்களை. கும்பராசி என்றது குடங்கள்போன்ற ஸ்தனங்களை. இராசி - தொகை.

௩. கார்நிரை யத்தைத் தூக்கி யெடுத்ததன் கைவரையாற்
பார்நிரை காத்த ரகுநாத சேது பதிவரைவாய்
நேர்நேர் நிரைநேர் நிரைநிரை மூன்றையு நீக்கிப்பின்று
நேர்நிரை யொன்றையுங் காட்டிய வாறென்ன நேரிழையே.

இச்செய்யுள் யாப்பிலக்கணவுணர்ச்சியால் அறியற்பாலது. நேர்நேர் என்பது முதலிய நான்கும் அகவற்சீர்க்குரிய அசையிரட்டைகள். நேர்நேர்=தேமா. நிரைநேர்=புளிமா. நிரைநிரை=கருவிளம்; என்றது மாம்பிஞ்சின் பிளவையும் கருவிளம்பூவையும் ஒத்த கண்களை. நேர்நிரை=கூவிளம்; என்றது வில்வக்காய்போன்ற ஸ்தனங்கள் இரண்டையும்.

ச. பாவூர்சங் க்ராம விசைசூதர் பாடப் பவனிவரு
மாவூர் நகுல னெனும்ரகு நாதன் வரையனையீர்
கோவூர்முன் காட்டிய பின்குன்றத் தூர்வழி கூட்டியப்பால்
நாவூர்நுங் காஞ்சி புரங்காட் டுதொண்டை நாட்டியல்பே.

சங்கிராமம் - யுத்தம். சூதர் - மங்கலபாடகர். கோவூர் என்றது கண்களை. குன்றத்தூர் என்றது ஸ்தனங்களை.

ரு. வேந்தாதி வேந்தர் பரவுஞ் சமுக விசயன்மநு
மாந்தா திகள்புகழ் வேள்ரகு நாதன் வரைமடவீர்
காந்தாரி யாய்த்துரி யோதன மால்பெறக் காட்டியவற்
காந்தா தையைமுன்ன மேகாட் டியதிங் கதிசயமே.

மாந்தாதா - சூரியவமிசத்திருந்த ஓர் அரசன். அவற்காந்தாதை - திருதராட்டிரன்; என்றது கண்புலப்படாமையை.

சு. குத்திப லாரி புனாடில்லி யுச்சினி கோலகொண்டை
சித்திரக் கன்முதல் வெல்ரகு நாதன் சிலோச்சயவாய்
அத்திரி யைத்தரி சித்தோஞ் சரபங்க னாச்சிரமஞ்
சித்திபெற் றாவினி நாமேயி ராமனுஞ் சீதையுமே.

அத்திரி என்றது மலைபோன்ற ஸ்தனங்களையும், ஆரணியத்திலே இராமபிரான் கண்ட ஒரு முனிவரையும். சரபங்கன் என்றது அம்புபோன்ற கண்களையும் அவர் கண்ட ஒரு முனிவரையும் என்க.

எ. அங்கங் கலிங்க மலையாள மீழ மனைத்தும்வென்ற
சிங்க விசய சயரகு நாதன் சிலம்பிற்பொன்னே
சங்கிலி யாரையுங் கண்டேன் பரவை தனையுங்கண்டால்
மங்கல சுந்தர னென்றனை யேதொழு மண்டலமே.

சங்கிலியார் என்றது சங்கிலிபூட்டிய ஸ்தனங்களை. பரவை என்றது கடல்போன்ற கண்களை.

---

## அமிர்தசாகரர்.

இவரை "ஆரியம் என்னும் பாரிரும் பௌவத்தைக் காரிகையாக்கித் தமிழ்ப்படுத்திய அருந்தவத்துப் பெருந்தன்மை அமிர்தசாகரர் என்னும் ஆசிரியர்" என்று குணசாகரர் கூறுவர். இவர் சமயம் ஆருகதம். இவர் செய்தது யாப்பருங்கலக்காரிகை என்னும் யாப்பிலக்கணம். கவிகளெல்லாம் கட்டளைக்கலித்துறை. ஆயினும் இலக்கணங்கூறும் பாகமெல்லாம் சூத்திரம்போன்று சுருக்கமாயிருக்கும். எஞ்சியபாகம் மகடூஉமுன்னிலையாயிருக்கும். இதன்கண் வெண்பா முதலிய பாக்களின் இலக்கணங்களும், வெண்டுறை முதலிய பாவினங்களின் இலக்கணமும் விரித்துக் கூறப்படும். இந் நூற்பெருமையை யாம் அச்சிட்ட யாப்பருங்கலக்காரிகைப் புத்துரையின் உபக்கிரமணிகையிற் கூறியிருக்கின்றும். வேண்டுவார் ஆண்டுக் காண்க.

யாப்பருங்கலக்காரிகை.

கந்த மடிவில் கடிமலர்ப் பிண்டிக்க ணூர்கிழற்கீழ்
எந்த மடிக ளிணையடி யேத்தி யெழுத்தசைசீர்
பந்த மடிதொடை பாவினங் கூறுவன் பல்லவத்தின்
சந்த மடிய வடியான் மருட்டிய தாழ்குழலே.

---

## அரசகேசரி.

இவரூர் யாழ்ப்பாணத்து நல்லூர். சமயம் சைவம். காலம் இற்றைக்கு முந்நூறு வருடங்களுக்கு முன் என்பர். இவர் பரராசசேகரமகாராசாவின் மருகர். பாண்டிமண்டலத்துள்ள ஆழ்வார்

திருநகரியிலிருந்த அஷ்டாவதான இராமாநுசக்கவிராசரிடம் இலக்கியலக்கணங் கற்றவர் என்பது கர்ணபரம்பரை. எட்டுத்தொகை முதலிய சங்கச்சான்றோர் நூல்களையும், சிந்தாமணி, சிலப்பதிகாரம் முதலிய பிற்றைச் சான்றோர் நூல்களையுங் கற்றவர் என்பது இவரியற்றிய காவியத்திலேவருஞ் சொற்பிரயோகங்களாலும் வருணனைகளாலும் விளங்குகின்றது. இவரியற்றிய காவியம் இரகுவமிசம். இது காளிதாசமகாகவி செய்த இரகுவமிசத்தின் மொழிபெயர்ப்பு.

இதன்கண் திலீபமகாராசன் காமதேனுவை வழிபட்டுப் புத்திரனாக இரகு என்பவனைப் பெற்ற கதையும், இரகுவின் கதையும், இரகுவின் மகன் அயன்கதையும், அயன் மகன் தசரதன்கதையும், தசரதன் மகன் இராமன்கதையும், இராமன் மகன் குசன்கதையும், பிறவுஞ் சொல்லப்படுகின்றன. கவிகளுட்பல அரிதுணர்தற்பாலன. கார்க்கசிய வாக்கியம் விரவிய கவிகளாயும் பலவுள. வடமொழி நோக்கி அறியப்படுங் கவிகளாயும் பலவுள. அரிதுணர்தற்பாலனவாகிய சில கவிகளுக்கும், பலசொற்றொடர்களுக்கும் உரையெழுதி "இரகுவமிசக்கருப்பொருள்" என ஒன்று பிரகடனஞ் செய்திருக்கின்றோம். நமது மாணவகரும் வித்துவானுமாகிய புன்னையம்பதிக் கணேசையரும் திக்குவிசயப்படலம் வரையும் உரையெழுதிப் பிரகடனஞ் செய்திருக்கின்றார்.

## இரகுவமிசம்.

௧. இட்ட மெத்திய வெய்யவ ரிடுக்கண்வந் திறுத்தான்
முட்ட வத்தலைப் பகைவரா குவரென முன்னோர்
பட்டு ரைத்தன காட்டுமோ பானுவாற் பரியுக்
கட்ட கட்டலைக் கொட்டைவான் சரோருகக் களையே.

வெய்யவர் - கொடியவர், சூரியர். களை எழுவாய். காட்டும் பயனில்லை. பரிதல் - வருந்துதல். கட்ட - பிடுங்கிய. கள் - தலை. கொட்டை - பொகுட்டு. சரோருகம் - தாமரை.

௨. புன்கட் சூதவா வேட்டையி னவாவெறும் பொய்யேற்
றின்கட் பேரவா மாதரா ரவாவிந்த விறைவன்
தன்கட் பட்டவா தழைத்தவா விலையெனிற் றவறில்
என்கட் பட்டவா வெய்திடு மனத்திடை யிவற்கே.

சூதவா - சூதின்மேலாசை. கட்பேரவா - கள்ளின்கட்செல்லும் பேராசை. பட்டவா - உண்டாயநெறி. தழைத்தவா - வளர்ந்தநெறி.

---

## அருணகிரிநாதர்.

இவருடைய உறைவிடம் திருவண்ணாமலை. சமயம் சைவம். காலம் வில்லிபுத்தூரர் காலம் என்பர். இவர் கந்தரநுபூதி பெற்ற ஒரு வரகவி. "கந்தரநுபூதிபெற்றுக் கந்தரநுபூதிசொன்ன—எந்தையருணகிரி" என்று தாயுமானவருங் கூறுவர். வண்ணக்கவி பாடும் வகையில் மிக வல்லவர். இவர்க்கும் வில்லிபுத்தூரர்க்கும் வித்தியா விடயத்தில் வாதம் நிகழ்ந்தது என்றும், இவர் பாடுங் கவிகளுக் கெல்லாம் பொருள் கூறுவேம் என்றுடன்பட்ட வில்லிபுத்தூரர் முன்னிலையிலே கந்தரந்தாதி எனப்படும் யமகவந்தாதி பாடினார் என்றும், "திதத்தத்த" என்னும் நிசு-ங் கவியைத் தகரவருக்கமாகப் பாடி, வில்லிபுத்தூரரைப் பொருளிலே மயங்கச்செய்து வென்றார் என்றுஞ் சிலர் கூறுவர். இவர் இயற்றிய நூல்கள் கந்தரந்தாதி, கந்தரலங்காரம், கந்தரநுபூதி, திருப்புகழ் முதலியன.

கந்தரந்தாதி.

வாரணத் தானை யயனைவிண் ணோரை மலர்க்கரத்து
வாரணத் தானை மகத்துவென் றோன்மைந் தனைத்துவச
வாரணத் தானைத் துணைநயந் தானை வயலருணை
வாரணத் தானைத் திறைகொண்ட யானையை வாழ்த்துவனே.

---

## அருணந்திசிவாசாரியர்.

இவரூர் நடுநாட்டுள்ள திருத்துறையூர். குலம் ஆதிசைவ வேதியர்குலம். காலம் ஏறக்குறைய இற்றைக்கு அறுநூறு வருடங்களுக்கு முன் என்பர். இவர் இலக்கண இலக்கியங்களையன்றிச் சைவாகமங்களையும் நன்கு கற்றவர். சகலாகமபண்டிதர் என்னுங் காரணப்பெயருடையவர். மெய்கண்டதேவருடைய சீடர்களுள்ளே சிறந்தவர். திருப்பெண்ணாகடம் மறைஞானசம்பந்தசிவாசாரியர் முதலியோர்க்கு ஆசிரியர். சிவஞானசித்தியார், இருபாவிருபஃது என்னுஞ் சித்தாந்தசாத்திரங்கள் இரண்டுஞ் செய்தவர். சிவஞான சித்தியாரில் ஒரு பாதிவிருத்தத்தின் பொருளையும் இவர் பெருமையையும் பாராட்டிப் "பாதிவிருத்தத்தாலிப்பார்விருத்தமாகவுண்மை—சாதித்தார்பொன்னடியைச்சாருநாளெந்நாளோ" எனத் தாயுமானவர் கூறுவர். "ஆறாறு தத்துவமு மாணவமும் வல்வினையு

—நீறாக முத்தியிலே நிற்பவர்க்குப்—பேறாகப்—பார்விரித்த நூலெல்லாம் பார்த்தறியச் சித்தியிலே—ஓர்விருத்தப் பாதிபோதும்" எனச் சிவபோகசாரகாரர் கூறுவர். பாதிவிருத்தம் என்றது "அறியாமை யறிவகற்றி யறிவினுள்ளே யறிவுதனை யருளினாலறியாதே யறிந்து—குறியாதே குறித்தந்தக் கரணங்களோடுங் கூடாதே வாடாதே குழைந்திருப்பை யாகில்" என்னும் ஈரடிகளையும் என்பர். இது சிவஞானபோதத்துக்கு வழிநூல். சுபக்கம், பரபக்கம் என இரு வகையுடையது. சுபக்கம் மறைஞானதேசிகர், சிவாக்கிரயோகியர், ஞானப்பிரகாசர், சிவஞானயோகியர், நிரம்பவழகியர், சுப்பிரமணிய தேசிகர் என்னும் அறுவருரையுடையது. பரபக்கம் ஒற்றியூர் ஞானப்பிரகாசர், தத்துவப்பிரகாசர் முதலியோருரையுடையது. சுபக்கத்திலே கடவுள் ஒருவர் உளர் எனல், கடவுளால் உலகந் தோன்றுதல், பிரமா முதலிய தேவர்களிடம் நின்று உலகை நடாத்துதல், ஆன்மாக்களுக்கு இன்பதுன்பங்களைக் கொடுத்தல், அகச் சமயிகளுக்கும் புறச்சமயிகளுக்குந் தத்துவநியமம், ஆணவ இலக்கணம், ஆன்மலக்கணம், அவத்தையிலக்கணம், சிவாநுக்கிரகம், ஆன்மா தன்னையும், தன்னைமறைத்த மலத்தையும் அறிதல், அறிவறியாமைகளின் இலக்கணம், தீக்கையின் விசேடம், ஆன்மசுத்தி, அன்பினிலக்கணம், அடியார்பத்தி, சிவலிங்கவழிபாடு முதலியன தடைவிடைகளோடு சொல்லப்பட்டிருக்கின்றன.

பரபக்கத்திலே உலோகாயதமதம், பௌத்தமதம், ஆருகத மதம், மீமாஞ்சமதம், பிரபாகரன்மதம், சத்தப்பிரமவாதிமதம், மாயாவாதிமதம், சாங்கியமதம், பாஞ்சராத்திரமதம் என்பவைகளும் அவற்றின் மறுப்புரைகளும் விரித்துச்சொல்லப்பட்டிருக்கின்றன.

சுபக்கம்.

மாநுடப் பிறவி தானும் வகுத்தது மனம்வாக் காயத்
தானிடத் தைந்து மாடு மரன்பணிக் காக வன்றோ
வானிடத் தவரு மண்மேல் வந்தரன் றனையர்ச் சிப்பர்
ஊனெடுத் துழலு மூம ரொன்றையு முணரா ரந்தோ.

பரபக்கம்.

பார்த்தனு நிரத மேறிப் படைதனைப் பார்த்துச் சார்வைக்
கூர்த்தவம் பாலே யெய்து கொன்றர சாளே னென்னத்
தேர்த்தனி லிருந்து மாயை செய்துமால் கொல்லச் செப்பும்
வார்த்தைநூ லாக்கிக் கொண்டாய் புரங்கொ ணூல் மதித்திடாயே;

---

# அருணாசலக்கவிராசர்.

இவருடைய சென்மஸ்தானம் சோழமண்டலத்துள்ள தரங்கம்பாடியைச் சார்ந்த தில்லையாடி என்பர். பிற்கால வாசஸ்தானம் சீகாழி என்பர். குலம் வேளாளர் குலம். சமயம் சைவம். காலம் இற்றைக்கு நாற்றைம்பதுவருடங்கட்கு முன் என்பர். இவர் தருமபுராதீனத்து வெள்ளியம்பலத்தம்பிரானுடைய மாணவகர். இராமாயணம் முதலிய இலக்கியங்களையும், பஞ்சலக்கணங்களையும் பழுதறக் கற்றவர். இராமாயணக் கதையை நாடகமாகப் பாடினவர். சீட்டுக்கவி ஒன்றிலே தம்மைக் "கணிகொண்ட பஞ்சலக் கணமும் ராமாயணக் கடலையு முணர்ந்த புலவன்" என்பர். பின்னொரு சீட்டுக் கவியிலே "இராமா யணக்கடலை நாடகஞ் செய்தவ னிலக்கண முணர்ந்த புலவன்—முத்தமிழ்க் காழியரு ணாசலக் கவிராசன்" என்பர்.

இராமநாடகங் கேட்டற்குத் துணையாகவேண்டும் என்று "சித்திதருகிறவல்லி" என்னுஞ்சீட்டுக்கவிகொண்டு மணலி முத்துக்கிருஷ்ணமுதலியாரைக் கேட்டவர். பின்னர் அதனை அவர் முன்னிலையில் அரங்கேற்றித் தக்க பரிசில்கள் பெற்றவர். பெற்ற பரிசில் வகைகளைக் "கனந்தந்தான்" என்னும் பாட்டினுங் காட்டினவர்.

இராமநாடகமன்றிப் பலபல தனிநிலைச்செய்யுள்களும், சீகாழித்தலபுராணம், சீகாழிக்கோவை முதலிய தொடர்நிலைச்செய்யுள்களும் பாடினவர். பாக்களெல்லாம் எதுகைநயம், மோனைநயம் முதலிய நயமெல்லாம் நன்கமைந்தவை.

சீட்டுக்கவி.

சித்திதரு கிறவல்லி புத்திதரு கிறவல்லி
தேவர்கள் வணங்கு வல்லி
தில்லைநா யகவல்லி சிவகாம வல்லியிரு
திருவிழிக் கருணை யாலே
சத்தியவா சகனென்று பூமண் டலாதிபர்கள்
தாமெங் கணுந் துதிக்குஞ்
சகலபா ஷாநிபுண மணலிமுத் துக்கிருஷ்ண
சதுரநீ வாழி கண்டாய்
நத்துமலர் குவளைநான் மதியநீ செஞ்சாலி
நான்கருவி மழை மேகநீ
நளினநான் பரிதிநீ பிள்ளைநா னன்னைநீ
நான்கவிஞன் வழுதி நீகாண்
சுத்தமுள ராமா யணந்தனைக் கொண்டுனது
சமுகமது பெறவரு கிறேன்

சொற்பொரு ளறிந்தளவு சொல்லுவேன் கேட்கவே
துணையாக வேண்டு நீயே.

பரிசில்வகை.

கனந்தந்தான் கனகாபி டேகந் தந்தான்
களங்கமிலாக் கருப்பொருளை யழைத்துத் தந்தான்
மனந்தந்தான் முடிசூட்டு மாலை தந்தான்
வாணிசிங்கா தனத்திருத்தி வரிசை தந்தான்
இனந்தந்தா னிராமகதை யெவர்க்குந் தந்தான்
எனையிராமா யணக்கவிஞ னெனப்பேர் தந்தான்
அனந்தந்தான் மணவிமுத்துக் கிஷ்ண பூபன்
அகந்தந்தா னிருமையினுஞ் சுகந்தந் தானே.

தனிநிலைச்செய்யுள்.

ஞானம் பெருமை நயங்கருணை யுண்மையபி
மானம் பொறுமை வணக்கமுயர்—தானமுடன்
சற்குணமா சாரந் தருகல்வி நீதிநெறி
துற்குணருக் கில்லென்றே சொல்.

சீகாழித்தலபுராணம்.

காசிபிர யாகைகயை திருச்சயிலங் காளத்தி காஞ்சி தில்லை
ஆசின்மயூ ரங்கமுக்குன் றருணையிடை மருதுகுட மூக்கை யாறு
வாசமலி பழமலைவெண் காடுகட வூர்வேத வனங்கோ டிக்கா
ஓசைபெறு கோகரண மிவற்றினுமைந் தெழுத்தையினி யுரைத்த னன்றே.

---

## அருமருந்துதேசிகர்.

இவரூர் பாண்டிமண்டலத்திலே தென்கரையிலுள்ள திருச்செந்தூர். சமயம் சைவம். இவர் சுப்பிரமணியசுவாமி தொண்டர். சூடாமணிநிகண்டு, உரிச்சொனிகண்டு, கயாகரநிகண்டு, அகராதி நிகண்டு முதலிய நிகண்டுகளிலுள்ள அருஞ்சொற்களைச் சேர்த்து ஒருசொற் பலபொருளாக நிறுத்தி அரும்பொருள்விளக்கம் என்னும் நிகண்டு செய்தவர். அஃது எழுநூறு விருத்தமுடையது; தில்லைமன்றில் அரங்கேற்றியது.

அரும்பொருள்விளக்கநிகண்டு.

அகவலே யழைத்த லாட லான்றவா சிரிய முப்பேர்
தகவறி வுடனொழுக்கந் தெளிவுஞ்சற் குணமுஞ் சாற்றும்
பகவதி யுமையே துர்க்கை தருமதே வதைப்பேர் பன்னும்
முகவுமா ளிகைமு கப்பே மொள்ளுதல் காந்திக்கும்பேர்.

இதன்கண் அகவல், தகவு, பகவதி, முகவு என்னும் நான்கு சொற்களுக்கும் பலபொருள்கள் கூறப்பட்டவாறுணர்க.

---

## அவிரோதிநாதர்.

இவர் அருகசமயப்புலவர்களுள்ளே ஒருவர். திருநூற்றந்தாதி எனப்படும் அந்தாதிப்பிரபந்தஞ்செய்தவர். இதன்கண் வருங் கவிகளெல்லாங் கட்டளைக்கலித்துறை. சந்தச்சிறப்பும், சொற்சிறப்பும், பொருட்சிறப்புமுடையது.

### திருநூற்றந்தாதி.

புங்கவன் பூரணன் புத்தன் புராதனன் பூண்புனையாச்
சங்கரன் சக்கரன் முமறை யோனெனத் தாவில்செங்கட்
சிங்கவன் பேரணைத் தீர்த்தனைத் தீவினைத் தெவ்வெனும்பேர்
மங்கவன் றேவெள்ளை வாள்கொண்ட வீரனை வாழ்த்துவதே.

---

## அழகியசிற்றம்பலக்கவிராயர்.

இவரூர் பாண்டிமண்டலத்துச் சிவகங்கையைச் சேர்ந்த மிதிலைப்பட்டி. சமயம் சைவம். காலம் இற்றைக்கு இருநூறு வருடங்களுக்கு முன் என்பர். கட்டளைக்கலித்துறை பாடுதலில் வல்லவர். கட்டளைக்கலித்துறையிலே தளசிங்கமாலை என்னும் பிரபந்தஞ் செய்தவர். இத் தளசிங்கமாலை தளவாய் இரகுநாதசேதுபதியரசர் மேலது; படிக்கப் படிக்க இனிமை பயப்பது. சேதுபதியரசரின் செல்வம், கல்வி, செயல் முதலிய சீர்த்திப் பேறுகளைச் சிறக்கக் கூறுவது. சேதுபதியரசர் பவனிவரும்போது வீதியினின்று புலவர் பலவர் முன்னிலையிற் பாடியது என்பர்.

### தளசிங்கமாலை.

க. தேனுர் மொழிமட மாதர்சந் தானம்பொன் சேருங்கல்வி
மேனு டவமுனைப் போற்செய் தவர்க்குண்டு வீணர்க்குண்டோ
வானு டரும்பணி ராமே சருக்குமுன் மண்டபஞ்செய்
தானு விசய ரகுநாத சேது தளசிங்கமே.

உ. எனதன்ம மாயினுந் தான்கற்ப கால மிருக்கவுன்போன்
மனதி னினைந்த படிசெய்ய யார்க்கும் வராதுகண்டாய்
கனதன மாலணிப் புல்லாணிக் கோபுரங் கட்டுவித்த
தனத விசய ரகுநாத சேது தளசிங்கமே.

ங. ஞாயிறு போய்விழத் திங்கள்வந் தெய்திட நண்ணியசெவ்
வாயனல் வீசப் புதனம்பு தூவநல் வியாழன்வர
வேயுறு வெள்ளி வளைசோர நானுன்னை மேவுதற்குத்
தாய்சனி யாயின ளேரகு நாத தளசிங்கமே.

---

## ஆண்டிப்புலவர்.

இவரூர் தொண்டைமண்டலத்திலே செஞ்சியஞ்சீமையைச் சேர்ந்த ஊற்றங்கால். தந்தையார் பாவாடை வாத்தியார். ஆசிரிய விருத்தம் பாடுதலில் அதிகம் பிரியமுடையவர். ஆசிரியவிருத்த யாப்பினாலே ஆசிரிய நிகண்டு என ஒரு நிகண்டும், நன்னூற் சூத்திரப் பொருளுணருமாறு நன்னூலாசிரிய விருத்தம் என ஒன்றுஞ் செய்தவர். நன்னூலாசிரிய விருத்தம் உரையறி நன்னூல் எனவும் படும். "எழுத்துடன் சொல்லெனு மிலக்கணம் வகுத்துரை யியம்பு மாசிரியத்தினால்—நன்னூ லெனும்பெயர் விளங்கவே செய்தனன்" என்பர்.

### ஆசிரியநிகண்டு.

மாசைபீ தகங்கனக மாடுபொரு ளுரைசொன்னம்
மாழைகர்ப் பூரம் பொலம்
வசுவேங்கை பூரியுடல் காங்கெயஞ் சுவணநிழல்
மணிதயம் வெறுக்கை யீகை
ஆசைதம னியநிதி நிதானந் தனம்பண்டம்
அத்தநிசி வித்த மாடை
அராகம் விருத்திகூ டிரணியம் பிசியேமம்
ஆடக மனந்த மீழம்
தேசிகங் காஞ்சனம் பீதகஞ் சந்திரம்
செங் கொலரி கைத்தருத்தம்
செந்தாது சாமீ கரத்தொடுக் கஞ்சாமி
திரவியங் கார முடனே
பேசுசாம் பூநதஞ் சாதரூ பம்பூதி
பீலிகாணங் கல் யாணம்
பெருகுபொனி னுமமொன் றொழியறுப தாம்பொற்
பெருங்காசு காண மாமே.

### நன்னூலாசிரியவிருத்தம்.

செம்மையுங் கருமையும் பசுமையும் வெண்மையுந்
திண்மையு நுண்மை யுடனே
சிறுமையும் பெருமையுங் குறுமையு நெடுமையுந்
தீமையுந் தூய்மையு மலால்
வெம்மையுங் குளிர்மையுங் கொடுமையுங் கடுமையும்
மேன்மையுங் கீழ்மையும் பின்
மெய்ம்மையும் வறுமையும் பொய்ம்மையும் வன்மையும்
மென்மையு நன்மை யுஞ்சொல்

ஐம்மையும் பழமையும் புதுமையு மினிமையும்
அணிமையு நிலைமையுஞ் சேர்
ஆண்மையு மும்மையு மொருமையும் பன்மையும்
அருமையு மிருமையு மிக்க
கைம்மையுங் கூர்மையுங் கேண்மையுஞ் சேண்மையுங்
கடிய வளமையு மிளமையுங்
காணரிய முதுமையும் பண்புப் பகாப்பதங்
காட்டுமின் னனைய மாதே.

இது நன்னூற் பதவியலிலே வரும் "செம்மை சிறுமை" என்னுஞ் சூத்திரத்தில் "இவற்றெதி ரின்னவும் பண்பிற் பகாநிலைப் பதமே" என்பதனுரையாகும்.

---

## ஆதிவராககவி.

இவர் நாடு சோழநாடு. குலம் வேதியர் குலம். சமயம் சைவம். இவர் காதம்பரி என்னும் நூல் செய்தவர். இந்தக் காதம்பரி பாண கவி என்பவரும் அவர் புதல்வருஞ் செய்த வடமொழிக் காதம்பரி யின் வழிநூல். இதன்கண் காந்தருவ கன்னிகையாகிய காதம்பரி என்பவளை அவந்திதேசராசனுகிய சந்திராபீடன் என்பவன் மணம் புணர்ந்த காதை விரித்துரைக்கப்பட்டிருக்கின்றது.

பாயிரம்.

பாற்கடற் சென்ற பூசை பாலின்மே லாசை வைத்து
மேற்கொள வரினு மெல்லா வெள்ளமுங் கொள்ள வற்றோ
பாற்கட லனைய காதம் பரிக்கடற் பரப்பி லாசை
மேற்கொளு மென்ற னெஞ்சம் வேண்டவே கொள்ளு மன்றே.

---

## ஆநந்தக்கூத்தர்.

இவரூர் பாண்டிமண்டலத்திலே பொருநையாற்றங்கரையி லுள்ள வீரவநல்லூர். சமயம் சைவம். பஞ்சலக்கணங்களுங் கற்ற வர். சிவஸ்தல யாத்திரையிற் சென்று திருக்காளத்தியில் வசிக்கும் போது தம்மொடு நண்புபூண்ட பெரியோர் சிலர் கேள்விப்படி திருக்காளத்திப்புராணஞ்செய்தவர். "காசிதனில்வாசமாயகிலேசன் பாதம்பெற்றவர்." பரிமளகவிராயர் என்னும் நாமமுமுடையவர்.

திருக்காளத்திப்புராணம்.

விந்தகிரி யொன்றடக்கி வேதமொரு நான்கடக்குஞ்
சிந்தைதனி லைந்தடக்கிச் சிறுகரகத் தாறடக்கி
வந்துகட லோரேழும் வயிற்றடக்கிப் பொன்முகரி
முந்துதவத் தாற்கொணர்ந்த முனிவனடி முடிபுனைவாம்.

---

## ஆளவந்தார்.

இவரூர் பாண்டிமண்டலத்துள்ள விரைநகர் என்றும், குலம் மாதவப்பட்டர் என்னும் முனிவர் குலம் என்றுங் கூறுவர். ஞான வாசிட்டம் என்னும் வேதாந்த நூல் செய்தவர். இந்த ஞானவாசிட்டம் வடமொழி ஞானவாசிட்டத்துக்கு வழிநூல்; பிறைசை அருணாசலசுவாமி இயற்றிய உரையுடையது.

ஞானவாசிட்டம்.

பெண்மை பாதியன் பெற்ற களிற்றினை
அண்மை தூர மறவகத் துன்னுவாம்
திண்மை ஞானச் சிறப்புயர் வாசிட்டம்
உண்மை யாக வொருக்குரை செய்யவே.

---

## ஆறுமுகநாவலர்.

இவரூர் யாழ்ப்பாணத்து நல்லூர். குலம் கார்காத்த வேளாளர் குலம். மரபு ஞானப்பிரகாசர் மரபு. தந்தையார் கந்தப்பிள்ளை. பிறந்த வருடம் சாலிவாகன சகவருடம் ஆயிரத்தெழுநூற்று நாற்பத்தைந்துக்குச் சமமான சித்திரபானுவருடம். சமயம் சைவம். ஆச்சிரமம் நைட்டிகப்பிரமசரியம். கற்றுணர்ந்த பாஷைகள் செந்தமிழ், அங்கிலம், சங்கதம் என்பன. கற்றுப் பூரணபாண்டித்தியம் பெற்றது செந்தமிழ். செந்தமிழில் வித்துவசிரோமணி சேனாதிராய முதலியாருக்கும், சரவணமுத்துப்புலவருக்கும் மாணவகர். நடராசையர், பொன்னம்பலபிள்ளை முதலியோர்க்கு ஆசிரியர். மற்றைய மாணவகர்கள்போலக் கற்றநூலளவிலமையாது மீட்டும் மீட்டும் நூல்களைத் தேடிக் கற்றவர். எப்பொருள் யார் யார்வாய்க் கேட்பினும் அப்பொருள் மெய்ப்பொருள் காணும் அறிவும் பெற்றவர்.

இலக்கியங்களினும் வல்லவர். இலக்கணங்களினும் வல்லவர். நீதிநூல்களினும் வல்லவர். நியாயநூல்களினும் வல்லவர். சைவசித்தாந்தசாத்திரங்களினும் வல்லவர். சைவாகமங்களினும் வல்லவர். சைவாகமப் பெருமையைச் சாதித்துப் போதித்தலினும் வல்லவர். கலைபயில்வோருளங்கொளக் கற்பிக்குஞ்செயலினும் வல்லவர். உலகியல்களைப் பலதலையின்றி உணர்தலினும் வல்லவர். செந்தமிழ் நூல்களைத் திருத்தியச்சிடுஞ்செயலினும் வல்லவர். செந்தமிழ்வாக்கியங்களைச் சிறப்புறத் தொடுத்துவரையுஞ் செயலினும் வல்லவர்.

சைவப் பிரசங்கத்திலும் வல்லவர். புராணப் பிரசங்கத்திலும் வல்லவர். கசட்டுநெறிகளை மறுத்தெழுதுங் கண்டனங்களிலும் வல்லவர். செய்யுளியற்றுந் திறத்திலும் வல்லவர்.

கற்றதனாலாய பயனாகுங் கடவுள்வழிபாடு எனப்படுஞ் சிவபூசா கைங்கரியத்திலுஞ் சிறந்தவர். சிவதீக்கையே மோக்கம் பயக்கவல்லது என்னுஞ் சிந்தனைசொற் செயல்களிலுஞ் சிறந்தவர். தேவார திருவாசக பாராயணப்பற்றிலுஞ் சிறந்தவர். சிவனடியார்வழிபாட்டிலுஞ் சிறந்தவர். சைவாசாரத்திலுஞ் சிறந்தவர். சதாசாரத்திலுஞ் சிறந்தவர். சிவகாருண்ணியத்திலுஞ் சிறந்தவர். அடைந்தோர்ப் புரக்கும் அருளிலுஞ் சிறந்தவர். நன்றல்ல தன்றே மறந்துவிடலிலுஞ் சிறந்தவர். கேட்டார்ப் பிணிக்குந் தகையவாய்க் கேளாரும் வேட்ப மொழியும் வாக்குநலத்திலுஞ் சிறந்தவர். அவையஞ்சி மெய்விதிரா ஆண்மையிலுஞ் சிறந்தவர். சபைகூட்டிப் போதித்துப் பொதுநன்மை புரிதலிலுஞ் சிறந்தவர். அன்பு, நாண், ஒப்புரவு, கண்ணோட்டம், வாய்மை என்னும் ஐந்துந் தாங்க நிற்கும் நிலையிலுஞ் சிறந்தவர்.

மறைகணிந்தனை சைவநிந்தனை பொறுமனமுடையவர். உறுதி நல்லறஞ்செய்பவர்தங்களோடு உறவுமுடையவர். நினைவில்வேறொரு கடவுளை வழிபடாநிலையுமுடையவர். சைவநிந்தைகளையும், சைவநிந்தகர்களையும், புறச்சமயங்களையும், பிழைபட இயற்றும் நூலுரைகளையும், வழுநிலைகாட்டிக் கண்டித்து வெறுத்தொழிக்குஞ் செயலுமுடையவர். அருமையுடைய செயலாற்றும் பெருமையுமுடையவர். மானமும் பண்பும் மறவாநிலையுமுடையவர். புகழ், அதிகாரம், பொருள்வரவு முதலியனகருதி மனிதரைப்பாடுஞ்செயலிற் செல்லா விரதமுமுடையவர். "தானமெவ் வகையுளுந் தக்க வித்தியா—தானமே சிறந்தது சாற்றுங் காலையே" எனச் சூதசங்கிதையாற் புகழப்பட்ட வித்தியாதானப் பெருந்தருமமுமுடையவர். அன்னதானம் முதலிய தருமமுமுடையவர்.

இவருடைய இலக்கியப்பயிற்சிவன்மையை இவரால் அச்சிடப்பட்ட பரிமேலழகருரை, திருக்கோவையுரை, பாரதம், சேதுபுராணம், கந்தபுராணம் முதலிய இலக்கியங்கள் காட்டும். இலக்கணப் பயிற்சிவன்மையை இலக்கணச்சுருக்கம், நன்னூற் காண்டிகை, சேனாவரையம், பிரயோகவிவேகம், இலக்கணக்கொத்து முதலிய இலக்கணங்கள் காட்டும். நீதிநூல் நியாயநூல்களின் வன்மையையுஞ், சைவசித்தாந்தசாத்திர வன்மையையும் பெரியபுராணசூசனங்

காட்டும். தருக்கசங்கிரகம், சைவசமயநெறியுரை முதலியனவுங் காட்டும். பரிசோதன வன்மையை அச்சிட்ட நூல்களெல்லாங் காட்டும். செந்தமிழ்வாக்கியத் தொடைவன்மையைத் திருவிளையாடற்புராணவசனம், பெரியபுராணவசனம் முதலியன காட்டும். கண்டன வன்மையைச் சண்டமாருதம்போற் சென்று தாக்கித் தலை குனிவிக்குஞ் சுப்பிரபோதம், போலியருட்பாமறுப்பு, மித்தியாவாத நிரசனம் முதலியன காட்டும். செய்யுளியற்றும் வன்மையை அராலிச் சித்திவிநாயகர் விருத்தம் முதலியன காட்டும்.

வித்தியாதானப் பெருந்தருமச்செயலை இவராலே தாபிக்கப் பட்டு நடந்துவரும் வண்ணார்பண்ணைச் சைவப்பிரகாசவித்தியா சாலையும், சிதம்பர சைவப்பிரகாசவித்தியாசாலையும், பிறவுங் காட்டும். இத்தருமசிந்தனையின் பெருமையைச் செந்தமிழ்நூலுணர்ச்சியிலும் வித்தியாபிமானத்திலுஞ் சிறந்து இந்த வித்தியாசாலைகளுக்கு முறையே தலைவர்களாய் வந்து பரிபாலிக்கும் த. கைலாசப்பிள்ளை, ச. பொன்னம்பலபிள்ளை என்னும் இருவர் செயலுங் காட்டும். இவர் பெருமையையும் புகழையும் யாவரும் அறிவர். அவை தமிழ்நாடெங்குங் கிரிதீபம்போல நின்று நிலவுகின்றன. இன்னும் அவைகளை இவர் சரித்திரம் நோக்கியும் அறிக. இவர் இயற்றிய செய்யுள்களுள்ளே நல்லைக் கைலாசப்பிள்ளையார் மங்களவிருத்தத்தை இங்கே காட்டுதும்.

மங்களவிருத்தம்.

சீர்கொண்ட பரமவா னந்தசிற் சுகசொருப
 செகதீச திருமங்களம்
தெய்வசர வணபவசண் முகவற்கு முன்வந்த
 திகழீச திருமங்களம்
பேர்கொண்ட சதுர்மறையின் முதலிலகு பிரணவப்
 பிரகாச திருமங்களம்
பிறைநுதலொ டயில்விழிகொள் வலவையெனு மரிவையிற்
 பெருநேச திருமங்களம்
ஊர்கொண்ட பரிதிமணி யெனவிலகு முதரமதில்
 ஒளிர்தேச திருமங்களம்
ஒருவெண்ணெய் நல்லையமர் மெய்கண்ட தேசிகற்
 குபதேச திருமங்களம்
கார்கொண்ட கரடதட கயமுகவ வங்குசக்
 கராச திருமங்களம்
கருணேச நல்லையக் கைலாச புரிவாச
 கவினேறு கணராசனே.

இவரால் வசனரூபமாக எழுதப்பட்ட சிறிய பத்திரிகைகளும் பல. உதயதாரகை, இலங்கைநேசன் முதலிய பஞ்சிகைகளிற் பகிரங்கஞ்செய்த விஷயங்களும் பல. அவற்றுள்ளே சில கற்பவர்க்குத் திருத்தங்கொடுக்கும் வித்தியாவிடயங்கள். சில பலர்க்கும் பொதுவான திருத்தங்களையும் நன்மைகளையும் பயக்கும் விடயங்கள். சில தம்முடைய விடயங்களுக்கு மாறாய் எழுந்தவைகளைக் கண்டிக்கும் விடயங்கள். சில சைவநெறி நிறுவற்காரணமான விடயங்கள். சில பரசமய கண்டனங்கள். சில வாத விடயங்கள். ஒரு விடயங் காட்டுதும்.

## கரையார்வழக்கு.

உமாதேவியாரைச் சிவபெருமான் "பரதவர் மகளாகுக" எனச் சபித்ததன்றிக் கரையார் மகளாகுக எனச் சபித்திலர் எனவும், வலைஞருக்குக் கரையார் என்னும் பெயர் வலைவீசுபடலத்தும், பாரதத்தும் இல்லை எனவும் வித்துவகேசரி கூறினர். வலைஞருடைய பரியாயநாமங்களுட் கரையாரும் ஒன்று என்பது இத்தேசத்தும் பிறதேசத்துங் கற்றோரும் மற்றோருமாகிய எல்லாரும் அறிவாராகவும் வித்துவகேசரி ஒருவர் அறியாதது ஆச்சரியம்! வலைவீசுபடலத்தும் பாரதத்தும் வழங்காமையால் வலைஞரைக் கரையார் என வழங்குவது கூடாது என்றவர், திருவிளையாடற்புராணத்தும் பாரதத்தும் வழங்காமையால் அந்தணரைப் பிராமணர் எனவும், அரசரைச் சத்திரியர் எனவும், புலையரைப் பறையர் எனவும், முருகக்கடவுளைச் சுப்பிரமணியர் எனவும், விநாயகக்கடவுளை விக்கினேசுவரர் எனவும், சிவனைப் பர்க்கர் எனவும், திருமாலை விட்டுணு எனவும் வழங்குவதுங் கூடாது என்பார்போலும்!

சாதிப்பெயர் தொழில்பற்றியல்லது இடம்பற்றி வாராது என்றார். வலைஞருக்குக் கடலர், கழியர், திமிலர், பஃறியர் என்பன யாதுபற்றி வந்த பெயர்? கூறுக. கரையார் என்பது கரையிலிருத்தல் காரணமாகப் போந்த பெயராதலால் வலைஞர் என்னும் ஒரு சாதியாரைமாத்திரஞ் சுட்டாது என்றவர் கழியர் என்பது கழியிலிருக்குங் காரணம்பற்றிப் போந்த பெயர் என்பதும், கழி, கரை என்பன ஒருபொருட் சொற்கள் என்பதும், அங்ஙனமாகவே கழியர்போலக் கரையாரும் வலைஞருக்குக் காரணவிடுகுறியாயிற்று என்பதும் அறிந்துகொள்ளமாட்டாதது என்னையோ! கரையார்-வலைஞர் என்று உவின்சிலோ அகராதியிற் சொல்லப்பட்டதும், உலகில் வழங்கப்படுவதும் நோக்கி அறிக.

கிராமம் என்பது நெய்தற்றிணைக்குரிய கரைதுறை அடுத்தது என்றார். நெல்விளைநிலம் கிராமம் என்பதறியார் வேறு யாதறிவார்? சூடாமணிநிகண்டிலே பேசப்படாமையாற் கரையார் என்றொரு சாதியில்லை என்றார். சாதி என்பனவெல்லாஞ் சூடாமணிநிகண்டிலே பேசப்பட்டது என்பது தமக்குங் கருத்தன்மை சூடாமணிநிகண்டிலே பேசப்படாத புலையர் என்றொரு சாதி தாம் பேசியவாற்றால் இனிது விளக்கினர். சாதிகள் எத்தனை? அவைகளுள் எந்தெந்தச் சாதி எந்தெந்த உற்பத்தியும், எந்தெந்தத் தொழிலுமுடையது? அவைகளை அறிவிக்கும் நூல்கள் எவை? என் கடிதத்திற் காணப்பட்ட கரையார் என்பது நிகண்டு முதலியவற்றில் இல்லாமையாற் கரையார் என்றொரு சாதி இல்லை என்றவர் என் கடிதத்திற் காணப்பட்ட பறையர் என்பதும் நிகண்டு முதலியவற்றில் இல்லாமையாற் பறையர் என்றொரு சாதி இல்லை என்று கரையாதது என்னையோ? இஃதேன் கரையார்? கரைவார்.

உமாதேவியாரைச் சிவபெருமான் வலைச்சியாகுக எனப் பணித்தது தாம் உபதேசித்த வேதப்பொருளை விருப்பின்றிக் கேட்குங் குற்றத்தால் என்பது வலைவீசுபடலத்து விளங்கிக்கிடப்பவும், வலைஞர்சாதிக்குச் சிவபெருமான் கூறிய "விரதமு மறனுமின்றி மீன்பிடித் திழிஞராகும்" என்னும் அடைமொழி தமது கடிதத்திற்றானே முன்னர் வெளிப்பட்டுக்கிடப்பவும் தாம் பின்னர் அவற்றை மறந்து உமாதேவியார் வலைச்சியாகப் பிறந்ததினால் வலைஞர்குலம் உயர்குலம் என்றவர் சிவபெருமான் பறையர்வடிவங்கொண்டதனாற் பறையர் உயர்குலம்; வேடர்வடிவங்கொண்டதனால் வேடர் உயர்குலம்; பன்றி வடிவங்கொண்டதனால் பன்றி உயர்குலம்; விட்டுணு மீன் ஆமை பன்றிவடிவங்கொண்டதனால் மீன் ஆமை பன்றி உயர்குலம்! பன்றி வாய்ப்புகுவதனாற் பவ்வீ உயர்குலம் என்பார் போலும்!

---

## இடைக்காடர்.

இவரூர் பாண்டிமண்டலத்திலே மதுரைமாநகர்க்குக் கிழக்கே இருக்கும் இடைக்காடு என்று சிலர் கூறுவர். வேறுசிலர் மலையாளத்துள்ள இடைக்காடு என்பர். குலம் இடையர்குலம். சமயம் சைவம். காலம் கடைச்சங்க காலம். இவர் கபிலர் என்னும் புலவருக்கு நண்பர். சித்தர்களுள்ளும் ஒருவர். வள்ளுவர் கவியைப் புகழ்ந்து "கடுகைத் துளைத்து" என்னுங் கவி பாடினவர். அப்பொழுதை அரசனாகிய குலசேகரபாண்டியன் "இலக்கணமும்

இலக்கியமும் வரம்பு கண்டோன்" எனக் கேட்டு அவன்மீது கவி பாடிச் சென்றவர். அரசன் கவியைக் கேளாது வாளாவிருந்த அவமானத்தை மதுரைக்கோயிலுட்புகுந்து சொக்கநாதசுவாமிக்கு முறையீடு செய்தவர்.

அதுகேட்ட சொக்கநாதசுவாமி தேவிசமேதராய் மற்றைப் புலவர்களோடும் மதுரைக்கோயிலினின்றும் புறப்பட்டு வைகைச் செய்கரையின் தென்பாலடைந்து வீற்றிருத்தற்கும், பாண்டியன் வந்து பணிந்து குறையிரந்து மீண்டழைத்துக்கொண்டுபோய் முன் போலக் கோயிலில் வீற்றிருக்கச்செய்தற்கும் காரணமான பத்தியும் புலமையும்பெற்றவர். பின்னர் முன் பாடிய பாட்டுக் கேட்டுப் பாண்டியனீந்த பரிசில்களும் பெற்றவர். பல தனிநிலைக்கவிகளும், அறுபதுவருட வெண்பா, ஊசிமுறி என்பவைகளும் பாடினவர்.

ஊசிமுறி.

மன்றலங் கோதை மலர்மிலைந் தும்குவவும்
கென்று திரியுமிடை மகனே—சென்று
மறியாட்டை யுண்ணுமை வன்கையால் வல்லே
அறியாயோ வண்ணுக்கு மாறு.

---

## இரட்டைப்புலவர்.

இவரூர் சோழமண்டலத்துள்ள ஆமிலந்துறை என்பர். குலம் செங்குந்தர்குலம். சமயம் சைவம். காலம் வரபதியாட் கொண்டார் என்னுஞ் சேரர்பதி காலம். இவர் இருவர். ஒருவர் முடவர். மற்றவர் குருடர். முடவர் குருடர் முதுகிலிருந்து வழி காட்டுவர். குருடர் முடவரைச் சுமந்துதிரிவர். இருவரும் ஒருவர் போன்று தோன்றுதலால் இரட்டையர் எனப்பட்டார். இளஞ் சூரியர் முதுசூரியர் எனவும்படுவர். தெய்வத்திருவருளுமுடைய வர். கவிவகையெல்லாங் கசடறப் பாடுவர். "பண்பாயகலம்பகத்திற் கிரட்டையர்" என்னும் பாடற்புகழும் பெற்றவர். வரபதியாட்கொண்டார் என்னும் சேரர்பதியைப் பாடி அவர் மதிப்பும் அடைந்தவர்.

சிவஸ்தல யாத்திரையிற் சென்று அங்கங்கே வீற்றிருக்குங் கடவுளர்மீதும், பிரபுக்கள்மீதுங் கவிகள் பாடினவர். பரிசில்களும் பெற்றவர். முன்னீரடிகளையும் ஒருவர் பாடப் பின்னீரடிகளையும் மற்றவர் பாடிமுடிப்பர். பல தனிநிலைக்கவிகளுக்கும், தில்லைக்கலம் பகம், ஏகாம்பரநாதருலா, ஆமாத்தூர்க்கலம்பகம் முதலிய பிரபந் தங்களுக்கும் ஆக்கியோர் என அறிஞர் நோக்க நின்றவர்.

வெண்பா

க. மூடர் முன்னே பாடன் மொழிந்தா லறிவரோ
ஆடெடுத்த தென்புலியூ ரம்பலவா—ஆடகப்பொற்
செந்திருப் போலணங்கைச் சிங்காரித் தென்னபயன்
அந்தகனே நாயகனா னால்.

இங்கே அம்பலவா என்றவரையும் ஒருவர் கூற்று. மற்றையது மற்றவர் கூற்று. இது தங்கள் பாட்டுக்களைக் கேட்டுச் சம்மானஞ் செய்யாத ஒருவரைச் சுட்டியது.

காவலரினும் பாவலரதிகர்.

உ. காவல ரீகை கருதுங்காற் காவலர்க்குப்
பாவலர் நல்கும் பரிசொவ்வா—பூவினிலை
ஆகாப் பொருளை யபயனளித் தான்புகழாம்
ஏகாப் பொருளளித்தேம் யாம்.

மலைவழிநடத்தல்.

௩. குன்றுங் குழியுங் குறுகி வழிநடந்து
சென்று திரிவதென்றுந் தீராதோ—ஒன்றுங்
கொடாதானைக் காவென்றுங் கோவென்றுங் கூறின்
இடாதோ நமக்கிவ் விடர்.

கட்டளைக்கலித்துறை.

௪. புராதன மான கவிப்புல வீரிந்தப் புன்குரங்கு
மராமரம் விட்டிங்கு வந்ததென் னேவந்த வாறுசொல்வேன்
தராதல மன்னுந் தமிழ்மா றனையுந்தன் றம்பியையும்
இராகவ னென்று மிலக்குவ னென்றும்வந் தெய்தியதே.

இங்கே வந்ததென்னே என்றவரையும் ஒருவர் கூற்று. மற்றையது மற்றவர் கூற்று. இது பரிசில் கொடுக்க நின்ற பாண்டியனைத் தடுக்க முயன்ற மந்திரியை நிந்தித்துக் கூறியது.

தில்லைக்கலம்பகம்.

அம்பலக் கூத்த னாரூர் மாதவன்
இடைமரு தீச னீங்கோய் மலையினன்
உறையூ ரெந்தை யூறன்மா நகரினன்
எறும்பிமா மலையின னேடகத் துறைவோன்
ஐயா றமர்ந்த வமரர்கள் பெருமான்
ஒற்றியூ ருறைவோ னோமாம் புலியூர்ச்
சிற்றம் பலவன் சீர்பர வுதுமே.

இது வருக்கமோனைவரப் பாடிய நிலைமண்டிலவாசிரியப்பா.

ஏகாம்பரநாதருலா.

துன்னு மொருசிலந்தி சோணாடும் காவிரியும்
மன்னி யரசாள வைத்தவரார்—பன்னெடுநாள்
தேடி யிருவர் திரியத் தெரியாமல்
நீடு சுடர்வடிவாய் நின்றவரார்—ஆடலென
உங்காரஞ் செய்தே யுலகுண்ட மாயவனைச்
சங்காரஞ் செய்துபின்னுந் தந்தவரார்—பங்கயன்மால்
வீந்த சுடலை விபூதி தரித்திருவர்
ஆர்ந்த தலைமாலை யணிந்தவரார்—மாய்ந்திடவே
நாரா யணனுடலு நான்முகனுருடலுங்
கூராய சூலமிசைக் கொண்டவரார்—சேர
எரிந்த பிறையெயிற்றோ னீரைந்து வாயும்
பரந்து செழுங்குருதி பாய—நெரிந்தொருவன்
மான்று கிடக்க மலையான் மகளுடனே
ஊன்று விரலொன் றுடையவரார்—தோன்றியடல்.

---

## இராமச்சந்திரகவிராசர்.

இவரூர் தொண்டைமண்டலத்துள்ள இராசநல்லூர். பின்னர் வாசஞ்செய்த இடம் சென்னைமாநகரம். குலம் ராயகுலம். சமயம் சைவம். காலம் இற்றைக்கு அறுபது வருடங்களுக்கு முன் என்பர். இவர் பலபல தனிநிலைக்கவிகளுக்கும், நடுவெழுத்தலங்காரம், சத்த பங்கி, நவபங்கி முதலிய சிலசில சித்திரகவிகளுக்கும், சகுந்தலை விலாசம், பாரதவிலாசம், தாருகவிலாசம் முதலியவைகளுக்கும் ஆக்கியோராய் விளங்கிய புலவர்.

விருத்தம்.

ஆவீன மழைபொழிய வில்லம் வீழ
    அகத்தடியாண் மெய்ந்நோவ வடிமை சாவ
மாவீரம் போகுதென்று விதைகொண் டோட
    வழியிலே கடன்காரர் மறித்துக் கொள்ளச்
சாவோலை கொண்டொருவ னெதிரே செல்லத்
    தள்ளவொண்ணா விருந்துவரச் சர்ப்பந் தீண்டக்
கோவேந்த ருழுதுண்ட கடமை கேட்கக்
    குருக்களோ தக்கிணைகள் கொடுவென் றாரே.

மனிதரைப்பாடல்.

கல்லாத வொருவனைநான் கற்றா யென்றேன்
    காடெறியு மவனைநா டாள்வா யென்றேன்
பொல்லாத வொருவனைநா னல்லா யென்றேன்
    போர்முகத்தை யறியானைப் புலியே றென்றேன்

மல்லாரும் புயமென்றேன் சூம்பற் றோளை
    வழங்காத கையனையான் வள்ள லென்றேன்
இல்லாது சொன்னேனுக் கில்லை யென்றான்
    யானுமென்றன் குற்றத்தா லேகின் றேனே.

நடுவெழுத்தலங்காரம்.

அத்திரம்வே லாவலய மிராசி யொன்றிற்
    சமைந்தபெயர் மூன்றினிடை யக்க ரத்தான்
மெத்தநடுக் குற்றனைவந் தடைந்தே னிந்த
    விதனமகற் றிமெற்றை யெழுத்தோ ராறிற்
பத்துடையா னைத்தடிந்து பெண்ணுச் செய்து
    பரிவினுகர் வோனிருதாள் பணிந்து போற்றுஞ்
சித்தசனே தெளியசிங்கன் றவத்திற் றோன்றுஞ்
    சிதாரா மப்பரபல தியாக வானே.

இச்செய்யுளின் கருத்துக் கடனாலே நடுக்குற்று வந்தேன் இந்த விதனம் அகற்றிடு என்பது. கடன் என்பது அத்திரம், வேலாவலயம், இராசியொன்று என்பவைகளின் பரியாயநாமங்களாகிய ககம், கடல், கன்னி என்பவற்றிலுள்ள நடுவெழுத்து மூன்றுஞ் சேர்ந்து வந்த பெயர். நடுவெழுத்து நீங்கிய மற்றை ஆறெழுத்துக்களாகிய கம், கல், கனி என்பவைகளை முறையே கம் பத்துடையான் எனவும், கல் பெண்ணுச் செய்து எனவும், கனி பரிவினுகர்வோன் எனவுங் கூட்டிப் பொருள் கொள்க. ககம் - அம்பு. கம் பத்துடையான் - தலை பத்துடைய இராவணன். அத்திரம் என்பதற்குப் பகழி என்னும் பரியாயநாமங் கொள்வாருமுளர். பழி பத்துடையான் என இயையாமையின் அது பொருந்தாது.

கட்டளைக்கலித்துறை.

இரவல னேயுனக் கில்லாத தென்ன விதயமென்ன
பரவுண வேது சுவையற்ற தென்னசொற் பான்மையென்ன
தரவுரை செய்திட வென்று னதற்கொன் றுஞ் சாற்றிலன்யான்
வரதிரு வேங்கட னுதாவென் றேன்பொன் வழங்கினனே.

இங்கே திருவேங்கடநாதா! என்னும் விளியிலே திரு என்பதை இல்லாதது என்ன? என்பதற்கும், வேம் என்பதை இதயம் என்ன? என்பதற்கும், கடன் என்பதை உணவு ஏது? என்பதற்கும், நா என்பதைச் சுவையற்றது என்ன? என்பதற்கும், தா என்பதைச் சொற்பான்மை என்ன? என்பதற்கும் விடையாக்கிப் பொருள் கொள்க.

---

## இராமசுவாமிப்பிள்ளை.

இவரூர் பாண்டிமண்டலத்துள்ள இராமநாதபுரம். பின்னர் வாசஞ்செய்த இடம் மதுரை மேலைமாசிவீதி. குலம் வேளாளர் குலம். சமயம் சைவம். காலம் இற்றைக்குப் பதினைந்து வருடங்களுக்கு முன். இவர் திருவாவடுதுறையாதீனத்துச் சீடர். இலக்கிய இலக்கணங்களுஞ் சைவசித்தாந்தசாத்திரங்களுங் கற்றவர். நாவலர்க்கும் நண்பர். கம்பரந்தாதி, முல்லையந்தாதி, திருவிளையாடற் புராண முதற்காண்டம் என்பவற்றிற்கு உரைசெய்தவர். மதுரை மான்மியங் கூறும் அட்டமிப்பிரதக்கிணம், பேரூர்ப்புராணம் முதலியவைகளைப் பகிரங்கஞ்செய்தவர்.

அட்டமிப்பிரதக்கிணமான்மியம்.

மலர்தலை யுலகி னிலவிய வுயிர்கண்
மருவிய பிறப்பினை யகன்று
பொலிவுறு முத்திக் கரைசெறி யுபாயப்
புணையினை யருளென வினவும்
நலவரு ளுருவக் கயற்கணு யகிக்கு
நமதருட் குறிகுரு பூசை
இலகுறச் செயலென் றிறையரு ளிறைவன்
இணையடி தொழுதுவாழ்ந் திடுவோம்.

---

## இராமபாரதி.

அறஞ்செய விரும்பு முதலிய ஆத்திசூடிச் சூத்திரங்களை ஈற்றில் வைத்துக்கொண்டு ஒவ்வொரு சூத்திரத்துக்கும் உதாரணமாகப் புராணகதைகளை எடுத்துக்காட்டி நேரிசைவெண்பாவினால் ஒரு நூல் செய்தவர். அதன் பெயர் ஆத்திசூடிவெண்பா. இந்நூலிலே ஏறக்குறைய நூறு கதைகள் வரையில் உள. சிலசில கதைகளோடும் இதனை அச்சிட்டிருக்கின்றனர்.

ஆத்திசூடிவெண்பா.

கஞ்சனூ ராழ்வார் கனன்மூக்கா லிக்குளிருந்
தஞ்சாமற் சைவநிலை யாக்கினர்பார்—தஞ்சமென்பார்
புண்ணியமே மெய்த்துணையாம் புன்னைவன பூபதியே
எண்ணி மனந்தமோ றேல்.

அரதத்தாசாரியர்கதை.

இவர் கஞ்சனூரிலேவசித்த வைணவப்பிராமணருள்ளே ஒருவராகிய வாசுதேவர் என்பவருடைய புதல்வர். கஞ்சனூராழ்வார்

எனவும்படுவர். இவர் இளம்பருவந் தொடங்கி வைஷ்ணவசமயத்தை மறுத்துரைத்துச் சைவசமயத்தைப் பாராட்டித் தெய்வம் சிவமே என வாதித்துவந்தவர். வாதித்துவருநாளிலே வைஷ்ணவர்கள் திரண்டு நாராயணபரத்துவம்பேசி வாதஞ்செய்தனர். அப்போது காய்ச்சிய இருப்புமுக்காலியின்மீதிருந்து சதுர்வேததாற்பரியம்முதலியவைகளைச் சொல்லித் தெய்வஞ் சிவமே என நாட்டினவர். தெய்வஞ் சிவமே என நாட்டுதற்குக் கூறிய இருபத்திரண்டு ஏதுக்களையுடைய சுலோகம் ஐந்தும் சிவஞானமுனிவராலே மொழிபெயர்த்து அகவலாகப் பாடப்பட்டிருக்கின்றது.

---

## இராமாநுசகவிராயர்.

இவரூர் பாண்டிமண்டலத்துள்ள இராமநாதபுரம். பின்னர் வாசஞ்செய்த இடம் சென்னைமாநகரம். காலம் ஏறக்குறைய இற்றைக்கு அறுபது வருடங்களுக்கு முன் என்பர். இவர் இராமநாதபுரம் சோமசுந்தரம்பிள்ளைக்கு மாணவகர். வேதகிரிமுதலியார் முதலியோர்க்கு ஆசிரியர் என்பர். இராமாநுச காண்டிகை என்னும் நன்னூலுரைக்கும் ஆசிரியர். நன்னூலிலே "எகரவொகரமெய்ப்புள்ளி" என்றதை "ஏகாரவோகாரமெய்ப்புள்ளி" என்று கொண்டவர். "மியாயிக" என்புழி மியா இக என்பதினிடையே யகரம் வந்தது கூறினவர். பார்த்தசாரதிபாமாலை, திருவேங்கடவநுபூதி ஆதிய பிரபந்தங்களுக்கும், சில தனிநிலைக்கவிகளுக்கும் ஆக்கியோர்.

வெண்பா.

அவனிக்குத் தந்தை யகந்தஞா னத்தோன்
நவமிக்க ஞாலமு நல்குற்றோன்—எவனவனே
சங்கரா சாரியன்றன் றூள்வழுத்தி னுயின்வழு
அங்கிரா சார்பின்வழி யான்.

---

## இரேவணசித்தர்.

இவர் வாசஸ்தானம் சிதம்பரம். குலம் வேளாளர்குலம். சமயம் சைவம். காலம் இற்றைக்கு இருநூற்றுநாற்பது வருடங்களுக்கு முன். இவர் பிங்கலம், திவாகரம் முதலிய நிகண்டுகளை ஆராய்ந்துநோக்கி ஒருசொற் பல்பொருள்கள் பலவற்றைத் திரட்டி அகராதிக்கிரமமாக நாட்டி ஒருநிகண்டு செய்தவர். அதன் பெயர் அகராதிநிகண்டு. அதன் யாப்புச் சூத்திரயாப்பு. அதுவன்றிச்

சிவஞானதீபம், பட்டீச்சுரப்புராணம் முதலியவைகளையுஞ் செய்த வர் என்பர்.

அகராதிநிகண்டு.

அரனென் பதுவே சங்கர னாகும்
அம்பிகை யென்ப துமையவள் பெயரே
அயனே வேத னாமென நுவல்வர்.

சிவஞானதீபம்.

படைக்கலங்கள் கொலைத்தொழில்கள் பலசெய் தாலும்
பாவவிதம் படைக்கலத்தை மேவி டாவாம்
படைக்கலங்கொண் டவன்பா னின்றாற் போலப்
பரனருளின் வசமாகிப் பணிசெய் வோர்கள்
துடைத்திடுவர் மலத்தினையெத் தொழில்செய் தாலுந்
துக்கசுகப் பவக்கடலிற் றோயா ரென்றும்
அடைக்கலமா யாண்டசிவன் பாத நீழல்
அடைந்திடுவ ரெப்பதமும் பொருந்தி டாரே.

---

# இளங்கோவடிகள்.

இவர் நகர் மலைமண்டலத்துள்ள வஞ்சிமாநகர். குலம் அரசர் குலம். சமயம் ஆருகதம். நிலை துறவறம். காலம் கடைச்சங்க காலம். இவர் முத்தமிழ்த்துறையின் முறைபோகிய ஓர் உத்தமப் புலவர். இயல், இசை, நாடகம் என்னும் முத்தமிழும் விரவிவருத லால் "இயலிசைநாடகத் தொடர்நிலைச்செய்யுள்" எனவும், உரைப் பாட்டும் இசைப்பாட்டும் இடையிடை விரவிவருதலால் "உரை யிடையிட்ட பாட்டுடைச்செய்யுள்" எனவும் பெயர்பெற்ற சிலப் பதிகாரம் என்னும் இலக்கியஞ் செய்தவர். சிலப்பதிகாரம் பஞ்ச லக்கியங்களுள் ஒன்று.

சிலப்பதிகாரத்திலே கோவலன் கண்ணகி என்னும் இருவர் சரிதங்களோடு புகார், மதுரை, வஞ்சி என்னும் பிரதானநகரிகளின் வளங்களையும், முடியுடைவேந்தர் மூவர்பெருமைகளையும், மாநுட ரொழுக்கங்களையும், அறநெறிவழக்கங்களையும் அகவல் முதலிய பனுவல்களால் விரிவுபடக்கூறுவர். தொல்காப்பியப் புறத்திணையிய லில் வரும் "பிண்டமேயபெருஞ்சோற்றுநிலையும்—வென்றோர்விளக் கமுந் தோற்றோர்தேய்வும்—குன்றாச்சிறப்பிற் கொற்றவள்ளையும்" என்பது முதலிய வஞ்சித்துறைகளைக் காட்சிக்காதையிலே "கொ டைநிலைவஞ்சியுங்கொற்றவஞ்சியும்—வென்றோர்விளங்கியவியன்பெ ருவஞ்சியும்—பின்றாச்சிறப்பிற்பெருஞ்சோற்றுவஞ்சியும்" என்பது

முதலியவாக வழிமொழிந்து காட்டுவர். சொற்பொருள்களுந் தொடைநடைகளுங் கற்பவர்க்கு இனிமைபயக்குமாறு யாத்து வைப்பர். இதன் அருமை பெருமைகளெல்லாம் அடியார்க்குநல்லார் இயற்றிய உரைநோக்கி அறிதற்பாலன.

சிலப்பதிகாரம்.

பெரியவனை மாயவனைப் பேருலக மெல்லாம்
விரிகமல வுந்தியுடை விண்ணவனைக் கண்ணுந்
திருவடியுங் கையுங் கனிவாயுஞ் செய்ய
கரியவனைக் காணாத கண்ணென்ன கண்ணே
கண்ணிமைத்துக் காண்பார்தங் கண்ணென்ன கண்ணே.

வரந்தருகாதை.

௧௯௰. பிறர்மனை யஞ்சுமின் பிழையுயி ரோம்புமின்
அறமனை காமி னல்லவை கடிமின்
கள்ளுங் களவுங் காமமும் பொய்யும்
வெள்ளைக் கோட்டியும் விரகினி லொழிமின்
இளமையுஞ் செல்வமு மியாக்கையு நிலையா.

௨௦௦. உளநாள் வரையா தொல்லுவ தொழியாது
செல்லுந் தேஎத்துக் குறுதுணை தேடுமின்
மல்லன்மா ஞாலத்து வாழ்வீ ரீங்கென்.

பிழையுயிர் - இறக்கும் உயிர். அல்லவை - பாவம். கடிமின் - நீக்குங்கள். வெள்ளைக்கோட்டி - மூடர்சவை. விரகு - உபாயம். உளநாள்வரையாது - உள்ளநாள்களை வீழ்நாளாகத்தள்ளாது. ஒல்லுவது - இயலுவது. தேஎத்துக்கு - இடத்துக்கு.

---

## இளம்பூரணர்.

இவர் பஞ்சலக்கணப்பயிற்சியினும், பழைய இலக்கியப்பயிற்சியினும் பரிபூரணர். தொல்காப்பியப் பொருளுணர்ச்சிக்கு முக்கிய காரணர். அதற்கு முதற்கண் உரைசெய்தவர். அதனால் உரையாசிரியர் என்று சேனாவரையராலும் பிறராலும் வழங்கப்பட்டவர். சேனாவரையர் நச்சினார்க்கினியர் முதலிய பின்னுரைகாரர் யாவருந் தம்முரையைப் பெரிதும் அநுசரிக்கின்ற புலமையாளர். கிளவியாக்கம் என்பதற்குக் "கிளவிகள்பொருண்மேலாமாறுணர்த்தினமையிற் கிளவியாக்கம் எனும்பெயர்த்து" என்பர். சொல் என்பதற்கு "எழுத்தொடுபுணர்ந்துபொருளறிவிக்கும் ஓசை" என்பர். மேற்கோளாக அகத்தியம், செயிற்றியம், பன்னிருபடலம், காக்கைபாடினியம்

முதலிய பழைய இலக்கணங்களையும், நற்றிணை, குறுந்தொகை, நாலடியார், கலித்தொகை, திருக்குறள் முதலிய பழைய இலக்கியங்களையும் எடுத்துக்காட்டுவர். இவருரை இளம்பூரணம் எனப்படும்.

செயிற்றியம்.

உடனிவை தோன்று மிடமியா தெனினே
முடவர் செல்லுஞ் செலவின் கண்ணும்
மடவோர் சொல்லுஞ் சொல்லின் கண்ணும்
கவற்சி பெரிதுற் றிசைப்போர் கண்ணும்
பிதற்றிக் கூறும் பித்தர் கண்ணும்
குழவி கூறு மழலைக் கண்ணும்
மெலியோன் கூறும் வலியின் கண்ணும்
வலியோன் கூறு மெலியின் கண்ணும்
ஒல்லார் மதிக்கும் வனப்பின் கண்ணும்
கல்லார் கூறுங் கல்விக் கண்ணும்
பெண்பிரி தன்மை யலியின் கண்ணும்
ஆண்பிரி பெண்மைப் பேடி கண்ணும்
களியின் கண்ணுங் காவாலி கண்ணும்
தெளிவிலா ரொழுகுங் கடவுளர் கண்ணும்
அறியார் கூறுந் தமிழின் கண்ணும்
காரிகை யறியாக் காமுகர் கண்ணும்
கூனர் கண்ணுங் குறளர் கண்ணும்
ஊமர் கண்ணுஞ் செவிடர் கண்ணும்
ஆன்ற மரபி னின்னுழி யெல்லாந்
தோன்று மென்ப துணிந்திசி னோரே.

இது மெய்ப்பாட்டியலிற் கூறப்பட்ட நகை, அழுகை, இளிவரல் முதலிய எண்வகைச் சுவைகளுள் நகை என்னுஞ் சுவைதோன்றுமிடம் இவை எனக் கூறியது.

பன்னிருபடலம்.

ஆன்ற சிறப்பி னறம்பொரு ளின்பமென
மூன்று வகை நுதலிய துலக மவற்றுள்
அறனு மின்பமு மகலா தாகிப்
புறனெனப் படுவது பொருள்குறித் தன்றே.

---

## உதீசித்தேவர்.

இவரூர் தொண்டைமண்டலத்திற் பையூர்க்கோட்டத்து ஆரணிநெடுந்துறை ஆற்பாகை. சமயம் ஆருகதம். இவர் பௌத்தமதத்தை மறுத்துரைக்குங் கருத்துடையுவர். திருக்கலம்பகம் எனப்

படும் பிரபந்தஞ் செய்தவர். இக்கலம்பகத்திலே ஆருகதமதவிடயங்களையும் ஆங்காங்குக் கூறுவர்.

திருக்கலம்பகம்.

விடுவது வெவ்வினை விட்டாற் பெறுவது வீடுவந்து
படுவது பேரின்ப வெள்ளமென் றுலென்றன் பாவிநெஞ்சே
கெடுவது தான்றனக் காவதென் னூதுகெட் டேன்பரமன்
வடுவ திலாநெறிச் செல்லா தொதுங்கு மனையகத்தே.

---

## உமாபதிசிவாசாரியர்.

இவருடைய வாசஸ்தானஞ் சிதம்பரத்தைச்சேர்ந்த கொற்றவன்குடி. இவர் தில்லைமூவாயிரவருள் ஒருவர். சிவபத்தியிற் சிறந்தவர். ஒருநாள் நடேசர்பூசையும் முடித்துக்கொண்டு வெளியில்வந்து சிவிகையேறி விருதுகளோடுஞ்செல்லும் வீதியிலே பிச்சைநோக்கிப் புக்க கடவூர் மறைஞானசம்பந்தர் கண்டு "பட்டகட்டையிற் பகற்குருடேகுதல் பாரீர்" என்றதுகேட்டுச் சிவிகைவிட்டிறங்கி அவரை அடைந்து வழிபட்டு அதன்பொருள் வினவி அறிந்தவர். பின்னர்ப் பின்னிலைநின்று பரிபக்குவதசையும்பெற்றுச் சிவஞானபோதம் முதலிய சித்தாந்தசாத்திரங்களையும் அவர்பாற் கேட்டுத் தெளிந்தவர். மார்கழிமாசக் கொடியேற்றத்திருவிழா ஒன்றிலே ஏறுதுநின்ற கொடியை "ஒளிக்குமிருளுக்கும்" என்னுங் கவிபாடி ஏறச்செய்தவர்.

"எழுஞ்சிரு நூறெடுத்தவாயிரம்—வாழூநற்சகனமருவாநிற்ப—பொற்பொதுமலிந்தவற்புதனுனி—ஆரும்விழவிற் பொற்றேராலயத்திலே" மாயாவாதி, ஐக்கியவாதி முதலிய சமயவாதிகளைத் தர்க்கவாதஞ்செய்து வெற்றிபெற்று வாதவிடயங்களைச் சங்கற்பநிராகரணம் என்னும் நூலாகநின்று நிலவச்செய்தவர். நடேசப்பெருமான் விடுத்த "அடியார்க்கெளியன்" என்னுஞ் சீட்டுக்கவிபெற்றுப் பெற்றான்சாம்பானுக்கு முத்திகொடுத்தவர். அச்செயலிற் சிலர்கொண்ட ஐயப்பாடுநீங்குமாறு முள்ளிச்செடிக்கும் முத்திகொடுத்தவர். கோயிற்புராணம், திருத்தொண்டர்புராணசாரம், சேக்கிழார்புராணம், சிவப்பிரகாசம், கொடிக்கவி, திருவருட்பயன் முதலிய வேறு பிரபந்தங்களுஞ் செய்தவர். வடமொழியிற் பௌட்கராகமவிருத்தியுஞ் செய்தவர் என்பர்.

கோடிக்கவி.

ஒளிக்கு மிருளுக்கு மொன்றே யிடமொன்று மேலிடிலொன்
றொளிக்கு மெனினு மிருளட ராதுள் ளுயிர்க்குயிராய்த்

தெளிக்கு மறிவு நிகழ்ந்துள தேனுந் திரிமலத்தே
குளிக்கு முயிரருள் கூடும் படிகொடி கட்டினனே.

சீட்டுக்கவி.

அடியார்க் கெளியன்சிற் றம்பலவன் கொற்றங்
குடியார்க் கெழுதியகைச் சீட்டுப்—படியின்மிசை
பெற்றான்சாம் பானுக்குப் பேதமறத் தீக்கைசெய்து
முத்தி கொடுக்க முறை.

கோயிற்புராணம்.

தேராட்டிக் கயங்காட்டுந் திரண்மாக்கட் டயமூட்டிப்
போராட்டிப் புறங்காட்டிப் போக்காட்டிற் புலால்கமழும்
நீராட்டிச் சூர்மாட்டி நிகழ்நாட்டிற் புகழ்நாட்டும்
பேராட்டி சீராட்டும் பிள்ளையார் கழல்போற்றி.

---

## உருத்திரங்கண்ணனார்.

இவரைக் கடியலூர் உருத்திரங்கண்ணனார் என்பர். இவர் சங்கப்புலவருள் ஒருவர். பத்துப்பாட்டுட் பெரும்பாணாற்றுப் படை, பட்டினப்பாலை என்னும் இருபாட்டும் இயற்றினவர். பெரும் பாணாற்றுப்படை பரிசில்பெறவிரும்பிய பாணன் ஒருவனைப் பரிசில் பெற்றான் ஒருவன் தொண்டைமானிளந்திரையனிடத்தே ஆற்றுப் படுத்தியதாகப் பாடியது. இளந்திரையன் கொடையையும், அவ னாட்டுவளத்தையும் விரித்துக் கூறுவது. பட்டினப்பாலை கரிகாற் சோழனையுங் காவிரிப்பூம்பட்டினத்தையும், காவேரியாறு முதலிய வற்றையும் வியந்து கூறுவது. கரிகாற்சோழன் பதினாறுநூறாயிரம் பொன் பரிசிலீந்து பட்டினப்பாலையைக்கொண்டான் என்பர். இத னைக் கலிங்கத்துப்பரணிகாரரும் எடுத்துக் கூறுவர்.

கலிங்கத்துப்பரணி.

தத்து நீர்வரால் குருமி வென்றதுந்
    தழுவு செந்தமிழ்ப் பரிசில் வாணர்பொன்
பத்தொ டாறுநூ றாயி ரம்பெறப்
    பண்டு பட்டினப் பாலை கொண்டதும்.

---

## எல்லப்பநாவலர்.

இவர் திவ்வியகவி சைவ எல்லப்பநாவலர் எனவும்படுவர். இவரூர் சோழமண்டலத்திலே திருவெண்காட்டருகிலுள்ள இராதா நல்லூர் என்பர். குலம் வேளாளர்குலம். சமயம் சைவம். காலம்

மணவாளதாசர்காலம் என்பர். இவர் தருமபுரவாதீனத்லைதச் சார்ந்து பலகலைகளுங் கற்றவர். சௌந்தரியலகரிக்கு இவரியற்றியவுரையினாலே இவர், தொல்காப்பியம், நன்னூல், தண்டியலங்காரம் முதலிய இலக்கணங்களையும், தேவாரம், திருவாசகம், சிவஞானசித்தியார் முதலிய நூல்களையுங் கற்றவர் என்பது புலப்படுகின்றது. இவர் இயற்றிய பிரபந்தங்கள் அருணைக்கலம்பகம், அருணாசலபுராணம், செவ்வந்திப்புராணம், திருவெண்காட்டுப்புராணம், திருவிரிஞ்சைப்புராணம், நீர்த்தகிரிப்புராணம், திருச்செங்காட்டங்குடிப்புராணம் முதலியன.

அருணைக்கலம்பகம்.

சைவத்தின் மேற்சம யம்வே றிலையதிற் சார்சிவமாந்
தெய்வத்தின் மேற்றெய்வ மில்லெனு நான்மறைச் செம்பொருள்வாய்
மைவைத்த சீர்த்திருத் தேவார முந்திரு வாசகமும்
உய்வைத் தரச்செய்த நால்வர்பொற் றாளெம் முயிர்த்துணையே.

அம்மானை.

நாரா யணனறியா நாதரரு ணேசருக்கு
வாரார் சிலைகலைமெய் மாதங்க மம்மானை
வாரார் சிலைகலைமெய் மாதங்க மாமாயின்
ஆராயுங் காலெடுப்ப தையமன்றோ வம்மானை
அன்னமறி யாரெடுப்ப தையமோ வம்மானை.

மாதங்கம் என்பது முப்பொருட் சிலேடை. சிலைமாதங்கம் எனக்கூட்டி வில்லுப் பெரிய பொன்மலை என்றும், கலைமாதங்கம் எனக்கூட்டி உடை யானைத்தோல் எனவும், மெய் மாதங்கம் எனக்கூட்டி அங்கம் மாது பாதியான அங்கம் எனவும் பொருள்கொள்க. ஐயம் - பிச்சை, சந்தேகம். அன்னம் - சோறு, அன்னப்பறவை.

அருணாசலபுராணம்.

ஒருமானைக் கரத்தினில்வைத் தொருமானைச் சிரத்தினில்வைத் துலக மேழும்
தருமானை யிடத்தினில்வைத் தருள்வானைப் பவளநெடுஞ் சயிலம் போல
வருமானை முகத்தானை யளித்தானைப் பெருமானை மகிழ வேறும்
பெருமானை யருணகிரிப் பெம்மானை யடிபணிந்து பிறவி தீர்வாம்.

செவ்வந்திப்புராணம்.

உழுநரிக் கணங்களுக் குதவு மொண்பொருள்
கழுநிறுக் குணவுகட் டியக ளஞ்சியம்
தழலினுக் கிந்தன மான சட்டகம்
எழிலுறப் புனையினு மிருப்ப தல்லவே.

---

## எரம்பையர்.

இவரூர் யாழ்ப்பாணத்து மாதகல். குலம் வேதியர்குலம். சமயம் சைவம். காலம் இற்றைக்கு ஒரு வருடத்துக்கு முன். இலக்கண இலக்கியங் கற்றவர். சித்தாந்தசாத்திரமுந் தெரிந்தவர். சோதிடத்திலுஞ் சென்றவர். பிரசங்கஞ் செய்தலிலும் செய்யுள்செய்தலிலும் வல்லவர். வடமொழி நீதிசாரத்தைத் தமிழில் மொழிபெயர்த்துச் செய்யுணடையிற் செய்தவர். சேதுபுராணத்தை வாக்கியநடையில் ஆக்கினவர். பல தனிநிலைக்கவிகளும் பாடினவர்.

நீதிசாரம்.

இந்தநூ றன்னைக் கற்பா னெவனவன் நன்மைதீமை
முந்துசெய் திடுவ செய்யத் தகாதன முறைமை தானும்
நந்தலி லறம்போ திக்கு நன்மையு முள்ள வாறே
சிந்தையி லுணர வல்லா னென்றனர் வடநூற் செல்வர்.

---

## ஐயடிகள்காடவர்கோன்.

இவரூர் தொண்டைமண்டலத்துள்ள காஞ்சிபுரம். குலம் பல்லவமன்னவர்குலம். சமயம் சைவம். இவர் பெரியபுராணத்திற் சொல்லப்பட்ட பெரியர்களுள் ஒருவர். அரசியலைவிட்டுச் சிவஸ்தல யாத்திரையிற் சென்றவர். சென்ற தலங்கள் ஒவ்வொன்றையுந் துதித்து ஒவ்வொரு வெண்பாப் பாடினவர். அந்த வெண்பாக்கள் க்ஷேத்திரத்திருவெண்பா என்று பதினொராந் திருமுறையிற் சேர்க்கப்பட்டிருக்கின்றன.

க்ஷேத்திரத்திருவெண்பா.

ஓடுகின்ற நீர்மை யொழிதலுமே யுற்றாருங்
கோடுகின்றார் மூப்புங் குறுகிற்று—நாடுகின்ற
நல்லச்சிற் றம்பலமே நண்ணாமு னன்னெஞ்சே
தில்லைச்சிற் றம்பலமே சேர்.

---

## ஐயனாரிதனார்.

இவர் மலைமண்டலமன்னர்களாகிய சேரர்குலத்திற் பிறந்தவர். சைவ வழிபாடுடையவர். தொல்காப்பியர் முதலிய பன்னிரு புலவருஞ்செய்த பன்னிருபடலம் என்னும் புறப்பொருளிலக்கணம்

நன்கு தெரிந்தவர். புறப்பொருளுக்கு இலக்கணமும் இலக்கியமுமாய்நின்று பயன்படுமாறு புறப்பொருள்வெண்பாமாலை என்னும் நூல்செய்தவர். இந்நூல் பன்னிருபடலத்துக்கு வழிநூல். இதற்கோர் உரையும் உண்டு. இவ்வுரை மாகறலூர்த் தேவநாயகர் செய்தது என்பர்.

வெண்பாமாலை.

ஒன்றி லிரண்டாய்ந்து மூன்றடக்கி நான்கினால்
வென்று களங்கொண்ட வேல்வேந்தே—சென்றுலாம்
ஆழ்கடல்சூழ் வையகத்து ளைந்துவென் றாறகற்றி
ஏழ்கடிந் தின்புற் றிரு.

ஒன்று ஞானம். இரண்டு காரணகாரியங்கள். மூன்று நட்பு, பகை, உதாசினம். நான்கு யானை, தேர், குதிரை, காலாள். ஐந்து மெய், வாய், கண், மூக்கு, செவி. ஆறு நட்பு, பகை, செல்லுகை, இருக்கை, பிரிக்கை, கூட்டுகை என்னுங்குணங்கள். ஏழு வேட்டை, கடுமொழி, தண்டம், சூது, கள்ளுண்டல், பொருளீட்டல், காமம் என்பன. இவ்வெண்பா குறிப்புப்பொருட்கு உதாரணமாக நன்னூல்விருத்தியுரையிலும் வருகின்றது.

---

## ஒட்டக்கூத்தர்.

இவரூர் பாண்டிமண்டலத்துள்ள மலரி என்னுமூர் என்றும், குலம் கைக்கோளர்குலம் என்றும், சமயம் சைவம் என்றும் கூறுவர். இவர் வாணிதேவியின் அருளடைந்த ஒரு வரகவி. வாணிதாசர் என்னும் பெயருமுடையவர். கோவையும், உலாவும், அந்தாதியும் பாடுஞ்சிறப்புநோக்கிக்“கோவையுலாவந்தாதிக்கொட்டக்கூத்தன்” எனப் புகழ்வுற்றவர். பல தனிநிலைச் செய்யுள்களுக்கும், இராமாயணத்தின் உத்தரகாண்டம், விக்கிரமசோழனுலா, தக்கயாகப்பரணி, ஈட்டியெழுபது முதலிய பிரபந்தங்களுக்கும் ஆக்கியோர் என அறிஞர்நோக்குற்றவர். குலோத்துங்கசோழன் கோவையும் இவர்நூல் என்பாருமுளர்.

கட்டளைக்கலித்துறை.

ஆடுங் கடைமணி நாவசை யாம லகிலமெல்லாம்
நீடுங் குடையிற் றரித்த பிரானென்று நித்தநவம்
பாடுங் கவிப்பெரு மானொட்டக் கூத்தன் பதாம்புயத்தைச்
சூடுங் குலோத்துங்க சோழனென் றேயெனைச் சொல்லுவரே.

ஒட்டக்கூத்தர் துதிகூறக் கருதித் "தரித்தபிரான்" என்பது வரையிற் பாடிவருதலைக் குலோத்துங்கசோழன் கண்டு ஆசிரியர் தன்னைத் துதித்தல் தகுதியன்றெனத் தடுத்து எஞ்சிய பாகத்தைத் தானே பாடி அவர்க்கே துதியாக இதனை முடித்தான் என்பர்.

அரியெனுநாமம்.

ஆரே யெனுமொன்று சொல்லத் தொடங்கினு மவ்விடத்துன்
பேரே வருமென்ன பேறுபெற் றேன்பெரு நான்மறையின்
வேரே மிதிலையின் மின்னுட னேவெய்ய கானடைந்த
காரே கடல்கொழுந் தச்சிலை வாங்கிய காகுத்தனே.

குலோத்துங்கசோழன்கோவை.

கணைக்கோவை யேசொரிந் தன்றிலங் காபுரங் காயரவின்
இணைக்கோவை யீந்த கடாக்களி றேயெழு பார்க்குமொரு
துணைக்கோவைக் கோழிக் குலோத்துங்க சோழனைச்சொல்கின்றவைவர்
திணைக்கோவை பாட வடிதொறுங் காக்கநின் சேவடியே.

அரவு என்றது அநந்தனை. இணைக்கோ - இரண்டுகண்கள்.

---

## ஔவையார்.

இவர் பெருநாவலருடன் பிறந்தவர் என்பர். பெற்றுருண்டி மறந்தவர். பாணரகத்தில் வளர்ந்தவர். சிவபரத்துவந் தெளிந்தவர். வரகவித்துவம் அமைந்தவர். இலௌகிகம் வைதிகம் இரண்டுந் தெரிந்தவர். மனம், மொழி, மெய் எனும் மூன்றும் சிறந்தவர். அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நான்கும் அறிந்தவர். தமிழ்நாடெங்குந் திரிந்தவர். கோவலூரிலும் புல்வேளூரிலும் பல நாள் இருந்தவர். பலர்மீதுங் கவிபாடிப் பரிசு பெற்றவர். தினைத் துணை நன்றியையும் பனைத்துணையா மனத்தில் வைத்தவர். பரிசு கொடுத்தவர் சிறியராயினும் என்! வறியராயினும் என்! அவரைப் பெரியராக மதித்துப் பாடினவர். பரிசு சிறிதாயினும் என்! அதனையும் பெரிதா மதித்துப் பாடினவர். பரிசு கொடுத்தலினும் பாட்டுக் கேட்டலினும் பராமுகஞ் செய்தாரையும், பாடலருமை அறியா மூடரையும் வெறுத்துப் பாடினவர்.

உலகியலை நோக்கிக் "காலையி லொன்றுவர் கடும்பகலி லொன்றுவர்—மாலையி லொன்றுவர் மனிதரெலாம்" எனவும், "மதியாதார் முற்றம் மதித்தொருகாற் சென்று— மிதியாமை கோடிபெறும்" எனவும், "நட்புந் தயையுங் கொடையும் பிறவிக் குணம்" எனவும்,

மனைவி "ஏறுமாறு யிருப்பாளே யாமாயிற்—கூறுமற் சந்நியாசங் கொள்" எனவும், பொய்வழக்காடத் துணைபுரியும் புரட்டரைச் சுட்டி "வெல்லாவழக்கை விலைபேசி வெல்லுவிக்கும்—வல்லாளன் சுற்றம்போன் மாண்டு" "கைக்கூலி வாங்கிக் காலறுவான் றன்கிளையும்—எச்சமறுமென்று லறும்" எனவும், கவிகளைத் தாமா உணரும் வலியின்றிப் பிறர் புகழக் கேட்டுத் தாமும் அறிந்தவர்போன்று கேட்பாருக்கு "விரக ரிருவர் புகழ்ந்திடவே வேண்டும்—விரனிறைய மோதிரங்கள் வேண்டும்" எனவும் பாடினவர்.

கோவலூரில் இருந்தபோது பாரி என்னுஞ் சிற்றரசன் செய்து வைத்த நன்றிமறப்பது நன்றன்று என்று நினைத்து அங்கவை சங்கவை என்னும் அவன்புத்திரிகள் இருவரையும் அரிதின் முயன்று தெய்வீகன் என்னும் அரசனுக்கு விவாகஞ் செய்வித்தவர். அவ்விவாகத்துக்கு வேண்டும் பொருள்களெல்லாம் ஆண்டு வரும்படி கவிபாடி வருவித்தவர். பெண்ணையாறு நெய்யும் பாலுமாய்ப்பெருகி வரவும் பாடினவர். புல்வேளூர்ப் பூதன்கொடுத்த புளித்த மோரையும் புகழ்ந்து பாடினவர். வழியில் உணவு கிடையாது வாடியபோது தனக்கென வைத்திருந்த தண்ணீரடுப்ற்கையை உண்ணீருண்ணீர் என்றுபசரித்திந்த ஆட்டிடையனாகிய அசதி என்பவன் நன்றியையும் வியந்து கோவை ஒன்று பாடினவர்.

பாட்டுரைக்கும்போது கேட்டு மகிழ்தலைவிட்டுப் பட்டுநூற் சீலையைப் பார்த்துக்கொண்டு பராக்காயிருந்த சோழராசனை நோக்கிப் பட்டுநூற்சீலை நாலுமாதத்திற் கிழிந்துபோகும் "என்றுங் கிழியாதென் பாட்டு" என்றும் பாடினவர். கவிகளைக் கேட்டறியாத அரசனொருவன் செவிகளைச் சுட்டிப் "பாட்டு முரையும் பயிலாதன விரண்—டோட்டைச் செவியு முள" என்றும் பாடினவர். ஒரு வீட்டிலே உணவு கொடுத்த மனைவியையும், மறுத்த கணவனையு நோக்கிப் பிரமனை வெறுத்தும் பாடினவர். பாடல் விரும்பிய மூடர் சிலரை நோக்கி "நும்மை எங்ஙனம் பாடுவேன். அவிச்சுவையல்லது தமிழ்ச்சுவை தெருளீர்! உடீர் உண்ணீர்! கொடீர்! கொள்ளீர்!" என மறுத்தும் பாடினவர்.

நாலடிவெண்பாவாகிய நாலடியாரிலும், இரண்டடிவெண்பாவாகிய வள்ளுவர்குறளிலும் வைத்திருக்குஞ் சொல்லருமை நோக்கிப் "பழகுதமிழ்ச்—சொல்லருமை நாலிரண்டில்" எனவும், பாடும் பயிற்சி நோக்கிச் "செந்தமிழும் நாப்பழக்கம்" எனவும், வெண்பா இயற்றும் அருமை நோக்கிப் "புலவர்க்கு வெண்பாப்புலி" எனவும்,

வண்ணச்செய்யுள் விரைந்து பாட முடியாமை நோக்கி "ஆசுகவி வல்லவர்க்கு வண்ணம்புலி" எனவும், புலவர் சிலவர் செருக்கினை நோக்கிக் "கற்றதுகைம்மண்ணளவு கல்லாதுலகளவு வெறும் பந்தயங் கூறவேண்டாம் புலவீர்" எனவும் பாடினவர். அவைக்கஞ்சாமல் உரைக்கும் அருமை நோக்கி "வார்த்தைசொலின் நூறாயிரத்தொருவன்" எனவும் பாடினவர்.

ஆத்திசூடி, கொன்றைவேந்தன், வாக்குண்டாம், நல்வழி முதலிய நீதிநூல்களும், பந்தனந்தாதி, ஞானக்குறள் முதலிய வேறு நூல்களுஞ் செய்தவர்.

அறம்பொருளின்பம்வீடு.

ஈதலறந் தீவினைவிட் டீட்டல்பொரு ளெஞ்ஞான்றும்
காதலிருவர் கருத் தொருமித்—தாதரவு
பட்டதே யின்பம் பரனைநினைந் திம்மூன்றும்
விட்டதே பேரின்ப வீடு.

பெண்ணையாறு நெய்பால்பெருகியது.

முத்தெறியும் பெண்ணை முதுநீ ரதுதவிர்ந்து
தத்திய நெய்பா றலைப்பெய்து—குத்திச்
செருமலைதெய் வீகன் றிருக்கோவ லூர்க்கு
வருமளவுங் கொண்டோடி வா.

பாரத பாயிரகாரரும் பெண்ணையாற்று வருணனையிலே இதனைச் சுட்டி "அவ்வை பாடலுக்கு நறுநெய் பால் பெருகி யருந்தமிழறிவினாற் சிறந்து" என்பர்.

பூதன்கொடுத்த புளித்தமோர்.

வரகரிசிச் சோறும் வழுதுணங்காய் வாட்டும்
முரமுரென வேபுளித்த மோரும்—திரமுடனே
புல்வேளூர்ப் பூதன் புகழ்ந்துபரிந் திட்டசோ
றெல்லா வுலகும் பெறும்.

அசதிக்கோவை.

க. ஆய்ப்பாடி யாயர்தம் மைவே லசதி யணிவரையிற்
கோப்பா மிவளெழிற் கொங்கைக்குத் தோற்றிபக் கோடிரண்டுஞ்
சீப்பாய்ப் பரணிய தாய்ச் சிமிழாய்ச் சின்ன மோதிரமாய்க்
காப்பாய்க் கரவளை யாய்ப்பல்லக் கரகிக் கழிந்ததுவே.

உ. அலைகொண்ட வேற்கரத் தைவே லசதி யணிவரைமேல்
நிலைகொண்ட மங்கைதன் கொங்கைக்குத் தோற்றிள நீரினங்கள்
குலையுண் டடியுண் டடன்கையி லெற்றுண்டு குட்டுமுண்டு
விலையுண் டடியுண்டு கண்ணீர் ததும்பவும் வெட்டுண்டதே.

அசதிக்கோவையைப்பற்றிச் சிவஞானமுனிவரும் சோமேசர் வெண்பாவிலே "பன்னுமசதிநன்றிபாராட்டிக் கோவைநூல்—சொன்னானே யௌவைமுன்பு சோமேசா" என்றார்.

பிரமனைவெறுத்துப்பாடியது.

அற்றதலை போக வறாததலை நான்கினையும்
பற்றித் திருகிப் பறியேனோ—வற்றன்
மாமனையா னுக்கிந்த மானை வகுத்த
பிரமனையான் காணப் பெறின்.

---

## கச்சியப்பசிவாசாரியர்.

இவரூர் தொண்டைமண்டலத்துள்ள காஞ்சிபுரம். குலம் ஆதிசைவவேதியர் குலம். காலம் அந்தகக்கவிவீரராகவமுதலியார் காலம் என்பர். இவர் குமாரகோட்டத்தருச்சகர். குமரவேளருள் பெற்றவர். வடமொழி, தென்மொழி என்னும் இருமொழியுங் கற்றவர். வேதவேதாங்கங்களும், வேதாந்தசித்தாந்தங்களும், சைவாகமங்களும், சமயசாத்திரங்களும், இலக்கணலக்கியங்களும் மயக்கற உணர்ந்தவர். கவின்றோர்க்கினிமையும், நன்மொழிபுணர்த்தலும், நவையின்மையும் அமையக் கவிபாடல் வல்ல அருட்புலமையாளர். காந்தபுராணத்துச் சங்கரசங்கிதையிற் சிவரகசியகண்டத்து வரும் சம்பவகாண்டம் முதலிய காண்டங்கள் ஆறையும் மொழிபெயர்த்துப் பெருங்காப்பிய நடைதழுவ விருத்தயாப்பில் யாத்துக் கந்தபுராணம் என நின்று நிலவவைத்தவர்.

இப்புராணத்திற் பத்துப்பாட்டுச் சிந்தாமணி முதலிய பண்டைத் தமிழ்நூற் சொற்களும், உவமானம் முதலியவைகளும் வருகின்றன. தொல்காப்பியம் முதலிய இலக்கணங்களாற் பெறப்படும் அகப்பொருள் புறப்பொருட்டுறைகளும், மடக்குச் சிலேடை முதலிய அலங்காரங்களும் வருகின்றன. வேதாந்த சித்தாந்தப்பொருள்களும் வருகின்றன. உலோகாயதம், பௌத்தம் முதலிய சமயசாத்திரப் பொருள்களும் வருகின்றன.

ஐயிருவட்டம், ஆடுறுபசி, தட்டை, குளிர், தழலை முதலியன பத்துப்பாட்டுச் சொற்கள். "பாற்றியக்கமுநீழலுமாமெனப்பாட" "நீண்டதனி மூப்பகல நெஞ்சமருணீங்க—ஈண்டுநும் வரைக்குமரி யெய்தி யினிதாட" என்பன "பருந்து மதனிழலும் பாட்டுமெழாலும்" "திருநீர்க்குமரியாட—மூப்பொழியுமென்றான்" என்னும்

சிந்தாமணிப்பொருள். "நாற்றமுந் தோற்றமும்" என்பது முதலி யன அகப்பொருளிலக்கணப் பொருள்கள். "அடலையி னலத்தைவீ ட்டி" என்பது முதலியன மடக்கு. "அளவின்மிக்குறு பாணிபெற்ற தற்கவையரிதோ" என்பது முதலியன சிலேடை. "மேலுளபொரு ளுந் தத்தம்விளைவதும்" என்பது முதலியன வேதாந்தப்பொருள். "பல்லுயிர்க்கருளைப்பூத்துப் பவநெறிகாய்த்திட்டு" என்பது முத லியன சித்தாந்தப்பொருள். "நன்னலமாதரை நண்ணுமின்பமே யுன்னருமுத்தி" "ஆண்டொர்பேரின்பமுண்டென்ப ரதனையாரறி ந்தார்" என்பன முதலியன உலோகாயதமதப்பொருள். "கந்தமொ டுயிர்படுங்கணபங்கம்" "கந்தமற்றிறந்திடன்முத்தி" என்பது முத லியன பௌத்தமதப்பொருள்.

இவையன்றிப் பலவித கதைகளும் வருகின்றன. இதனைக் கிரமமாக அன்போடும் படிப்பவர் கேட்பவர் குமரவேள் பத்தியை யும், விரும்பிய வரசித்தியையும், பரமுத்தியையும் பெறுவர் என்பது அறிஞர் அங்கிகாரம்.

கந்தபுராணம்.

க. அடலையி னலத்தை வீட்டி யரும்பெற லாக்கஞ் சிந்தி
அடலையி லுணர்வின் றேகு மவுணர்கோன் றனை முற்றும்
அடலையி னெடுவே லண்ண லழலெழ விழித்த லோடும்
அடலையி னுருவா யண்டத் தொல்லுரு வழித்த மன்னோ.

இஃது அடிமுதன் மடக்கு. அடலை - வெற்றியை. இன் நல த்தை - இனிய சுகத்தினை. அடலையில் - அடற்கண்ணும். அடல் அயில் - வலிய கூரிய. அடலை - சாம்பர்.

உ. கல்லகங் குடைந்த செவ்வேற் கந்தனோர் தருவதாகி
வல்லியர் கிரியை ஞான வல்லியின் கிளையாய்ச் சூழப்
பல்லுயிர்க் கருளைப் பூத்துப் பவநெறி காய்த்திட் டன்பர்
எல்லவர் தமக்கு முத்தி யிருங்கனி யுதவு மென்றும்.

பல்லுயிர்க்கு அருளைப் பூத்து என்றது அறிவுந், தொழிலும், வலியுங், குணமுமின்றி அணுத்துவம் பூண்டு ஆணவமலம் என்னும் இருளிற்கிடந்து தடுமாறி இடருழக்கும் பல்வகையுயிர்க்கும் குரு டர்க்குக் கோல் கொடுத்தல்போலத் தனுகரணாதிகளைக் கொடுத்து அவ்விருளினின்றும் வெளிவருமாறு அருள்புரியக் கருதிய இச் சையை. இவ்வருள் காய்தோன்றற்குக் காரணமாகிய பூப்போன்று நிற்றலிற் பூ என உருவகிக்கப்பட்டது. இதனாற் கேவலநிலையிலே

உபகரித்தல் கூறினர். கேவலமாவது உளதாந் தன்மையாகிய தனிநிலை. "கேவலந்தன் னுண்மை" என்பது சித்தியார்.

பவநெறி என்றது ஆணவமாகிய அவ்விருளினின்றும் நீக்கி அவ்வுயிர்களுக்குத் தனுகரணுதிகளைக்கொடுத்து மயக்கம் நீக்குதற்கு இயன்ற வழியாகிய பிறவிவழியை. இது பூவினின்றுந் தோன்றிய காய்போலப் பயன்படனேக்கிக் காயென உருவகிக்கப்பட்டது. இதனுற் சகலநிலையிலே உபகரித்தல் கூறினர். சகலமாவது கலைமுதலியவற்ருெடு கூடிய நிலை.

அன்பர் என்றது பாசநீக்கமுஞ் சிவத்துவப்பேறும் அடைந்து சுத்தநிலையாளராகிய அபராவன்பினரை. சுத்தமாவது மலம் நீங்கிய தூயநிலை.

---

## கச்சியப்பமுனிவர்.

இவரூர் தொண்டைமண்டலத்துள்ள தணிகைத்திருப்பதி. குலம் வேளாளர்குலம். சமயம் சைவம். காலம் இற்றைக்கு நூற்றுப்பதினைந்து வருடங்களுக்கு முன் என்பர். இவர் திருவாவடுதுறையாதீன சீடர். சிவஞானமுனிவர்க்குத் தலைமாணவகர். கந்தப்பையர் முதலியோர்க்கு ஆசிரியர். இலக்கணஇலக்கியங்களும் தருக்கமுஞ் சித்தாந்தசாத்திரமுங் கற்றவர். தணிகைப்புராணம், திருவானைக்காப்புராணம், பேரூர்ப்புராணம், பூவாளூர்ப்புராணம், விநாயகபுராணம், தணிகையாற்றுப்படை, வண்டுவிடுதூது முதலிய பிரபந்தங்கள் செய்தவர்.

தணிகைப்புராணம், சிவகசிந்தாமணி என்னும் ஆருகதநூலைப் பேரிலக்கியமாகக் கொண்டாடுவார் தன்மையை நோக்கிச் சிவகசிந்தாமணிக்கு மேலதாகவும், அரிதுணர்தற்பாலதாகவும் ஆராய்ந்தெண்ணிச்செய்தது என்பர். அரிதுணர்தற்காரணமாகப் பத்துப்பாட்டு, எட்டுத்தொகை, பதினெண்கிழ்க்கணக்கு, சிவகசிந்தாமணி, சிலப்பதிகாரம் முதலிய இலக்கியங்களிற் பிரயோகித்திருக்கும் அருஞ்சொற்களையும், பொருள்களையும், வருணனைவகைகளையும், தொல்காப்பியம் முதலிய இலக்கணங்களில் வரும் அரிய விதிகளையும், அகப்பொருள் புறப்பொருட்டுறைகளையும் இடையிடை கோத்தியாத்தது. சிவஞானசித்தியார், சிவப்பிரகாசம் முதலியன கூறும் பதிபசுபாசலக்கணங்களையும், சிவதருமோத்தரங் கூறும் பரமதருமங்களையும், கந்தபுராணங்கூறுங் கதைகளையும் சுருக்கி அடக்கியது.

இரட்டுதல், கலித்தல், இறைகொளல், குடந்தம், வெறுத்தல், குரும்பி முதலியன பத்துப்பாட்டுச் சொற்கள். வருடைமான், கண்பொதிபானை, வளகு முதலியன கலித்தொகைச் சொற்கள். வருபுனல், வல்லரண், இருநீர், வினையுள் முதலியன திருக்குறட் சொற்கள். இளகுகாழகில், கொம்மைகொட்டல், இலைப்புரைகிளைத்தல் முதலியன சிவகசிந்தாமணிச்சொற்கள். "வளகுமேய்ந்து சேவகங்கொளுமான் மதமொழுக்கும்" என்பது முதலியன கலித்தொகைப் பொருள். "பல்கழுவேந்தலைக்கும் படர்கொலைக்குறும்பு" முதலியன திருக்குறட்பொருள். ஆப்பி, தேத்தடை, குன்றியலுத்தொடர் என்பன முதலியன தொல்காப்பியத்தரியவிதிகளமைந்தன. களவுப்படலக் கட்டளைக்கலித்துறைகள் அகப்பொருட்டுறைகள். "குடைநாட்கொளல் வாளுட்கொளல்" முதலியன புறப்பொருட்டுறைகள். நந்தியுபதேசம் பதிபசுபாசலக்கணம். அகத்தியனருள்பெறுபடலம் சிவதருமோத்தரம். சிபரிபூரணநாமப்படலம் கந்தபுராணகதை. இவ்வாறு வருவனவற்றையும் மற்றையவைகளையும் அங்கங்கு நோக்கி அறிக. இதனைப்பற்றிச் செந்தமிழ் முதலாந்தொகுதியிலும் எழுதினும். ஆங்குங் காண்க.

### தணிகைப்புராணம்.

இளகு காழகிற் சந்தனப் பொதும்பரெவ் விடனும்
வளகு மேய்ந்துசே வகங்கொளு மான்மத மொழுக்குங்
குளகு தேரிய வருடைமான் குப்புறு மடுக்கத்
தளகி னேடுபொட் டிரட்டுமொ லனைதொறுங் குரால்கள்.

இளகுதல் - தழைத்தல். காழ் - வைரம். வளகு - ஒருசெடி. சேவகங்கொளுமான் - யானை. சேவகம் - யானை துயிலிடம். ஒழுக்கும் - சொரியும். குளகு - விலங்குண்ணும் இலை. தேருதல் - ஆராய்தல். வருடைமான் - மலையாடு. குப்புறல் - கடத்தல். அடுக்கம் - பக்கமலை. அளகு - பெடை. இரட்டுதல் - மாறியொலிப்பித்தல். குரால் - கூகை.

### கட்டளைக்கலித்துறை.

குன்றிய லுத்தொடர் வல்லின முன்பின் குறுகநிற்பிற்
குன்றுவ துள்ள வளவையி னின்னெடு கோற்றொடியைக்
குன்றிற கீர்ந்தவ னுதியர் நன்கு குறிக்கினுமெங்
குன்றவர் வண்குலங் குன்றுவ புன்சொற் கொழுந்தெழுமே.

குன்றியலுத்தொடர் - குற்றியலுகரத்தொடர். வல்லினம் முன்பின் குறுக நிற்றல் - செக்குக்கணை என்பதிற்போல வல்லொற்று

முன்னும் பின்னும் அது குறுக நிற்றல். உள்ள அளவையிற் குன்றுவது - குற்றுகரம் தனக்குள்ள அரைமாத்திரையிற் குறைந்து கான் மாத்திரையாவது. இது தொல்காப்பிய விதி. குன்றிறகேர்ந்தவன் - இந்திரன். புன்சொல் - பழிமொழி.

---

## கடிகைமுத்துப்புலவர்.

இவரூர் பாண்டிமண்டலத்துள்ள எட்டயபுரம். சமயம் சைவம். காலம் இற்றைக்கு இருநூறு வருடங்கட்கு முன் என்பர். இவர் திருக்கு, மடக்குச், சிலேடை முதலியன அமைத்துக் கவி பாடுவதில் வல்லவர். கவியின் மாத்திரமோ! வார்த்தைகளிலுஞ் சிலேடை வழங்குவர். மனைவியின் திவசத்துக்கு அரிசி வாங்கிக் கொண்டு வருதலைக் கண்டார் ஒருவர் யாது புலவீர்! என்றபோது தலைவிதியின்வசம் எனவும், தலைவியின் திவசம் எனவும் பொருள் படுமாறு "தலைவிதிவசம்" என்றவர் என்பர். ஒருகவியிலே சந்து (தூது) போன அன்னம் சும்மா வரிற் சண்டை மூளும் எனவும், சந்தனக்குழம்பு விலையின்றி வரிற் பூசிக்கொள்ளலாம் எனவும் பொருள்படுமாறு "சந்தனஞ் சும்மா வரிற் பூசலாம்" என்றவர்.

பல தனிநிலைக்கவிகளுக்கும், சமுத்திரவிலாசம், காமரசமஞ்சரி முதலிய பிரபந்தங்களுக்கும் ஆக்கியோர். சமுத்திரவிலாசம் மடக்குஞ் சிலேடையும் மலிந்தது. கழிக்கரைப்புலம்பல் என்னும் அகப் பொருட்டுறை ஒன்றேயுடையது. கழிக்கரைப்புலம்பலாவது தலைவி விருப்பமிகுதியினாற் கழிக்கரைக்கணுள்ள பலபொருள்களையும் விழித்துப் புலம்புதல். இவர் கவிகளுள்ளே பல எட்டயபுரத்தலைவராயிருந்த வேங்கடேசுர எட்டப்பபூபதி மேலன.

### சமுத்திரவிலாசம்.

உள்ள திருக்கை காணீரே யுறங்கா திருக்கை காணீரே
ஓசைக் கடலைப் பொருமலையே யொழியேன்விரகப் பொருமலையே
கள்ள முதாங் குவளைகளே கழலுங் கரந்தாங்கு வளைகளே
கரையிற் படராத் துப்பீரே கலந்ததுடலத் துப் பீரே
அள்ள லளையுங் களிக்கரையே யழைப்பார் மாதர்களிக் கரையே
ஆறு வெருப்புக் காற்றேனே யாழிபுடைப்புக் காற்றேனே
வெள்ள மூரும் பானத்தே விரும்பா திருந்தேன் பானத்தே
வெங்க டேசு ரெட்டனையே மேவத் தடுக்கு மெட்டனையே.

திருக்கைகாள் - திருக்கைமீன்களே! உறங்காது இருக்கை. பொரும் அலை - பொருகின்ற திரை. பொருமல் - துயர். காம

தாங்கு - கையிற்றாங்கிய. துப்பிரே - பவளமே. பீர் - பசலை. களி - சேறு. இக்கரை - மன்மதனுரை. கால் தேன் - காலையுடைய வண்டு. புடைப்புக்கு - அடிக்கு. பால் நத்து - வெள்ளிய சங்கு. பானம் - பருகுவது. எட்டனை - எட்டு அன்னை.

தனிநிலை.

திருந்தலரி கலையடக்கும் கிளைவைமரு தப்பசெய சிங்க மென்னைப்
பொருந்தலரி தாயிருந்தாற் பூத்தானஞ் செய்யானோ போர்வே ளையா
வருந்தலரி குளையலரி மாவலரி பூவலரி மாதர் கீழ்பால்
இருந்தலரி வாராமுன் னிரவிதனின் மதியம்வந்தா லென்செய் வாளே.

திருந்தலர் - பகைவர். இகல் - போர். அரிது - அரியது. பூத்தான் அஞ்சு - பஞ்சபாணம். இகுளை - தோழி. அலர் - பழிமொழி. அலரி. பூவல் - சிவப்பு. அரி. அலரி - சூரியன். இரவு இதனின். இது பிரகேளிகை. அலரி ஏழு தொனித்தல் அறிக.

நான்கமாவாசை.

கலக்கமா வாசைவெட்க மறியாதா வென்னமதி கவலை தன்னை
விலக்கமா வாசைவலக் குழலைமுடி யென்றதையும் வெறுத்தாள் விட்ட
இலக்கமா வாசையென வோதியென்ன துயரகற்று நிதனை நீபோய்த்
துலக்கமா வாசைமட்டுங் காங்கெயாசகி யேனென்று சொலச்சொன் னாளே.

கலக்கமா - கலக்கந்தானா? ஆசை - விருப்பு. விலக்கு அமா. அமா - அம்மா. வா. சைவலம் - பாசி. இலக்கம் மா - இலக்காகிய வண்டு. ஆசு - குற்றம். ஐயென - விரைந்து.

---

## கணபதிப்பிள்ளை.

இவரூர் யாழ்ப்பாணத்துள்ள புலோலி. குலம் வேளாளர் குலம். சமயம் சைவம். காலம் இற்றைக்குப் பதினைந்து வருடங்களுக்கு முன். இவர் குமாரசுவாமிப்புலவருக்குச் சியேட்டர். சிவசம்புப்புலவரிடம் இலக்கண இலக்கியங்கற்றவர். பின்னர்ச் சென்னை சென்று அங்கிலமும் சங்கதமும் நன்கு கற்றவர். சங்கதத்திலுள்ள வில்கணீயம், இரகுவமிசம் ஆலாசியமான்மியத்தில் வாதபுரேசர் கதை முதலியவைகளைத் தமிழிற் பெயர்த்து வாக்கியவடிவில் ஆக்கினவர். சங்கதங் கற்குந் தமிழர்பொருட்டுப் பிரதமவாசகபுத்தகமும் பிறவுஞ் செய்தவர். வேதாரணியேசுவரர்மீதோர் ஊஞ்சற்பதிகமும் பாடினவர்.

வில்கணியம் வில்கணகவிராசன்சரித்திரம் கூறும் நூல். வில்கணகவிராசன், யாமினிபூரணதிலகை என்னும் இராசகுமாரிக்குத் தான் காவியநாடகாலங்கார சாத்திரங் கற்பித்ததையும், அவளைத் தனக்கு மனைவியாக்கிய வரலாற்றையும், சந்திரோதய வருணனையையும், வித்தியாமகத்துவம் முதலிய பிறவற்றையும் இதன்கட் கூறுவன்.

வில்கணீயம்.

மந்திரி சேனா யென்றன் மாதவந் தன்னால் வந்த
சந்திர வதனை யாருந் தையல்சந் நிதந் தன்னில்
தந்திரி வீணை தன்னிற் சமமிலாள் சாகித் யந்தான்
வந்திடும் வகையா தென்ன மகிழ்ந்தெனக் குரைப்பாய் நீயே.

வேதாரணியேசுவரரூஞ்சல்.

மணியோங்கு மகோததியின் பால தாய
மறைக்காட்டு மதியொளிரு மௌலி யார்மேல்
அணியோங்கு மூஞ்சலிசை யடியார் தங்கள்
அடிக்கடியேன் றமியேனு தரத்திற் பாடப்
பணியோங்கு மென்பாயற் பதுமக் கண்ணன்
பழிதொலைத்தாட் கொண்டவருட் பரம னார்தங்
கணியோங்கு வீரகத்திச் சேத கன்செங்
கமலமலர் நிகரடிகள் காப்ப தாமே.

---

## கணிமேதாவியர்.

இவர் மதுரைச் சங்கப்புலவருள் ஒருவர். திணைமாலை நூற்றைம்பது என்னும் பிரபந்தஞ்செய்தவர். இப்பிரபந்தம் பதினெண்கீழ்க்கணக்குள் ஒன்று; அகப்பொருட்டுறை அமைந்தது. நச்சினார்க்கினியத்திலும், நன்னூல்விருத்தியிலும், அகப்பொருள்விளக்கத்திலும் உதாரணமாய் வந்தது.

வெண்பா.

வினைவிளையச் செல்வம் விளைவதுபோ னீடாப்
பனைவிளைவு நாமெண்ணப் பாத்தித்—தினைவிளைய
மையார் நடங்கண் மயிலனையாய் நீத்தீண்டு
கையார் பிரிவித்தல் காண்.

நீத்திண்டு கையார்-வேங்கையார். இது நன்னூல்விருத்தியிலே குறிப்புக்கு உதாரணமாய் வந்தது.

---

## கணேசபண்டிதர்.

இவரூர் யாழ்ப்பாணத்து வண்ணார்பண்ணை. குலம் வேதியர் குலம். சமயம் சைவம். காலம் இற்றைக்குப் பதினைந்து வருடங்களுக்கு முன். வடமொழி தென்மொழி என்னும் இருமொழியுங் கற்றவர். இலக்கியலக்கணந் தெரிந்தவர். ஆகமங்களினுஞ் சென்றவர். பாடுந் திறமும் பயின்றவர். பாண்டிநாட்டுள்ள இளையாற்றங் குடியில் இருக்கும்போது அத்தலபுராணத்தை அந்நகர வணிகர் கேள்விப்படி தமிழிற் பெயர்த்து விருத்தப்பாவில் யாத்தவர்.

இளைசைப்புராணம்.

அப்பெரு மான்மி யத்தை யரவணி சடையி னார்தஞ்
செப்பரு முகத்தில் வந்த சீர்கெழு குரவன் றானும்
எப்பெரும் புகழும் வாய்ந்த விளசைமா நகரத் தாரும்
தப்பருந் தமிழின் பாவாற் பாடியே தருக வென்றார்.

---

## கதிரைவேற்பிள்ளை.

இவர் யாழ்ப்பாணத்துள்ள உடுப்பிட்டியிலே வேளாளர் குலத்திலே பிரபலம்பெற்று விளங்கிய குமாரசுவாமி முதலியார்க்கு மைந்தர். அத்துவக்காத்தும், இலங்கைச்சட்டநிரூபணசபைப் பிரதிநிதிகளுள் ஒருவருமாகிய கௌரவ பாலசிங்கத்துக்குத் தந்தையார். கடவுட்பத்தியும், நல்லொழுக்கமும் உடையவர். இற்றைக்குப் பன்னிருவருடங்கட்கு முன் இருந்தவர்.

அங்கிலம், தமிழ் என்னும் பாஷைகளிரண்டினும் பண்டிதர். அங்கிலவரசநீதிகளும், மனுநீதிகளும் நன்கறிந்தவர். ஊர்காவற்றுறை நியாயசாலையிலே நீதிபதியாயிருந்தவர். பொய்யுடை ஒருவன் சொல்வன்மையினுல் மெய்போலத்தோன்றும் பொய்ம்மொழிகளையும், மெய்யுடை ஒருவன் சொலமாட்டாமையாற் பொய்போலத் தோன்றும் மெய்ம்மொழிகளையும் நடுநின்று தடுமாற்றமின்றிக் கேட்டுத் தெளிந்துணருந் திறமுந் தெரிந்தவர். தமிழ்ப்பாஷையிலே இலக்கியலக்கணங்களும், வேதாந்த சித்தாந்தங்களும், தருக்கநூலும், நீதிநூல்களும், வேறுநூல்களுங் கற்றவர். கற்றலுங் கற்றவை கேட்டலும் கேட்டதன்கண் நிற்றலுங் கைகூடப் பெற்றவர். நற்குணம், நற்செயல், நன்றியறிவு முதலியவைகளைப் பெரிதும் பேணினவர்.

செல்வர்க்கழகு செழுங்கிளைதாங்கல். பொறுத்தார்க்குப் பொன்றுந் துணையும் புகழ். அடக்க மமரருளுய்க்கும். நன்றல்லதன்றே மறப்பதுநன்று. எண்ணித்துணிக கருமம் என்பன முதலிய பெரியோர் வாக்குகளைப் பேணும் முறையும் அறிந்தவர். அதிகாரம் செல்வம் முதலியவற்றால் அகங்காரங்கொண்டு பழிப்படலும், ஆடம்பர வேடம்பூண்டு வெளிப்படலும், பிறன்பழி கூறலும், சினந்தலைக்கொண்டு மனந்தடுமாறலும், பழிபாவங்கள் தேடலும் அறியாதவர்.

"தேடினர் யாவரேகொ லெழுவகையானுஞ் சீர்த்தி" எனப் பாரதபாயிரகாரர் கூறிய எழுவகையுள்ளே நூல்செய்தல், அதனினமாகிய செய்வித்தல் என்னும் இருவகையானும் சீர்த்தி தேடினவர். தமிழ்கற்போர்க்குப் பயன்படுமாறு பலவருடப் பிரயாசத்தோடும் செயற்கரிய பெருநூல் ஒன்றுசெய்தவர். அப்பெருநூல் இப்பொழுது கௌரவ பாலசிங்கப் பெருமகன் முயற்சியால் மதுரைச் சங்கப்புலவராலும், சங்கத்தலைவராலும் பரிசோதித்துத் தகரம் வரையும் பதிப்பிக்கப்பட்டுவருகின்ற தமிழ்ச்சொல்லகராதி.

இவ்வகராதியிலே இலக்கணமும் இலக்கியமுமாக ஏறக்குறைய நானூறு தமிழ்நூல்கள் நோக்கியும், வடமொழி அபிதானிகம் நோக்கியும் ஆராய்ந்து சொற்களும் பொருள்களுஞ் சுத்தி பெறச் சேர்த்தவர். நம்மையும், உடுப்பிட்டி ஆறுமுகப்பிள்ளையையும், சரவணமுத்துப்புலவரையும், பிறரையும் சிலசில பாகங்களுக்கு இலேககர்களுந் துணைவர்களுமாகக் கொண்டவர். தர்க்கபரிபாஷையைப் பரிசோதித்து அச்சிட்டவர். வித்தியாதர்ப்பணம் முதலிய பஞ்சிகைகளிலே வித்தியாவிடயங்கள் பல வரைந்தவர். இலக்கண சந்திரிகை, இரகுவமிசக்கருப்பொருள் என்னும் இரு நூல்களுஞ் செய்வித்தவர். அச்சிடத் திரவியசகாயமுஞ் செய்தவர்.

அகராதிக்காப்பு.

திருவா குலகஞ் சிருட்டித் தளிக்கும்
அருவார் பொருட்டென் னகம்.

---

## கந்தசாமிப்புலவர்.

இவரூர் பாண்டிமண்டலத்துள்ள திருப்பூவணம். சமயம் சைவம். காலம் இற்றைக்கு நூற்றுமுப்பது வருடங்களுக்கு முன் என்பர். திருக்கும் மடக்கும் பாடுதலிற் சிறந்தவர். அப்பனூர்ப் புராணம், பூவணப்புராணம், பூவணவுலா முதலியன செய்தவர்.

## ஆப்பனூர்ப்புராணம்.

பெருமுலைப்பா லகன்பிரமன் கண்டறியாப் பெருந்தகைமேற்
பொருமுலைப்பான் மெழுகினுளம் புரைந்துருகத் தமிழ்பாடும்
மருமுலைப்பா லரும்பனைய மணிமுறுவன் மலைமகளார்
திருமுலைப்பான் மணக்கமழ்வாய்ச் செல்வனையாம் பரவுவாம்.

முலைப்பாலகன் - விட்டுணு. முலை இடைக்குறை. உலைப்பால் மெழுகின். முலை பால் அரும்பு - முல்லையின் வெண்மையான அரும்பு.

## பூவணப்புராணம்.

சேய்க ணின்றவைக் கீவது முத்தமே
சிற்றில் கோலிச் சிதைப்பது முத்தமே
பாய்பு னற்றிரை சேர்வது பண்ணையே
பாட லெங்கும் பயில்வது பண்ணையே
வாய்தி றந்து வழங்குவ வள்ளையே
மான னார்கடம் வார்காதும் வள்ளையே
ஓய்ம ருங்கு லுடுப்பது சேலையே
உற்ற கண்களொப் பாயது சேலையே.

சேய்கள் - பிள்ளைகள். அவை - தாய். பண்ணை - வயல், சவை. வள்ளை - உலக்கைப்பாட்டு, வள்ளைக்கொடி. சேல் - ஒருமீன்.

## பூவணவுலா.

சேவையுலாங் கொண்ட திருப்பூ வணர்மேல்வெண்
பாவையுலாம் பூவையுலாப் பாடவே—கோவைச்
சிரத்தந்தத் தந்திவண்ணன் செம்மலென வந்த
கரத்தந்தத் தந்திவண்ணன் காப்பு.

சேவை - எருதை. வெண்பாவை - சரசுவதி. சிரத்து அந்தத்து - தலையோட்டினழகையுடைய. செம்மல் - மகன். தந்தம் - கொம்பு. தந்தி - யானை.

## தேரிவைப்பருவம்.

க. பூவண வாணனஞ்சொற் பொன்னனையாட் கன்றளித்த
மாவணக் காதை வகுத்தெழுதி—ஓவியத்திற்

உ. காட்டு கெனநிறைபொன் கைக்கொடுப்ப வோர்படத்தில்
தீட்டி யவனவள்முன் சென்றிருந்து—தோட்டலர்மென்

௩. போதரசு கையாற்செய் பொன்னனையாய் பொன்னனையாள்
மாதரசு வாழ்பொன் மனையிதுபார்—கோதை

ச. புலரியிற் போந்து புனல்வைகை கைமேற்
பலனுய்க்க மூழ்கும் படிபார்—நலனுய்க்கும்

௫. கண்மணி பூண்டுமெனக் காமுறுவெண் ணீறணிந்து
பெண்மணியன் னாளிருக்கும் பெற்றிபார்—உண்மைத்

௬. தபத்தியானப் பெண்ணரசு தாழ்விலெழுத் தஞ்சுஞ்
செபத்தியானஞ் செய்யுஞ் செயல்பார்—சுபத்தியானஞ்

௭. செய்து சிவனைத் திருவர்ச் சனைமுடித்துக்
கைகுவித்து மாதிருக்குங் காட்சிபார்—பெய்வளையார்

௮. ஆயத் தொடும்பூவை யங்கணனைச் சேவிக்கக்
கோயில் புகுந்துநின்ற கொள்கைபார்—ஏயத்

௯. திருத்தஞ்சி லோதி திருமுன்பு சுத்த
நிருத்தஞ்செய் கோல நிலைபார்—திருத்தம்

௧௦. புரிந்தங்கு நின்றரிதிற் போந்து மனைக்குட்
பரிந்தங் கிருக்கும் படிபார்—அருந்த

௧௧. முருந்து நகைமனைக்குண் மொய்த்தீண்டிச் செல்லும்
திருந்து திருத்தொண்டர் திரள்பார்—வருந்தங்கள்

௧௨. நாய னடியாரை நண்ணி யெதிரிறைஞ்சித்
தாய வமுதருத்துந் தோற்றம்பார்—மேயசிவன்

௧௩. தன்னுருவம் பொன்னுருவ மாகச் சமைக்கவிளங்
கன்னி சமைத்த கருவுருப்பார்—அன்னங்

௧௪. தொடுத்த கருத்தறிந்து சுந்தரப்பே ரண்ணல்
எடுத்தசித்த வேடத் தெழில்பார்—வடித்தவயில்

௧௫. ஒத்தவிழி மாளிகைமுன் னுற்றொருபால் யோகபட்டச்
சித்தரிறு மாந்திருக்குஞ் செய்கைபார்—அத்தகைமை

௧௬. கண்டெதிர் சென்றுமலர்க் கால்பணிந்தன் பென்னுமயல்
கொண்டெதிர் நிற்குமவள் கொள்கைபார்—வண்டேரும்

௧௭. நெய்ய குழல்வருந்து நின்கருத்தே தென்றிரங்க
ஐயர் முறுவ லரும்புதல்பார்—தையலரி

௧௮. காணுத் திருவுருவங் காணுங் கருத்தாவப்
பூணூர்க் குரைக்கும் புதுமைபார்—நீணகைச்

௧௯. சித்த குரைப்படியத் தேமொழியில் விற்கரும்பொன்
அத்தனையும் முன்புவைத்த வார்வம்பார்—வைத்ததன்மேல்

௨௦. நீற்றைச் சிதறியயர் நேரிழைநீ யித்தையெரி
ஏற்றப் பசும்பொன்னா மென்பதுபார்—கோற்றொடியும்

௨௧. கட்டு சடைச்சித்தர் கருதுமுறை யேயெரிபெய்
தட்டகரும் பொன்செம்பொ னானதுபார்—வட்டமுலைக்

உஉ. கொம்பனாள் பூவணத்தெங் கோமானை யாணிநீர்
செம்பொனாற் கண்ட திருவுருப்பார்—விம்பவாய்

உங. வள்ளிமுத்தங் கொள்ளு மகப்பெற்றேன் மேனியைக்கண்
டள்ளிமுத்தங் கொள்ளுமவ ளன்புபார்—வெள்ளிவெற்பர்

உச. அன்புக் களியவ ளங்கை நகரேகை
தன்பொற் கபோலந் தரித்ததுபார்—வன்பிற்

உரு. பிடித்த விரதப் பெரும்பேறு பாவைக்
கடுத்த விசேட மதுபார்—முடித்தகுழல்.

இது தெரிவைப்பருவத்தாட்குச் சித்திரகாரன் ஒருவன் பொன்னனையாள் என்னும் உருத்திரகணிகையுடைய வடிவம், வீடு முதலியவைகளைச் சித்திரப்படாத்திலே தீட்டி ஒவ்வொன்றையுந் தனித் தனி சுட்டிக்காட்டி இது இது எனக் கூறும் பாகம். இவள் சிவனடியார்க்குச் செய்யும் விருந்தோம்பலை வியந்து சிவஞானமுனிவரும் "பொன்னனையா ளன்பருக்கே போனகமீந் தன்னருளாற்—சொன்னமிகப் பெற்றாள் சோமேசா—பன்னில்—வருவிருந்து வைகலுமோம்புவான் வாழ்க்கை—பருவந்து பாழ்படுத லின்று" என்றார்.

---

## கந்தப்பையர்.

இவரூர் தொண்டைமண்டலத்துள்ள தணிகையம்பதி. குலம் சங்கமகுலம். சமயம் வீரசைவம். காலம் கச்சியப்பமுனிவர் காலம். இவர் கச்சியப்பமுனிவருக்கு மாணவகர். விசாகப்பெருமாளையர், சரவணப்பெருமாளையர் என்னும் இருவருக்குந் தந்தையார். நூலுரைகள் செய்யும் கல்வித்திறமுடையவர். தணிகையுலா, தணிகைக் கலம்பகம், தணிகைப்பிள்ளைத்தமிழ், தணிகையந்தாதி முதலிய பலவித நூல்கள் செய்தவர். பழமலையந்தாதியுரை முதலிய உரைகளுஞ் செய்தவர்.

### தணிகையுலா.

க. ஆரென்றா ளித்தேரி லன்னமே செட்டியிவன்
பேரென்றா ளப்போதப் பேதையுந்தான்—சீரொன்று

உ. செட்டியா மாமயிற் றின்னவவ லோகென்னக்
கட்டிவாங் கிக்கொடென்று கண்பிசைந்தாள்—பட்டிவள்ளி

ங. கைவளைய லேற்றியிரு காலில் வளைந்தேத்தி
மைவளையு நெஞ்ச மயலேற்றி—வெய்ய

௪. இருட்டு விடியாமு னினைத்தவர்கள் காணாமற்
றிருட்டுவியா பாரஞ்செய் செட்டி—வெருட்டியொரு

௫. வேடுவனா யோர்புலவன் வெண்பாவைக் கைக்கொண்டு
கோடு திரியுங் குறச்செட்டி—பாடியநற்

௬. கீரனைப்பூ தத்தாற் கிரிக்குகையுட் கற்சிறைசெய்
தோரரிய பாவை யுகந்தணைந்து—கீரனுக்கு

௭. வீட்டுவழி காட்டியிடும் வேளாண்மை யாஞ்செட்டி
ஆட்டினுகந்தேறு மன்னதா னச்செட்டி—ஈட்டுபுகழ்த்

௮. தேவேந் திரன்மகள்பாற் சிந்தை குடிகொண்டு
நாவேந் தருக்கின்ப நல்குசெட்டி—பூவேந்திக்

௯. கண்டு பணிபவர்கள் காசுபறிக் குஞ்செட்டி
பண்டறுவ ரூட்டுதன பாலசெட்டி—தொண்டர்

௧௦. மதுரையிற்சொக் கப்பசெட்டி மைந்தனிளஞ் செட்டி
குதிரை மயிலாங் குமரசெட்டி—சதுருடனே

௧௧. சிவபர வைக்கியஞ் செய்திடுகெந் தப்பசெட்டி
மூவர் வணங்குமுரு கப்பசெட்டி—பாவனைக்கும்

௧௨. அப்பாலுக் கப்பாலா மாறுமுகச் செட்டியிவன்.

இது தேரிலேறி வீதியிலே பவனிவரும் முருகபிரானைப் பேதைப்பருவப் பெண்ணொருத்தி யாவர் என்று வினவியபோது செட்டி. செட்டி என்று வருணனையோடு கூறிய பாகம்.

---

## கபிலர்.

இவரூர் பாண்டிமண்டலத்துள்ள வாதவூர். வாதவூரைப் பழைய திருவிளையாடல் பாடினவர். "நீதியார் மதூகநீழ னெட்டிலை யிருப்பை யென்றோர்—காதல்கூர் கவிதை பாடுங் கபிலனார் பிறந்த மூதூர்" என்றுங் கூறுவர். குலம் வேதியர்குலம். சமயம் சைவம். காலம் கடைச்சங்ககாலம். கல்வியின் பெருமைநோக்கி "நல்லிசைக் கபிலன்" எனவும், "வெறுத்த கேள்வி விளங்கு புகழ்க் கபிலன்" எனவும் புலவராற் புகழப்பட்டவர்.

பாரி, நள்ளி, பேகன் முதலிய வள்ளல்களைப் பாடிப் பரிசில் பெற்றவர். பதினெண்கிழ்க்கணக்குள் இன்னாநாற்பது என்னும் நீதி நூலும், பத்துப்பாட்டுட் குறிஞ்சிப்பாட்டும், எட்டுத்தொகையுள் அகநானூறு, புறநானூறு, ஐங்குறுநூறு, நற்றிணைநானூறு முதலிய

தொகைநிலைச் செய்யுள்களிற் சிலசில செய்யுள்களுஞ், சில தனி நிலைச் செய்யுள்களுஞ் செய்தவர். இடைக்காடர், பரணர் முதலிய புலவர்களுக்கு நண்பர்.

புறநானூறு.

பாரி பாரி யென்று பலவேத்தி
ஒருவர்ப் புகழ்வர் செந்நாப் புலவர்
பாரி யொருவனு மல்லன்
மாரியு முண்டீண் டுலகு புரப்பதுவே.

தனிநிலைச்செய்யுள்.

நெட்டிலை யிருப்பை வட்ட வொண்பூ
வாடா தாயிற் பீடுடைப் பிடியின்
கோடேய்க் கும்மே வாடிலோ பைந்தலைப்
பரதர் மனைதொறு முணங்கும்
செந்தலை யிறவின் சீரேய்க் கும்மே.

---

## கம்பர்.

இவரூர் சோழநாட்டுள்ள திருவழுந்தூர். தந்தையார் ஆதித்தர். குலம் உவச்சர்குலம். சமயம் வைணவம். காலம் "எண்ணிய சகாத்த மெண்ணூற் றேழின்மேல்" என்பர். இவர் சடையப்பமுதலியாராற் கல்விகற்றும் உண்டிபெற்றும் வளர்ந்தவர். அந்நன்றியை மரணதசையிலும் மறவாதவர். கலைமகள் வரத்தாற் கவித்துவங் கூடினவர். பலகவிகளும் பாடினவர். கவிக்குரிய மொழிநயங்களுந், தொடைநயங்களும், தெளிவு முதலிய குணநயங்களும், ஏந்திசை முதலிய இசைநயங்களும் இனிதுணர்ந்தவர். கல்விப்பெருமையுங் கவித்தலைமையும் நோக்கிக் "கல்வியிற் பெரியர்" என்றும் "கவிச்சக்கரவர்த்தி" என்றுஞ் சொல்லும் புகழுரையும் அடைந்தவர்.

அகளங்கசோழராசனுடைய அவைக்களப்புலவராயும் இருந்தவர். அகளங்கசோழராசனுஞ் சடையப்பமுதலியாரும் விரும்பிய வண்ணம் இராமாயணம் என்னும் பெருங்காப்பியமும் பாடினவர். பாடிய இராமாயணத்திலே பாடுவிக்கும் பெருமையும் பரிசிலீயும் வண்மையுமுடையவர்கள் என்பது புலப்பட அவர்களையுங் காட்டுவர். சோழராசனைப் "புவிபுகழ்சென்னிபேரமலன்றோள்புகழ்—கவிகடம்மனையெனக்கனகராசியும்" எனவும், "சென்னிநாட்டெரியல்வீரன்றியாகமாவினோதன்" எனவும், முதலியாரை "மண்ணவர்

வறுமைநோய்க்குமருந்தனசடையன்" எனவும், "மழையென்றுசங் கைகொண்டகொடைமீளி" எனவும், "சந்தனிபுயத்துவள்ளல்சடை யனே" எனவுங் கூறுவர்.

விட்டுணுவுஞ் சிவனும் வேறு வேறல்லர். இருவரும் ஒருவரே என்பது புலப்பட "யாவரும் வணங்கு மூலத் தொருவரா மிருவர் தம்மை" எனவும், "அரனதிக னுலகளந்த வரியதிக னென்றுரைக்கு மறிவி லார்க்குப் பரகதிசென் றடைவரிய பரிசேபோல்" எனவும், "பாஞ்சுடர்ப் பண்ணவன் பண்டு விண்டொடர் புரஞ்சுட" எனவுங் கூறுவர்.

சிலசில கவிகளிலே உலகியனெறி முதலியவைகளையுங் காட்டு வர். நல்லோர் கூறும் நீதிகளைப் புல்லர் கேளாமை நோக்கி "கல்லாப் புல்லர்க்கு நல்லோர் சொன்ன பொருளெனப் போயிற்று" என்பர். தீங்கொன்றுஞ் செய்யாதவர்க்குப் பகைவரின்மை நோக்கித் "தீயன செய்யாராயின் யாவரேசெறுநரம்மா" என்பர். செல்வம் பெற்ற பின் செருக்குறுவார் செயல்நோக்கிப் "பெறலருந்திருப் பெற்ற பின் சிந்தனை பிறிதாம்" என்பர். வாக்குநலமுடையார்க்கு யாவரும் அடங்குதல் நோக்கி "வாசகம் வல்லார்முன் னின்றியாவர் வாய்தி றக்கவல்லார்" என்பர். ஒருகுற்றமுமில்லாதவர் உலகிலில்லாமை நோக்கி "அற்றுர் நவை யென்றலுக் காருளர்" என்பர். நல்லிசைப் புலமையுள்ளார் கவிகளின் தெளிவையுந் தண்ணெனவையும் நோக் கிச் "சவியுறத் தெளிந்து தண்ணென் றொழுக்கமுந் தழுவி" என்பர். நல்லிசைப்புலமையில்லார் கவிகளின் பொருண்மயக்கம் நோக்கிப் "புன்கவியெனத் தெளிவின்றி" என்பர்.

கவிகளிலே அமைதற்பாலனவாகிய சொல், பொருள், அணி முதலியனவெல்லாம் அழகுற அமைப்பர். பெரும்பாலுங் கவிகளைக் கலிவிருத்தம், தரவுகொச்சகம், கலிநிலைத்துறை முதலியனவாக எடுத்துக்கொண்டு, சொற்களையும் சிறியனவாக அவைகளிலமைத் துப் பரந்த பொருள்களையெல்லாம் சொல்லிச் செல்லுவர். வேண் டுழிப் பொருணோக்கிப் புதுச்சொற்களையும் ஆக்குவர். இராமனை அழகன் என்பர். அகளங்கனை அமலன் என்பர். வடசொற்களைத் தமிழ்ச்சொற்கள் என்னுமாறு தற்பவமாக்குவர். இலக்குமணனை இலக்குவன் என்பர். அகலியையை ஆலிகை என்பர். சொற்றொடர் களையுஞ் சிறுசிறு வாக்கியமாக முடித்துச் செல்லுவர். சுருக்கம் நோக்கிக் குறிப்புச்சொல்லும் குறிப்புப்பொருளும் பரக்கக் கூறுவர். நட்பவணி கருதி "மாரனை நோக்கினுண் மாதை நோக்கினள்"

என்பர். விரோதாபாசவணிகருதி "பச்சைமா - வேழு மேறப்போ யாறுமேறினர்" என்பர். "இராவனன்கோபமிற்கவிந்திரகோபமென்னே" என்பர். மடக்கணிகருதி "மாயமானுயினன் மாயமானுயினன்" என்பர். "கொடுப்பதழுக் கறுப்பான்சுற்றம்" என்னுந் திருக்குறள் கருதி "கொடுப்பது விலக்கு கொடியோர் தமது சுற்றம்—உடுப்பதுவு முண்பதுவு மின்றி யழியுங் காண்" என்பர்.

இவ்விராமாயணக் கவிகள் சிலவற்றின் பொருள்களையும், பிறவற்றையுஞ் செந்தமிழ்ப்பத்திரிகையிலே 'சுருங்கச்சொல்லல், ஸ்ரீராமவருணனை, பரதநீதிசாரம்' என்னும் விடயங்களிலே அமைத்துக் கூறினும். வேண்டுவார் ஆண்டுங் காண்க. ஒரு சுலோகத்தில் வடநாலார் கூறிய இராமாயணத்தையும் ஏகவிருத்தராமாயணம் என மொழிபெயர்த்திருக்கின்ரும்.

இன்னும் இவர் சோழராசனைப் பிரிந்து சோழதேசத்தையும் விட்டு வேற்றுநாடுகளுக்கும் போக்குவரவு செய்தவர். ஆங்காங்குப் பலரையும் பாடினவர். நன்குமதிப்புந் தேடினவர். கொங்கநாட்டின் சிறுமையை நோக்கி அதனைக் கனவிலுங் காணலாகாது என்று கவியும் ஒன்று பாடினவர். வேளாளர் செயலில் மிகவும் பற்றுடையவர். வேளாளர் பெருமையையும் வண்மையையும் ஏரெழுபது, திருக்கை வழக்கம் என்னும் இரு சிறு காப்பியங்களாலும் விளக்கினவர். சடகோபரந்தாதி முதலிய வேறு சிறு காப்பியங்களுஞ் செய்தவர்.

கம்பர் என்பதற்குத் திருவேகம்பமுடையார் என்றும், இவர்க்கு இடுகுறி என்றும், கம்பநாடுடையவர் என்றும், கல்வி வருமுன் தூண்போன்றுநின்றவர் என்றும், கம்பங்கொல்லை காவலர் என்றும், கம்பு ஒன்று கைத்தலத்தில் வைத்திருந்தவர் என்றும் பலவாறு பலருங் கூறுவர்.

இராமாயணம்.

அஞ்சு வணத்தி னுடை யுடுத்தா ளரவெல்லாம்
அஞ்சு வணத்தின் வேக மிகுத்தா ளருளில்லான்
அஞ்சு வணத்தி னுத்தரி யத்தா ளலையாரும்
அஞ்சு வணத்தின் முத்தொளி ராரத் தணிகொண்டாள்.

அஞ்சு வணம் - ஐந்து நிறம். அஞ்சு உவணம் - அஞ்சுதற்குக் காரணமாகிய கருடன். அம் சுவணம் - அழகிய பொன். அம் சுவள் நத்தின் - நீரிற்றேன்றிய நல்ல சங்கினது.

சோழனைவெறுத்தது.

மன்னவனு நீயேயோ மண்ணுலகு மிவ்வளவோ
உன்னையோ யான்புகழ்ந் தோதுவ—தென்னை
விருந்தேற்றுக் கொள்ளாத வேந்துண்டோ சோழா
குரங்கேற்றுக் கொள்ளாத கொம்பு.

கொங்கநாடு.

நீரெல்லாஞ் சேற்று நாற்ற நிலமெலாங் கல்லும் முள்ளும்
ஊரெலாம் பட்டி தொட்டி யுண்பதோ கம்பஞ் சோறு
பேரெலாம் பொம்மன் றிம்மன் பெண்களோ நாயும் பேயுங்
காருலாங் கொங்க நாட்டைக் கனவிலு நினைக்கொ ணாதே.

ஆன்பாலுந் தேனு மரம்பைமுதன் முக்கனியும்
தேம்பாய வுண்டு தெவிட்டு மனம்—றிம்பாய்
மறக்குமோ வெண்ணெய் வருசடையா கம்பன்
இறக்கும்போ தேனு மினி.

ஏகவிருத்தராமாயணம்.

தாதையார் சொலராமன் காடு போதல்
சார்ந்துளபொன் மானெனுமா ரீசன் சாதல்
சீதையார் பிரிவெருவை மரணம் பானு
சேயொடுநட் புக்கோடல் வாலி வீடல்
ஓதநீர்க் கடற்பரப்பை யநுமன் றாண்டல்
உயரிலங்கை நகரெரியால் வேகக் காண்டல்
பாதகரா மரக்கரெலா மிறக்கத் தாக்கல்
பாக்கியரா மாயணசீர்க் காதை யீதே.

---

## கருணைப்பிரகாசர்.

இவர் சிவப்பிரகாசசுவாமியுடைய சகோதரர். பஞ்சலக்கணமும் படித்தவர். சீகாளத்திப்புராணத்திலே சீகாளத்திச்சருக்கம் வரையும் பாடினவர். இட்டலிங்கவகவல் என்னும் பனுவலும் பாடினவர். சீகாளத்திப்புராணத்திலே சிறப்புப்பெயர்களைப் பொருளுணர்க்கித் திரிசொல்லாலுங் கூறுவர். சிவப்பிரகாசர் என்னும் பெயரை "இறைமுதனுமத்தோடியைதரும் விளக்கப்பேரோன்" என்பர். சுகம் என்னுங் கிளியின் பெயரை நோக்கிச் சுகமுனிவரைக் "கிளிப்பெயரினன்" என்பர். பம்பை என்பது ஒரு வாச்சியத்துக்கும் பெயராதலை நோக்கிப் பம்பையாற்றினை "இயலியமொன்றனுமத் தியாறு" என்பர். இயம் - வாச்சியம். ஈகை என்னும் பொன்னின் பெயரை நோக்கிப் பொன்முகரியாற்றினை "ஈகையங்கலுழி" என்பர்.

சீகாளத்திப்புராணம்.

நடவரை முனிவ னீன்ற தமிழ்க்கொழுங் குழவிதன்னைப்
படர்வெயி லுமிழுஞ் சங்கப் பலகையாந் தொட்டி லேற்றி
இடைவர வளர்த்து ஞால நனந்தலை மறுகில் விட்ட
மடனறு புலமை யோரை மனத்தியா னினைத்து மன்றே.

---

## கருவூர்த்தேவர்.

இவரூர் சோழமண்டலத்துள்ள கருவூர். குலம் வேதியர் குலம். சமயம் சைவம். காலம் ஏறக்குறைய இற்றைக்குத் தொள்ளாயிரம் வருடங்களுக்கு முன் என்பர். இவர் திருவிசைப்பாப் பாடினவர்களுள் ஒருவர். சிவஸ்தல யாத்திரிகர். சென்ற சிவஸ்தலங்களைத் துதித்துத் திருவிசைப்பாக்கள் பாடினவர். யோகப் பயிற்சியிற் சிறந்தவர்.

திருவிசைப்பா.

நையாத மனத்தினனை நைவிப்பா னித்தெருவே
ஐயாநீ யுலாப்போந்த வன்றுமுத லின்றுவரை
கையாரத் தொழுதருவி கண்ணாரச் சொரிந்தாலும்
செய்யாயோ வருள்கோடைத் திரைலோக்கிய சுந்தரமே.

---

## கல்லாடர்.

இவரூர் கல்லாடம் என்னுந் திருப்பதி என்று சிலர் சொல்லுவர். சமயம் சைவம். இவ ரறிவையுந் துறவையும் பாராட்டி அபியுக்தரொருவர் "காய்ந்தபுல னடக்கியுயர்பெருஞானம் பழுத்தருள் கல் லாடனாரே" என்பர். சில தனிநிலைக்கவிகளும், கல்லாடம் என்னும் இலக்கியமும், தொல்காப்பியவுரைகளுள் ஒன்றுஞ் செய்தவர். கல்லாடத்திலே அகப்பொருட்டுறைகளோடு வருணனைகளுள் இறையனாரகப்பொருட்கதை, நரிபரியாக்கியகதை முதலிய திருவிளையாடற்கதைகளும் வேறு கதைகளுஞ் சேர்த்துக் கூறுவர். வள்ளுவர் நூல் ஒரு மதமுந் தழுவாத பொதுநூல் என்பதுங் கூறுவர். அதற்குப் பாயிரமாக முதற்கவி பாடினார் இறையனார் என்பதுங் கூறுவர்.

கல்லாடம்.

சமயக் கணக்கர் மதிவழி கூறா
துலகியல் கூறிப் பொருளிது வென்ற
வள்ளுவன் றனக்கு வளர்கவிப் புலவர்முன்
முதற்கவி பாடிய முக்கட் பெருமான்.

பண்டைச் சான்றோர் சிலர் இக்கல்லாடத்தை "மாமதுரை யீசர் மனமுவந்து கேட்டு முடிதாம் அசைத்தார் நூறுதரம்" என்பர். வேறு சிலர் "கல்லாடங் கற்றவனிடஞ் சொல்லாடாதே" என்பர். "மல்லாடாதே" என்றுங் கூறுவர். வேறு சிலர் இக்கல்லாடம் பொன்னம்பலவாணர்க்குத் திருக்கோவை எனப்படும் இலக்கியம் இருத்தல்போல வெள்ளியம்பலவாணர்க்கும் வேறோரிலக்கியம் வேண்டும் என்று செய்தது என்பர். அன்றி இக்கல்லாடருங் கடைச் சங்கத்திருந்த கல்லாடரும் ஒருவரலர் என்பாரும் உளர்.

---

## கனகசபைப்புலவர்.

இவரூர் யாழ்ப்பாணத்துள்ள அளவெட்டி. குலம் வேளாளர் குலம். சமயம் கிறிஸ்துசமயம். காலம் இற்றைக்கு நாற்பத்து மூன்று வருடங்களுக்கு முன். இலக்கண இலக்கியங்கள் நன்கு கற்றவர். விரைந்து கவி பாடும் புலமையும் பெற்றவர். பல தனி நிலைக் கவிகளும், அழகர்சாமிமடல், திருவாக்குப்புராணம் முதலிய பிரபந்தங்களுஞ் செய்தவர்.

திருவாக்குப்புராணம்.

ஆதி யந்தமற் றற்புத மூர்த்தியாய்
நீதி யன்பொடு நித்திய மேமுதல்
ஓதி நின்ற வுயர்குண னுதியம்
போதில் வானமும் பூமியு நல்கினன்.

---

## காரிரத்தினக்கவிராயர்.

இவரூர் ஆழ்வார்திருநகரியை அடுத்த பேரையூர். சமயம் வைணவம். காலம் இற்றைக்கு முந்நூறு வருடங்களுக்கு முன்னர் என்பர். இவர் தொல்காப்பியம் முதலிய இலக்கணங்களையும், பரிபாடல் முதலிய இலக்கியங்களையுங் கற்றவர். பலவுரைகள் செய்தவர். இவருரைகள் மாறனலங்காரவுரை, பரிமேலழகர் நுண்பொருண்மாலை முதலியன. சில நூல்களுஞ் செய்தனர் என்பர்.

மாறனலங்காரவுரையிலே தொல்காப்பியம் நன்னூல் முதலிய இலக்கணங்களையுஞ், சிந்தாமணி, சிலப்பதிகாரம் முதலிய இலக்கியங்களையுங் காட்டுவர். சிலசில சொற்களுக்கு நவீனமான பொருள்களுங் கூறுவர். வெளிறுபட்டிழிதல் என்னுங் குற்றத்திற்குக் குறிப்புமொழி சிறிதுமின்றி வெளிப்படக் கூறல் என்பர்.

நுண்பொருண்மாலையிலே பரிமேலழகர் கூறிய ஏகதேசவுருவகம், செய்யுள்விகாரத்தாற்குறைதல் முதலியவற்றின் பொருள்களை எடுத்து விளக்குவர். "ஏகதேசவுருவகமாவது முற்றுருவகமாய் வாராது ஒருவழி உவமை குறைந்து பொருணிற்பதும், ஒருவழிப் பொருள்குறைந்து உவமை நிற்பதும், ஒருமருங்குவமையும் பொருளுங் குறைந்து நிற்பதும், ஒருவழிக் குறைத்தற்கேற்ற வினைபெற்று நிற்பதும் என்க" என்பர்.

"செய்யுள்விகாரமாவது இன்னொலியும், பதத்துளடிப்பாடும், செய்யுட்டொடையும் நோக்கிவரும். "ஐந்தவித்தானாற்றல்" என்புழி ஆற்றற்கு இன்னொலி காரணமாகக் குக் கெட்டு நின்றது" என்பர். இவைகட்குச் சான்றாகப் பரிபாடல், திருக்கோவை முதலிய நூற்பிரமாணமுங் காட்டுவர். இவரைத் திருமேனிரத்தினக் கவிராயர் எனவுங் கூறுவர்.

---

## காரைக்காலம்மையார்.

இவரூர் சோழமண்டலத்துள்ள காரைக்கால். குலம் வைசியர் குலம். சமயம் சைவம். பிள்ளைத்திருநாமம் புனிதவதியார். இவர் பெரியபுராணங் கூறும் அடியாருள் ஒருவர். பதினொராந் திருமுறையிற் சேர்ந்த அற்புதத்திருவந்தாதி, இரட்டைமணிமாலை முதலிய நூல்கள் செய்தவர்.

அற்புதத்திருவந்தாதி.

ஈசனவ னல்லா தில்லை யெனநினைந்து
கூசி மனத்தகத்துக் கொண்டிருந்து—பேசி
மறவாது வாழ்வாரை மண்ணுலகத் தென்றும்
பிறவாமை காக்கும் பிரான்.

---

## காளமேகப்புலவர்.

இவருடைய இயற்பெயர் வரதர் என்பது. இவரூர் சோழமண்டலத்துள்ள கும்பகோணம். குலம் வேதியர்குலம். சமயம் சைவம். காலம் ஏறக்குறைய இற்றைக்கு நானூறு வருடங்களுக்கு முன்னர் என்பர். திருவானைக்காவில் அகிலாண்டவல்லி திருவருளாற் கவிபாடும் வரம்பெற்றவர். ஆசுகவி பாடுதலில் அதிசாமர்த்தியமுடையவர். "ஆசுகவி மாரி யகில வுலக மெல்லாம்—வீசுகவி

காள மேகமே" எனவும் பாடப்பட்டவர். எழுத்துக் கொடுத்தா லென்ன! சொல்லுக் கொடுத்தாலென்ன! கருத்துக் கொடுத்தா லென்ன! கொடுத்த சமுத்திகளையெல்லாம் குறைவற அமைத்துத் துடுமெனப் பாடி முடிப்பர். பல தனிநிலைக் கவிகளும், திருவானைக் காவுலா, சித்திரமடல், பரப்பிரமவிளக்கம் என்னும் பிரபந்தங்க ளுஞ் செய்தவர். சிவஸ்தல யாத்திரையிற் சென்று சிவதரிசனஞ் செய்து கவிகளும் பாடினவர். பழிக்கவிபோலத் தோன்றுந் துதிக் கவிகளும் பாடினவர். சிலவிடங்களில் வசைக்கவிகளும் பாடினவர். "வசைபாடக் காளமேகம்" என்ற பாட்டுமுண்டு.

திருவாலங்குடியிற் சென்றபோது ஆலங்குடியான் என்னுஞ் சுவாமிநாமம் ஆலமுண்ணான் எனவும் பொருள்படல்நோக்கி விரோ தாபாசவணிதோன்ற "ஆலங்குடியானை யாலாலமுண்டானை யாலங் குடியானென் றூர்சொன்னார்" என்றும் பாடினவர். அண்ணாமலையிற் சுவாமி முன்னிலையிலே கிடந்த இடபவாகனத்தை நோக்கி "நடக்க வறியாது" என்றும் பாடினவர். வேதம்போம் வாயான் விகடராமன் என்பவனுடைய குதிரை இளைப்படைந்து தள்ளாடித் தள்ளாடி மெள்ள மெள்ள நடத்தலை நோக்கி "மாதம் போங் காத வழி" என்று நகையாடினவர். தேவடியாள் ஒருத்தி பாடுவேன் என்று சொல்லிக் கழுதை போலக் கத்துதலை நோக்கிக் காணமற்போன தன் கழுதை என்று வண்ணான் எண்ணினான் என்பது புலப்படக் "கழுதைகெட்ட வண்ணான் கண்டேன் கண்டேனென்று—பழுதை யெடுத்தோடிவந்தான் பார்த்து" என்றும் நகையாடினவர்.

திருமலைராயன்பட்டணத்துக்குஞ் சென்றவர். அவனுடைய அவைக்களப் புலவரையெல்லாங் கவிபாடி வென்றவர். நீவிர் யாவர்? என்றபோது "தூதைந்து நாழிகை" என்று கவி ஒன்று தொடங்கிக் கவிபாடும் வீரமெல்லாங் கட்டுரைத்துக் "கவிகாள மேகம் யானே" எனப் பெயருங் காட்டித் தருக்கொடு முடித்து நின்றவர். சிலேடை முதலிய சமுத்திகளையெல்லாஞ் சொல்லச்சொல்லத் தாமதமின்றிப் பாடிமுடித்தவர். புலவர்க்குத் தலைவர் எனவும், குரங்குக்குத் தலை வர் எனவும் இருபொருள்படநின்ற கவிராசர் என்பது தக்கதோர் பட்டம் என்று தரித்துநின்ற புலவர் சிலவரை நோக்கிப் புலவிர் காள்! நீவிர் குரங்குகளே என்பது புலப்பட "வாலெங்கே நீண்ட வயிறெங்கே" என்று கவிபாடி நகையாடினவர். திருமலைராயனும் புலவருந் தமக்குச்செய்த அவமானம்நோக்கி மனம்புழுங்கி அவ் வூரைக் "கோளரிருக்குமூர் கோள் கரவு கற்றவூர்" என்று பாடி

"விண்மாரி யற்று வெளுத்து மிகக் கறுத்து—மண்மாரி பெய்கவிந்த வான்" என்று முடித்தவர். திருவானைக்காவுலாவிலே மடக்கணி முதலிய அணியெல்லாஞ் சிறக்கப் பாடினவர். பரப்பிரமவிளக்கத்திலே நாராயணபரத்துவத்தை மறுத்துச் சிவபரத்துவத்தை எடுத்துக்காட்டி நிறுத்தினவர்.

அண்ணாமலையிடபம்.

க. நடக்கவறி யாதுகா ணூலு முடக்கிக்
கிடக்கவறி யும்புன்னீர் கேளா—விடக்கை
அரைப்பணியார் சோணகிரி யத்தனா ரோட்டில்
இரப்புணியா ரேறு மெருது.

உ. தூதைந்து நாழிகையி லாறுநா ழிகைதனிற்
சொற்சந்த மாலை சொல்லத்
துகளிலா வந்தாதி யேழுநா ழிகைதனிற்
றொகைபட விரித்துரைக்கப்
பாதஞ்செய் மடல்கோவை பத்துநா ழிகைதனிற்
பரணியொரு நாண் முழுவதும்
பாரகா வியமெலா மோரிரு தினத்திலே
பகரக் கொடிக் கட்டினேன்
சீதஞ் செயுந்தொங்கன் மார்பனா ணியலிசை
தெரிந்ததிரு மலைராயன் முன்
சீறியே வாதுகவி பாடுதற் கெதிர்வருந்
திடமிக்க புலவர் தம்மைக்
காதும் பிடித்துக் கவித்துக் கதுப்பிற்
கரத்திட் டடித்து முதுகிற்
கலணைவைத் தேமுழுக் கடிவாள மிட்டேறு
கவிகாள மேகம் யானே.

கவிராசர்.

ங. வாலெங்கே நீண்ட வயிறெங்கே யீரிரண்டு
காலெங்கே யுட்குழிந்த கண்ணெங்கே—சாலப்
புவிராசர் போற்றும் புலவீர்கா ணீவிர்
கவிராச ரென்றிருந்தக் கால்.

திருவானைக்காவுலா.

க. கங்கையினுன் கங்கையினுன் காசியிலான் காசியிலான்
பைங்கடல்சூழ் பாரிடத்தான் பாரிடத்தான்—செங்கமல

உ. அத்த னகத்திருக்கா ளத்தியான் கங்குறைத்த
அத்த னகத்திருக்கா ளத்தியான்—எத்திசையும்.

கம் - தலை. இல் - வீடு. பாரிடம் - பூமி, பூதம். அகம் - மனம். திருக்கு - முரண். நகம் - மலை.

பரப்பிரமவிளக்கம்.

௪. பங்கயக்கண் மாலைப் பரத்துவனென் றேவியாசன்
கங்கைக் கரையுரைத்த கைந்நாவன்—றங்கவற்குத்
தம்பிக்க மால்வந்து சங்கரனே யெவ்வுயிர்க்கும்
எம்பிரா னென்று ளிசைந்து.

---

## குணவீரபண்டிதர்.

இவரூர் தொண்டைமண்டலத்துள்ள களத்தூர். சமயம் ஆருகதம். காலம் இற்றைக்கு எண்ணூறு வருடங்களுக்கு முன் என்பர். நேமிநாதம், வெண்பாப்பாட்டியல் என்னும் இரண்டிலக்கணமுஞ் செய்தவர். நேமிநாதம் எழுத்திலக்கணத்தையுஞ், சொல்லிலக்கணத்தையும் விரித்துச் சொல்வது. இது சின்னூல் எனவும்படும். வெண்பாப்பாட்டியல், பிரபந்தத்தின் முதலில் வைத்தற்குரிய மங்கலச்சொல் முதலியவைகளையும், பிரபந்தவகைகளையும், பிறவற்றையுஞ் சொல்வது.

வெண்பாப்பாட்டியல்.

நல்லசவை.

புகழுந் தருமநெறி நின்றோர்பொய் காமம்
இகழுஞ் சினஞ்செற்ற மில்லோர்—நிகழ்கலைகள்
எல்லா முணர்ந்தோ ரிருந்த விடமன்றோ
நல்லா யவைக்கு நலம்.

தீயசவை.

அவையின் றிறமறியா ராய்ந்தமர்ந்து சொல்லார்
நவையின்றித் தாமுரையார் நாணார்—சுவையுணரார்
ஆய கலைதெரியா ரஞ்சா ரவரன்றோ
தீய வவையோர் செருக்கு.

---

## குமரகுருபரசுவாமிகள்.

இவரூர் பாண்டிமண்டலத்துள்ள சிறீவைகுண்டம். குலம் வேளாளர்குலம். சமயம் சைவம். காலம் ஏறக்குறைய முந்நூறு வருடங்களுக்கு முன் என்பர். நிலை துறவு. இவர் ஐந்து வயசுவரையும் ஊமையாய் வைகி அதன்பின் செந்திமாநகர் சென்று கந்தவேள்வரத்தாற் பேசுந்திறமும், வடமொழி தென்மொழிக் கலையுணர்ச்சியும் "கடன்மடைதிறந்தாலென்னக் கவிபுகல்வாக்கும்" பெற்றவர். பெற்றவுடனே கந்தர்கலிவெண்பா என்னும் பிரபந்தஞ்

செய்தவர். சிவஸ்தல யாத்திரையிற் சிந்தைகொண்டு காசிமாநகர் பரியந்தஞ் சென்றவர். சில தலங்களிற் பலதினம் வசித்தவர். பல பிரபந்தங்களுஞ் செய்தவர்.

மதுரைமாநகரிலே மீனாட்சியம்மைபிள்ளைத்தமிழ் என்னும் பிரபந்தத்தைத் திருமலைநாயக்கர் என்னும் அரசர் முன்னிலையில் அரங்கேற்றித் தக்க பரிசிலும், மிக்க வரிசையும் பெற்றவர். ஒருநாள் அரசர் புகாக்காலை வழுவிப் பசியோடிருந்தபோது "வகுத்தான் வகுத்தவகையல்லாற்கோடிதொகுத்தார்க்குந் துய்த்தலரிது" என்ற குறள்வெண்பாவை எடுத்துக் கூறினவர். இவ்வெண்பாவையுங் கேட்டு வள்ளுவர்நூலின் அருமை பெருமைகளையுங் கேட்டறிந்த அரசர் வள்ளுவர்நூலின் நீதிகளைச் சுருக்கிக்காட்டி வேறொரு சிறுநூல் செய்து தருக எனக் கேட்டவாறே அதனைச் சுருக்கி வெண்பாவில் யாத்து நீதிநெறிவிளக்கம் என நிலவவைத்தவர். அங்கே மீனாட்சியம்மைகுறம், இரட்டைமணிமாலை, மதுரைக்கலம்பகம் என்னும் பிரபந்தங்களுஞ் செய்தவர்.

திரிசிரபுரம் முதலிய சில தலங்களிலே பாஞ்சராத்திரி, மாயாவாதி முதலிய சில சமயவாதிகளை வாதம்புரிந்து வென்றவர். சிதம்பரத்திற் சைவர் சிலர் யாப்பிலக்கணத்துக்கு உதாரணமாகச் சைவநூல் ஒன்று வேண்டும் என்றபோது பாக்களும் பாவினங்களுமாகச் சிதம்பரச்செய்யுட்கோவை என்னும் பிரபந்தமுஞ் செய்தவர். தருமபுரவாதீனத்து மாசிலாமணிதேசிகரைக் குருவாகக்கொண்டு அவர் மீது பண்டாரமும்மணிக்கோவை என்னும் பிரபந்தமும் பாடினவர். சகலகலாவல்லிமாலை என்னுஞ் சரசுவதிதுதிபாடிச் சரசுவதிவரத்தால் அப்பொழுதைக் காசியரசன் பாஷையையுங் கற்றுக் காசியரசனோடு கலந்துபேசிச் சில அற்புதச்செயலுங்காட்டி அவனிடம் வேண்டும் நிலம்முதலியனபெற்றுத் திருமலைநாயக்கர்கொடுத்த திரவியங்கொண்டு தருமமடாலயம் ஒன்று காசிமாநகரிலே தாபித்தவர்.

சிதம்பரமும்மணிக்கோவை, திருவாரூர்நான்மணிமாலை, முத்துக்குமாரசுவாமிபிள்ளைத்தமிழ், காசிக்கலம்பகம் முதலிய வேறு பிரபந்தங்களுஞ் செய்தவர்.

### நீதிநெறிவிளக்கம்.

பிறரால் பெருஞ்சுட்டு வேண்டுவான் யாண்டும்
மறவாதே நோற்பதொன் றுண்டு—பிறர்பிறர்
சீரெல்லாந் தூற்றிச் சிறுமை புறங்காத்
தியார்யார்க்குந் தாழ்ச்சி சொலல்.

பெருஞ்சுட்டு - நன்குமதிப்பு. தூற்றல் - பலருமறியச் சொல்லல். சிறுமை - இழிவு. புறங்காத்தல் - புறத்தே பரவாமற் பேணல்.

---

## குமாரகுலசிங்கமுதலியார்.

இவரூர் யாழ்ப்பாணத்துள்ள தெல்லிப்பழை. குலம் வேளாளர்குலம். சமயம் கிறிஸ்துசமயம் காலம் இற்றைக்கு முப்பத்திரண்டு வருடங்களுக்கு முன். இவர் வலிகாமம் வடக்கு மணியகாரர் குமாரகுலசிங்கத்துக்குத் தந்தையார். அங்கிலம், தமிழ் என்னும் இருபாஷைகளும் நன்கு கற்றவர். நியாயசாலைகளிலே துவிபாஷாவாதிமுதலிய அதிகாரபுருடராயிருந்து வாக்குவன்மையால் நன்குமதிக்கப்பட்டவர். அங்கிலம், தமிழ் என்னும் இருபாஷைகளையுந் தம்முள்ளே மொழிபெயர்த்தலினும், சவைகளிலே அலங்காரம்பெறப் பேசுதலினும் வல்லவர். தமிழிலே பல தனிநிலைக்கவிகளும், பதிவிரதைவிலாசம் முதலிய நூல்களும் பாடினவர்.

### பதிவிரதைவிலாசம்.

பொற்பில மாதரணி பூஷணமாங் கற்புநெறி
விற்பனமே தென்று விளங்கவைக்கும்—அற்புதங்கன்
விஞ்சு பதிவிரதை மெச்சுவிலா சம்பாடக்
கஞ்சமனக் கர்த்தனடி காப்பு.

---

## குமாரசுவாமிமுதலியார்.

இவரூர் யாழ்ப்பாணத்துள்ள உடுப்பிட்டி. குலம் வேளாளர் குலம். சமயம் சைவம். காலம் இற்றைக்கு நாற்பது வருடங்களுக்கு முன். இவர் நீதிபதி கதிரைவேற்பிள்ளைக்குத் தந்தையார். இலக்கிய லக்கணங்கள் நன்கு கற்றவர். பல தனிநிலைக்கவிகளும், அருளம்பலக்கோவை, இந்திரகுமாரநாடகம் முதலிய சில பிரபந்தங்களுஞ் செய்தவர்.

### அருளம்பலக்கோவை.

திங்கா ளுடலகந் தேய்வுற மாய்வுறச் சித்தரைப்போற்
றங்காம லந்தா மார்க்கந் தவம்புரிந் தாலுந்தமிழ்
மங்கா தடுவைவ வருமரு ளம்பல மன்னன்வரைக்
கொங்கார் குழலி முகம்போன் மெனநினைக் கூறரிதே.

---

## கூடலூர்கிழார்.

இவரூர் மதுரைமாநகர்போலும். குலம் வேளாளர்குலம் என்பர். காலம் கடைச்சங்ககாலம். இவர் பதினெண்கீழ்க்கணக்குள் ஒன்றெனப்படும் முதுமொழிக்காஞ்சி என்னும் நீதிநூல் செய்தவர். புறநானூற்றிலே ஒரு கவிக்கும், குறுந்தொகையிலே சில கவிகளுக்கும் ஆக்கியோனெனப்பெற்றவர். எட்டுத்தொகையுள்ளே ஐங்குறுநூறு தொகுத்தவரும் இவர் என்பர்.

### முதுமொழிக்காஞ்சி.

க. இயைவது கரத்தலிற் கொடுமை யில்லை.

உ. உரையில ளுதவிற் சாக்கா டில்லை.

ஈ. நரையிற் பெரியதோர் நல்குர வில்லை.

ச. இசையிற் பெரியதோ ரெச்ச மில்லை.

ரு. இரத்தலி னூஉங் கிளிவர வில்லை.

சூ. இரப்போர்க் கீதலி னெய்து சிறப்பில்லை.

### குறுந்தொகை.

தண்கடற் படுதிரை பெயர்த்தலின் வெண்பறை
நாரை நிரைபெயர்ந் தயிரை யாரும்
ஊரோ நன்றுமன் மாநகை
ஒருதனி வைகிற் புலம்பா கின்றே.

---

## கூழங்கைத்தம்பிரான்.

இவரூர் தொண்டைமண்டலத்துள்ள காஞ்சிபுரம். குலம் வேளாளர்குலம். சமயம் சைவம். காலம் ஏறக்குறைய இற்றைக்கு நூற்று முப்பது வருடங்களுக்கு முன் என்பர். இவர் இலக்கிய லக்கணங்களிலுஞ் சித்தாந்த சாத்திரங்களிலும் வல்லவர். யாழ்ப்பாணம் வந்து பெருஞ்செல்வரும், பெருங்கொடையாளருமாகிய வைத்தியலிங்கச்செட்டியாருக்கு நண்பராய் வண்ணார்பண்ணையில் வசித்தவர். இருபாலை நெல்லைநாதமுதலியார் முதலியோர்க்கு இலக்கண லக்கியங் கற்பித்தவர். சில தனிநிலைச்செய்யுள்களும், சித்திவிநாயகர் திருவிரட்டைமணிமாலை முதலிய சில தொடர்நிலைச் செய்யுள்களும் பாடினவர். கைத்தலம் கூழை அடைந்தமைபற்றிக் கூழங்கைத் தம்பிரான் எனப்பட்டார். கூழை - குறள். பின் வருந் தனிநிலைக் கவியையும் இவர் கவி என்பர்.

ஆசிரியவிருத்தம்.

நதியரவ மதியிதழி புரிசடை யவிழ்த்தாட
நண்ணுமா காச லிங்கம்
நால்வருக் குக்கலா னிழலினல் லுபதேசம்
நவிலுற்ற மவுன லிங்கம்
நிதிபதித னன்புடைத் தோழனு மீசான
நிலைநின்ற வேட லிங்கம்
நிவாதமுறை யிருவர்க் கழற்கம்ப வடிவாகி
நின்றெழுஞ் சோதி லிங்கம்
துதிதுதிக் கையானை யன்பொடும் போற்றிடுஞ்
சுயம்பான வப்பு லிங்கம்
துய்யவுணர் வோரிதய கமலா லயத்திலெழு
சுடர்பொற் கொழுந்து லிங்கம்
மதிதவழு மதிலோடு கோபுரந் திகழ்வுறும்
வண்ணையெல் லையி னிறுத்தும்
மாதங்க புரிதையல் பாகமிசை மீதமரும்
வைத்தீச மா லிங்கமே.

திருவிரட்டைமணிமாலை.

மூரட்டை யடக்குமணி முச்சரட்டிற் கோத்தாங்
கிரட்டை மணிமாலை யென்னூற்—சரட்டேற்றக்
குக்குட வன்பனைமாக் கூழ்களிப ளுட்டுநல்லைக்
கைக்குட வன்பனைமாக் காப்பு.

சரடு - நூற்கயிறு. குக்குடவன்பன் - முருகபிரான். மா கூழ் களி பளுட்டு * * * * கைக்குடவன்பனைமா - கையாகிய வளைந்த வலிய பனையையுடைய யானை.

---

## சங்கரநமச்சிவாயர்.

இவரூர் பாண்டிமண்டலத்துள்ள திருநெல்வேலி. குலம் வேளாளர்குலம். சமயம் சைவம். காலம் இற்றைக்கு இருநூறு வருடங்களுக்கு முன் என்பர். இவர் சுவாமிநாததேசிகர்க்கு மாணவகர். அகத்தியம், தொல்காப்பியம் முதலிய இலக்கணங்களையும், எட்டுத்தொகை முதலிய சங்க இலக்கியங்களையும் நன்கு கற்றவர். நன்னூற்கு விருத்தியுரை ஒன்று செய்தவர். உரையின் முகத்திலே சுவாமிநாததேசிகர்க்கு,

"திருவா வடுதுறைத் தேசிக னாகிய
கருணையங் கடலையென் கண்ணைவிட் டகலாச்
சுவாமி நாத குரவனை யநுதினம்
மனமொழி மெய்களிற் றொழுதவ னருளால்"

என்று வணக்கங் கூறுவர். உரையிலே அகத்தியம், தொல்காப்பியம் முதலிய இலக்கணப்பிரமாணமும், சிந்தாமணி, கலித்தொகை, திருக்கோவை முதலிய இலக்கியப் பிரமாணமுங் காட்டுவர்.

---

## சங்கரபண்டிதர்.

இவரூர் யாழ்ப்பாணத்துள்ள நீர்வேலி. குலம் வேளாளர் குலம். சமயம் சைவம். காலம் இற்றைக்கு நாற்பத்தைந்து வருடங்களுக்கு முன். இவர் சிவகுருநாதர்க்கு மைந்தர். சிவப்பிரகாசபண்டிதர்க்குத் தந்தையார். வேதாரணியத்துச் சுவாமிநாததேசிகர்க்குங் கந்தரோடை அப்பாப்பிள்ளைக்கும் மாணவகர். கீரிமலைச் சபாபதிக் குருக்கள், முருகேசபண்டிதர் முதலியோருக்கு ஆசிரியர். வடமொழி தென்மொழிகளினுள்ள இலக்கியலக்கணங்களையும், ஆகம சித்தாந்த தருக்கநூல்களையும், தருமசாத்திரங்களையும் நன்கு கற்றவர். ஆசிரியர்மாட்டுக் கற்ற அளவில் அமையாது மீட்டும் மீட்டும் பலநூல்கள் தேடிக் கற்றவர்.

நூல்களைத் தேடிக் கற்றலினும், வடநூல்களைத் தமிழில் மொழிபெயர்த்தலினும், தமிழில் நூல்கள் செய்தலினும், மாணவகர்க்குச் சங்கதமுந் தமிழும் கற்பித்தலினும், பரமதங்களைக் கண்டித்துச் சைவமதத்தை நாட்டிச் சைவப்பிரசங்கஞ் செய்தலினும், பெரும்பான்மையுந் தமது காலங் கழித்தவர். இவருடைய சைவப்பிரசங்கத்தை முருகேசபண்டிதருங் கட்டளைக்கலித்துறை ஒன்றிற் சுட்டிக் கூறினர்.

### கட்டளைக்கலித்துறை.

சைவத்தை நாட்டிப் பரமத மோட்டத் தயங்குமொரு
தெய்வத்தைப் போல்வரு சங்கரபண்டித தேசிகர்தாம்
மெய்வைத்த கண்டிகை வெண்ணீற்றி னோடு விளங்கிடச்செய்
சைவப் பிரசங்க தெள்ளமு தென்றினிச் சார்குவமே.

இவர் இயற்றிய நூல்கள், சைவப்பிரகாசனம், சிவதூஷண கண்டனம், கிறிஸ்துமதகண்டனம், அநுட்டானவிதி, சத்தசங்கிரகம் முதலியன. உரைகள் சிவபூசையந்தாதியுரை, அகநிர்ணயத்

தமிழுரை முதலியன. சைவப்பிரகாசனத்திலே பிரத்தியக்ஷம், அநுமானம், ஆகமம் என்னும் தர்க்கப்பிரமாணங்களை முதற்கண் விரித்துக் கூறி அவற்றிற்கு இயையுமாறு சுருதியிலக்கணம், சமயலக்கணம் முதலியவை எடுத்துக்கூறி அதன்பின் சைவசமயநிருபணமும், பதிமுதலிய முப்பொருளிலக்கணமும், முத்திசாதனமும் விரித்துக் கூறினவர்.

---

## சதாசிவப்பிள்ளை.

இவரூர் யாழ்ப்பாணத்துள்ள மானிப்பாய். குலம் வேளாளர் குலம். சமயம் கிறீஸ்துசமயம். காலம் ஏறக்குறைய இற்றைக்குப் பதினைந்து வருடங்களுக்கு முன். இவர் அங்கிலம், தமிழ் என்னும் இருமொழிகளும் நன்கு கற்றவர். இலக்கியலக்கணங்கள் தெரிந்தவர். உதயதாரகைப் பஞ்சிகைக்குத் தலைவராயிருந்தவர். பாவலர்சரித்திரதீபகம், வெல்லையந்தாதி, நன்னெறிமாலை, திருச்சதகம், நன்னெறிக்கதாசங்கிரகம் முதலிய நூல்கள் செய்தவர்.

வெல்லையந்தாதி.

காத்தவ னேயிந்தக் காசினி தன்னைநற் காதலொடு
பூத்தவ னேயருள் பூப்பவ னேவெல்லைப் பொற்புரியிற்
சாத்திரி மார்வந்து சாட்டாங்க தண்டஞ்செய் தற்பரனே
போத்துறை வாருளம் போகா வடியனைப் போற்றுவையே.

---

## சபாபதிநாவலர்.

இவரூர் யாழ்ப்பாணத்துள்ள கோப்பாய். குலம் வேளாளர் குலம். சமயம் சைவம். காலம் இற்றைக்குப் பதின்மூன்று வருடங்களுக்கு முன். இவர் இலக்கணலக்கியங்களும், தருக்கசித்தாந்த சாத்திரங்களும் நன்கு கற்றவர். கவிபாடுந் திறமுமுடையவர். திருவாவடுதுறையாதீன வித்துவானுமாயிருந்தவர். சிதம்பரசபாநாத புராணம், பேசுமதசங்கற்பநிராகரணம், பாரதராமாயணதாற்பரிய சங்கிரகங்கள், சிவகர்ணாமிர்தமொழிபெயர்ப்பு, திராவிடப்பிரகாசிகை முதலிய பல நூல்கள் செய்தவர்.

சிதம்பரசபாநாதபுராணம்.

தவமாருந் திருத்துறையூர் சார்ந்தருளிப் பொய்யினைமெய்த்
தவமாகக் கொண்டுழன்முப் புறத்தினருஞ் சாய்ந்திரியச்
சிவஞான போதநூ றமிழுலகந் தெளிந்துய்யச்
சிவஞான சித்தியரு டேசிகனைப் பணிகுவாம்.

பாரததாற்பரியசங்கிரகம்.

ஆரி யத்துய ரப்பதிக் கெதன்முன மறைந்த
பாரதத் தின்றாற் பரியசங் கிரகத்தைப் பாடிச்
சீரி யற்றமி ழாலுரை செயவருள் செய்ய
வீர மும்மதக் குஞ்சரப் பிரானடி விழைவாம்.

---

## சம்பந்தசரணாலயசுவாமிகள்.

இவர் தருமபுரவாதீநத்தைச் சார்ந்தவர். இவர் கர்த்தர் எனப் பெயரிய மைசூராசர் தம்முடைய வடிவை நோக்கி "அண்டங் காக்கையா?" என்றபோது அதற்கு உலகைக் காத்தல் எனப் பொருள் கூறி அண்டங்காக்கை எனக்கன்று. உமக்கே என்று சொல்லி அரசரை மகிழ்வித்தவர். அரசர் விரும்பியவாறே கந்தபுராணத்தைச் சுருக்கிப் பாடித் திருச்செந்தூரிற்போய் அரசரையும் வைத்து அரங் கேற்றினவர். அரசர் கொடுத்த பரிசிலாகிய நவரத்தினங்களையெல் லாம் "இது குருவுக்குப் பிரீதியாகுக" என்று அப்பால் வைத்தவர். பின்னுங் கொடுக்க "இது சிவனுக்குப் பிரீதியாகுக" என்று பின் னும் அப்பால் வைத்தவர். அதன்பின்னுங் கொடுக்க "இது பத்தர்களுக்குப் பிரீதியாகுக" என்று அதன்பின்னும் அப்பால் வைத்தவர்.

ஒருநாள் அரசர் இவரை நோக்கி உங்கள் குருத்தானத்தில் வசிக்கும் அடியவர்குழாங்கள் தினந்தொறுஞ்செய்யுந் தொழில்கள் யாவை? என்றபோது "ஆய்வார்" என்ற கட்டளைக்கலித்துறையால் அவர்க்கு விடைகள் சொன்னவர்.

கந்தபுராணச்சுருக்கம்.

வீர வேற்கை விமலன் மகிழ்ந்திடப்
பாரி னோர்கள் பரிந்து புகழ்ந்திடச்
சீரு லாவிய செந்தி னகரிடை
ஏரி னேடரங் கேற்றிய விந்தநூல்.

கட்டளைக்கலித்துறை.

ஆய்வார் பதிபசு பாசங் களினுண்மை யாய்ந்தறிந்து
காய்வார் பிரபஞ்ச வாழ்க்கையெல் லாங்கல்வி கேள்வியல்லல்
ஓய்வார் சிவானந்த வாரியுள் ளேயொன் றிரண்டறத்
தோய்வார் கமலையுண் ஞானப்ர காசனற் றொண்டர்களே.

---

## சயங்கொண்டார்.

இவரூர் சோழமண்டலத்துள்ள தீபங்குடி என்பர். குலம் செங்குந்தர்குலம். சமயம் சைவம். காலம் ஏறக்குறைய இற்றைக்கு எண்ணூறுவருடங்களுக்கு முன் என்பர். இவர் கலிங்கத்துப்பரணி என்னும் பிரபந்தஞ் செய்தவர். பரணி பாடுஞ் சிறப்புநோக்கி "பரணிக்கோர் சயங்கொண்டான்" என்று பாராட்டிப் பாடப்பட்டவர். இப்பரணி குலோத்துங்க சோழராசன் மேலது.

கலிங்கத்துப்பரணி.

நேயக் கலவி மயக்கத்தே—நெகிழ்ந்த மொழியைக் கிளியுரைப்ப
வாயைப் புதைக்கு மடநல்லீர்—மணிப்பொற் கபாடந் திறமினோ.

---

## சரவணப்பெருமாட்கவிராயர்.

இவரூர் பாண்டிமண்டலத்துள்ள முதுகுளத்தூர் என்பர். குலம் வேளாளர்குலம். சமயம் சைவம். காலம் இற்றைக்கு நூற்றிருபது வருடங்களுக்கு முன் என்பர். இவர் இராமநாதபுரம் சோமசுந்தரம்பிள்ளைக்கு மாணவகர். முத்துராமலிங்கசேதுபதியரசர் சமஸ்தானவித்துவானுயிருந்தவர். ஆசிரியவிருத்தம் பாடுவதில் வல்லவர். இவர் பாடிய ஆசிரியவிருத்தங்கள் பல சில நடராசமூர்த்தி தோத்திரம், சில, சிலர்மீது பாடிய சீட்டுக்கவிகள். அவைகளிலே முழக்கும் வழக்குஞ் செறிந்த மொழிகளும், வழியெதுகை முதலிய தொடைகளும் பெரிதும் வருகின்றன. சீட்டுக்கவிகளிலே பெரும்பாலுஞ் சேதுபதியரசரையுஞ் சோமசுந்தரகுருவையுஞ் சுட்டிக் கூறுவர். அப்பாகங்களுள் ஒன்று காட்டுதும்.

சீட்டுக்கவி.

மகபதி நராதிபதி ரீதிபதி சேதுபதி வாசற்ப்ர சண்ட வாக்கி
வடிதமிழ்ச் சோமசுந் தரகுருசு வாமியடி மைக்குமடி மைக்கு மடிமை.

யாழ்ப்பாணத்திலே பெருங்கொடையாளராயிருந்த வைத்தியலிங்கச்செட்டியாருக்கும் ஒரு சீட்டுக்கவி பாடினவர். அக்கவியிலே யானை, குதிரை முதலிய வரிசைகள் தரும்படி அவரைக்கேட்டவர். அதனைக் குறிக்கும் பாகம் பின்வருவது.

சீட்டுக்கவி.

இந்த்ரதரு யாழ்ப்பாண மேவிய வயித்யலிங்
கேந்த்ரனெதிர் கொண்டு காண்க

வயமான கையிலே மூக்குள்ள தொன்று (யானை) திரு
மாயன் பிறப்பி லொன்று (குதிரை)
வாற்புறமோர் கொம்புந் தலைப்புறமோர் கொம்புமுள
வாகனந் தன்னி லொன்று (தண்டிகை)
வலியார் புரங்களைச் சுடுகின்ற பொருளொன்று (பொன்)
வாரமது தன்னி லொன்று (வெள்ளி)
வரமுடன் வெளுத்தசந் திரனென்று (பட்டு) நீயின்ன
வரிசை தந்தருள் புரிகுவையே.

நடராசமூர்த்திதோத்திரம்.

வந்தவ ரியாவர்காண் கவிராச ரெந்தவூர்
வடகாசி யெங்கு வந்தீர்
மகராச னென்றுனது கீர்த்தியைக் கேட்டுன்மேன்
மதுரகவி பாடி வந்தோம்
சந்ததமும் வித்துவா னல்லர்நீ ரென்னுடைய
தாதைமூ தாதை வழியில்
தமிழ்கேட்ட டியாவர்காண் தலைமுறையி லில்லாத
தாழ்விதைச் செய்து வந்தீர்
இந்தமொழி மற்றுமொரு தரநீ ருரைக்கிலோ
இரணகள மாகு மப்பால்
எகுமென் றேகிடும் புல்லர்தம் பாற்செலா
தெனையாள விது தருணமே
சிந்திக்கு மன்பருக் கருண்மழை சொரிந்ததிக
செல்வங் கொடுக்கு முதலே
தேசிகம் பூத்தவுமை நேசபொன் னம்பலவ
தேசிக சிரோ ரத்நமே.

இக்கவியிலே வந்தவர் யாவர்? எந்தவூர்? எங்கு வந்தீர்? என்பன கவிராசரைப் பிரபு வினவிய வினக்கள். இம்மூன்று வினக்களுக்கும் முறையே அடுத்து வரும் கவிராசர், வடகாசி, "மகராசனென்றுனது கீர்த்தியைக்கேட் டுன்மேன் மதுரகவி பாடிவந்தோம்" என்பன மூன்றும் அவ்வினக்களுக்குக் கவிராசர் சொல்லிய விடைகள். அப்பால் அவர் கோபமொழியும் பிறவும்.

---

## சரவணமுத்துப்பிள்ளை.

---

இவரூர் யாழ்ப்பாணத்துள்ள ஊரெழு. பிற்கால வாசஸ்தானம் நல்லூர். குலம் வேளாளர்குலம். சமயம் சைவம். காலம் சில மாசங்களுக்கு முன். இவர் முருகேசபண்டிதர்க்கு மாணவகர். இலக்கிய இலக்கணங்களுஞ் சித்தாந்த சாத்திரங்களுங் கற்றவர்.

வாக்கியத்தொடையில் வல்லவர். உதயபானுமுதலிய பஞ்சிகைக ளுக்குத் தலைவராயிருந்தவர். பஞ்சிகைகளிற் பலவிடயங்கள் வரைந் தவர். இலங்கையிலும், பாண்டிய சோழமண்டலங்களிலும் சித்தாந் தப் பிரசங்கங்கள் செய்து வித்துவான்களால் மதிக்கப்பெற்றவர். கவிபாடுந் திறமுமுடையவர். பாற்கரசேதுபதி மகாராசாமேற் பிர பந்தம்பாடிப் பரிசில் பெற்றவர். பல தனிநிலைக்கவிகளும் பாடினவர்.

கட்டளைக்கலித்துறை.

க. தேனோ கனியோ வெனவே சுவைக்குஞ் செழுந்தமிழில்
தானே தனக்கிணை யாகி யுதித்துயர் சற்குருவாய்
வானோர் புகழ்நல்லை வந்தரு ளாவலன் வண்புகழை
நானோ சொலவல்லன் சேடனுங் கூறிட நாணுவனே.

உ. கற்றோர் புகழ்சைவ சித்தாந்தப் பாலின் கடல்கடந்து
மற்றோர் நினைக்கருஞ் சைவப்ர காசன மாவமிழ்தை
நற்றா ரணிச்சைவ நற்புல வோர்க்கு நயந்தளித்தான்
வற்றா வறிவுடைச் சங்கர பண்டித மாதவனே.

---

## சரவணமுத்துப்புலவர்.

இவரூர் யாழ்ப்பாணத்துள்ள நல்லூர். குலம் வேளாளர் குலம். சமயம் சைவம். காலம் ஏறக்குறைய இற்றைக்கு அறுபத் தைந்து வருடங்களுக்கு முன். இவர் சேனாதிராயமுதலியாருக்கு மாணவகர். இலக்கியலக்கணங்களும், வேதாந்த சித்தாந்தங்களும் வேறு நூல்களும் நன்கு கற்றவர். வேதாந்தசுயஞ்சோதி, ஆத்தும போதப்பிரகாசிகை என்னும் நூல்களையும் இயற்றினவர் என்பர். உதயதாரகையிலே இலக்கியலக்கணவிடயங்களில் வேதகிரிமுதலி யாரோடும் வேறு புலவர்களோடும் வாதசாதனவுரைகளும் வரைந்த வர். வேறுவிடயங்களும்வரைந்தவர். அவற்றுள்ளுஞ் சிலகாட்டுதும்.

தருமலிங்கசுவாமி.

முகாமைக்காரர்களே!

அங்கிங்கெனாதபடி எங்கும்பிரகாசமாய் அருளொளி இருக்கை யால் அதனுண்மையைப் போதிக்கவிரும்புகிறவர்கள் அக்காலத்தில் நிகழ்ந்த சிற்சில அற்புதங்களைமாத்திரம் அத்தாட்சிப்படுத்திச் சாதிப்பதுபோல இக்காலத்திலும் வேதாரணியம் தருமலிங்கசுவாமி களில் அவ்வருளொளி மகிமை விளங்குவதினால் அதிற் சந்தேக விப ரீதங் கொள்ளாமற் சித்தசுத்தியுள்ளவர்களும், சத்திய சமாதானி

களுமாய் இருக்கிற நீங்கள் சகலசனங்களும் அறிந்து உய்யும்பொருட்டு உதயதாரகைப் பத்திரத்திற் பின் வரும் புன்கவியைப் பதிப்பித்துவிடும்படி உங்களைக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

ஆசிரியவிருத்தம்.

சுத்திபெற லாம்புத்தி முத்திபெற லாம்பவுத்ர
சுகபுத்தி ராதி பெறலாந்
தொலையாத குன்மகய ரோகமுத னோய்களொரு
சொல்லிலே சுத்தி பெறலாம்
பத்திபெற லாம்குருடு கூன்செவிடு சப்பாணி
பரிசுத்த மாகை பெறலாம்
பயமேறு பூதப் பிரேதப் பசாசுகள்
பறந்தோட வெற்றி பெறலாம்
சித்திபெற லாஞ்சுத்த வித்தைபெற லாஞ்செயச்
சிற்சுரூப மகிமை பெறலாம்
சிவயோக மாதிபல வகையோக சாதனச்
சிவபோக திர்ப்தி பெறலாம்
சத்திபெற லாஞ்சைவ தர்மலிங் கச்சாமி
சந்நிதி யடைந்து பணிமின்
சற்சங்க சகலசன சமயபரி பாலர்காள்
சத்தி யஞ்சத் தியமிதே.

சகத்துநிண்ணயத்துணிபுரை.

கருத்தாவைப்போலச் சிருட்டியும் அநாதி என வாதிப்பது காண்டல், கருதல் முதலிய பிரமாணங்களுக்கு விரோதம். நிமித்த காரணமாகிய கருத்தாச் சூக்குமயோசன சாத்த விகற்ப அந்தருத்திரேகத்தைப் பண்ணி இச்சாஞானங்களைக்கொண்டு "மண்ணினிற் கடாதி யெல்லாம் வருவது குலாலனாலே—எண்ணிய வுருவமெல்லா மியற்றுவனீசன்" என்பதுபோலச் சகத்தைச் சிருட்டிக்க வேண்டுகையாற் கருத்தாவைப்போலச் சிருட்டி அநாதியன்று. ஆதி என்பதற்குத் திருட்டாந்தம் சிவஞானசித்தியார். "இலங்கிய தோற்ற நிற்ற லீறிவை யிசைத லாலே—நலங்கிளர் தோற்ற நாசந் தனக்கிலா நாதன் வேண்டும்" என்றும், "உலகமெல்லாந் தருபவ னொருவன் வேண்டும்" என்றும், திருமந்திரம் "ஒருவனுமே யுலகேழும் படைத்தான்" என்றும் வருவனவற்றிற் காண்க.

---

## சாந்தலிங்கக்கவிராசர்.

இவரூர் சோழமண்டலத்துள்ள தண்டலைச்சேரி. சமயம் சைவம். இவர் வேதாகமங்களும் புராணங்களும் கூறும் நீதிகளை

நோக்கி, உலகில் வழங்கும் பழமொழிகளையும் அவற்றோடு பொருத்திப் பழமொழிவிளக்கம் என ஒரு நூல் செய்தவர். பழமொழிவிளக்கத்திலே அந்த நீதிகளன்றி உலகியலுங் கூறுவர். படிப்பின்றிக் குருக்கள் என்று இருப்பவரைநோக்கி "அருண்மிகுத்த வாகமநூல் படித்தறியார் கேள்வி ஒன்றும் அறியார் பின்னும்—இருவினையின் பயனறியார் குருக்களென்றே உபதேசம் எவர்க்குஞ் செய்வார்" என்பர். பொய்சொல்லும் புல்லரை நோக்கிப் "பொய்சொல்லும் வாயினர்க்குப் போசனமுங் கிடையாது" என்பர். அகங்காரிகளை நோக்கிக் "கெறுவமுட னகந்தையுளா ரிறுமாந்து தலைகீழா வீழ்வார்" என்பர்.

கபடவேடதாரிகளை நோக்கிக் "காதிலே குண்டலங்கள் கையிலே செபமாலை கழுத்தில் மார்பில்-மீதிலே தாழ்வடங்கள் மனதிலே கரவடமாம் வேடம் பூண்போன்" உருத்திராக்கப் பூனை என்பர். கடும்வட்டி வாங்குங் கயவரை நோக்கி "ஒன்று பத்து விலை கூறி அநியாய வட்டி வாங்கிக்—கண்டவர்தங் கடுந்தேட்டுக் கண்ணையறக் கெடுக்கும்" என்பர். பாடும்வகை பயிலாது பாடுவாரை நோக்கித் "தழுதழுத்துப் பாடுவதின் மவுனமா யிருப்பதுவே தக்கதாகும்" என்பர். ஒரு தீங்கு நினைத்துப் பல நன்றி மறப்பவரை நோக்கி "நித்த மெழுநூறு நன்றி செய்தாலும் ஒரு தீது நேரே செய்தால்—அத்தனையுந் தீதென்றே அழித்திடுவர் கயவர்" என்பர்.

விருத்தம்.

செழுங்கள்ளி னிறைசோலைத் தண்டலையார் திருப்பணிக்குட்
டிருடிக் கொண்டே
எழுங்கள்ளர் நல்லகள்ளர் பொல்லாத கள்ளரவர்
எவரோ வென்னிற்
கொழுங்கள்ள முடனேகும் பிடிகள்ளர் திருநீறு
குழைக்குங் கள்ளர்
அழுங்கள்ளர் தொழுங்கள்ள ராசாரக் கள்ளரிவர்
ஐவர் தாமே.

---

## சாந்தலிங்கசுவாமி.

இவரூர் நடுநாட்டிலுள்ள திருத்துறையூர். குலம் சங்கமகுலம். சமயம் சைவம். மேலைச்சிதம்பரம் எனப்படும் பேரூரிலே மடாலயம் ஒன்று தாபித்து வசித்தவர். வைராக்கியசதகம், வைராக்கியதீபம், அவிரோதவுந்தியார், கொலைமறுத்தல் என்னும் நூல்கள் செய்தவர்.

வைராக்கியசதகம்.

கவிலி லிம்மனை மக்களுக் கொருதுணை
நாமலா திலை யென்றே
கவலை யுற்றரன் ருண்மறந் தனையுனைக்
காலனர் கொடு போயிற்
குவல யத்தடைந் திவரைநா டொறும்புரந்
திடுவையோ குறிக்குங் காற்
சவலை நெஞ்சமே சிவனலா துயிர்க்குயிர்
தானு மோர்துணை யாமோ.

---

## சாந்துப்புலவர்.

இவரூர் பாண்டிமண்டலத்துள்ள திருப்புனவாயிலை அடுத்த சிறுகம்பையூர் என்பர். குலம் வேளாளர்குலம். சமயம் சைவம். இவர் மயூரகிரிக்கோவை என்னும் பிரபந்தஞ் செய்தவர். இக் கோவை சொற்சிறப்பும் பொருட்சிறப்பும் நன்கு வாய்ந்தது.

மயூரகிரிக்கோவை.

பாடாத தும்பி யணியாத மாதங்கம் பட்சியொன்றிற்
கோடாத நாகஞ் சுடாத கரிகொடி யோர்சிறைக்குத்
தேடா விலங்கு குகன்மயில் வெற்பிற் றெரித்தகொம்பு
வாடாத மாவென் பதுகாய மேவி வரிற்சொல்லுமே.

இது வேழம் வினுதல். இங்கே வரும் பலபொருளொருசொற்களாகிய தும்பி, மாதங்கம், நாகம், கரி, விலங்கு, மா என்பன பிறவற்றிற் செல்லாமல் யானையையே குறிக்கும்படி பாடாத என்பது முதலிய வினைகளால் எதிர்மறுத்துரைக்கப்பட்டன. இது வினையெதிர்மறுத்துப் பொருள்புலப்படுத்தணி.

---

## சிதம்பரப்பிள்ளை.

இவரூர் யாழ்ப்பாணத்துள்ள சங்குவேலி. குலம் வேளாளர் குலம். சமயம் கிறிஸ்துசமயம். காலம் இற்றைக்கு இருபத்தேழு வருடங்களுக்கு முன். இவர் முத்துக்குமாரப்பிள்ளைக்கு மைந்தர். இந்துகல்லூரிப் பிரதமாசிரியர் செல்வத்துரைப்பிள்ளைக்குத் தந்தையார். அங்கிலபாடையிலே தர்க்கம், கணிதம் முதலிய பலவகைத் துறைகளினுஞ் சென்று பாண்டித்தியம் பெற்றவர். பாடசாலைகளிலே உபாத்தியாயராயிருந்து பலரையுங் கற்பித்தவர். தமிழ்ப்பாஷையி

னும் இலக்கியம், இலக்கணம் முதலியன கற்றுப் பாண்டித்தியம் பெற்றவர். அரம்போலுங் கூரிய விவேகசிலர். இருமொழிகளிலும் அரிதுணர் சொற்கள் பல அறிந்தவர். அங்கிலமொழிகளைத் தமிழிற் பெயர்க்குங்கால் அவற்றிற்குப் பொருளாலே நன்கியையுந் தமிழ்ச் சொற்களையும் வடசொற்களையுந் தெரிந்தெடுத்துச் சேர்த்து வாக்கியத் தொடுக்கும் வன்மையிற் சிறந்தவர். அங்கிலமொழிகளுக்குச் சமமான பொருளுடைய தமிழ்மொழிகளை ஆராய்ந்தெடுத்துக் கற்பவர் நன்குணருமாறு அங்கிலமுந் தமிழுமாக அகராதியும் ஒன்று செய்தவர். உவின்சிலோ அகராதிக்குந் துணைநின்றவர்.

இலங்கைநேசன் முதலிய பஞ்சிகைகளிலும் பல விடயங்கள் வரைந்தவர். பாடசாலைக்கணிதம் என்னும் விடயத்திலே ஒன்பது என்னுஞ் சொல் சங்கியான முறைக்கு மாறாய் நிற்றலால் ஒன்பது என்பதற்குச் சமமான பொருளுடைய தொண்டு என்பதை ஒன்பது நின்ற இடத்திலே வைத்தும், பின்னும் ஒன்பது என்பது வரும் பத்தொன்பது, இருபத்தொன்பது முதலியவைகளைப் பதின்மூன்று, இருபதின்மூன்று முதலியனவாகக்கொண்டும், தொண்ணூறு என்பது நிற்குமிடத்திலே எழுபது, எண்பது என்பனபோலப் பத்து என்பதன் விகாரமாகிய பது என்பது பின்னே தோன்றத் தொண்பது என்பதை வைத்தும், தொள்ளாயிரம் என்பது நிற்கும் இடத்திலே எழுநூறு, எண்ணூறுபோல நூறு என்பது பின்னே தோன்றத் தொண்ணூறு என்பதை வைத்தும் முடித்தலே பொருத்தம் எனவும் எழுதினவர்.

படிப்பவர்பொருட்டுப் பாரதம், இராமாயணம் முதலிய இலக்கியங்களிலிருந்து சில கவிகளைத் திரட்டி இலக்கியசங்கிரகம் என ஒரு நூலும், இலக்கணவிதிகள் சிலவற்றைச் சேர்த்துத் தமிழ்வியாகரணம் என ஒரு நூலும், அங்கிலதர்க்கவிதிகள் சிலவற்றைத் தமிழிற்பெயர்த்துப் பாட்டும் உரையுமாக நியாயலக்கணம் என ஒரு நூலும் இயற்றி அச்சிட்டவர். நியாயலக்கணநூலினிறுதியிலே சித்தியார் கூறும் அளவைகளையுஞ் சேர்த்து விளக்கினவர். இவையன்றிப் பல தனிநிலைக்கவிகளுஞ் செய்தவர்.

நியாயலக்கணம்.

உலகம் புகழு நியாய லக்கணம் யுத்தியதன்
கலைவித்தை யென்ப நியாய நடையினுக் காதரமாய்
உலவு மிலக்கண மேதெளியுங்கலை வித்தை யென்ப
நலமின்று புந்தி யனுமிக்க வேவிதி யாய்ந்திடுமே.

---

## சிந்நயச்செட்டியார்.

இவரூர் பாண்டிமண்டலத்துள்ள தேவிகோட்டை. குலம் வைசியர்குலம். சமயம் சைவம். காலம் ஏறக்குறைய இற்றைக்குப் பன்னிரு வருடங்களுக்கு முன் என்பர். வன்றொண்டச்செட்டியாருக்கு மாணவகர். இலக்கிய லக்கணமுஞ் சித்தாந்த சாத்திரமும் இனிது கற்றவர். கவிபாடுந் திறமும்பெற்றவர். தேவைத்திரிபந்தாதி, அருணைச்சிலேடைவெண்பாமாலை, மதுரைமீனாட்சியம்மைபதிகம் முதலிய பிரபந்தங்கள் செய்தவர்.

அருணைச்சிலேடைவெண்பாமாலை.

கொம்பனையார் நம்புகற்பிற் கோயிலின்றி வீற்றிடத்தில்
அம்ப லமலா வருணையே—உம்பருய்ய
உண்பாக் கமைந்த னுசித நஞ்சுமுண்ட மைந்தன்
வெண்பாக்க மைந்தன் விருப்பு.

அம்பல் - பழிமொழி. அமலல் - நெருங்கல். அம்பலம் - சபை. உண்பாக்கு - உண்ண. அமைந்து, அனுசிதம். மைந்து - வலி. வெண்பாக்கம் - ஒரு சிவஸ்தலம்.

---

## சிவசம்புப்புலவர்.

இவரூர் யாழ்ப்பானத்துள்ள உடுப்பிட்டி. சமயம் சைவம். காலம் ஏறக்குறைய இற்றைக்கு ஆறு வருடங்களுக்கு முன். சம்பந்தப்புலவர்க்குஞ் சரவணமுத்துப்புலவருக்கும் மாணவகர். பாரதம், இராமாயணம் முதலிய இலக்கியங்களையும், தொல்காப்பியம் நன்னூல்முதலிய இலக்கணங்களையும், வேறு நூல்களையுங் கற்றவர். அவைகளைப் பல மாணவகர்க்குங் கற்பித்தவர். சொல்லும் பொருளும் தொடைவகைகளும் சிறப்புறவைத்துக் கவியமைக்கும் புலமையிற் சிறந்தவர். பல தனிநிலைக்கவிகளும், பல பிரபந்தங்களும் பாடினவர். யமகவந்தாதி, திரிபந்தாதிகளும் பாடினவர்.

தமிழ்ப்பாஷாபிமானியுஞ் சைவப்பிரசங்கசிங்கமும் பிரபல தியாகவானுமாய்ப் பெரும்புகழ் பெற்று விளங்கிய பாற்கரசேதுபதி மஹாராசாவின்மீது கல்லாடசாரக்கலித்துறையும், வேறு கவிகளும் பாடிப்போய் அவர் முன்னிலையில் அரங்கேற்றித் தக்க பரிசிலும் பெற்றவர்.

கந்தவனநாதர்பதிகம், வல்லிபுரநாதர்பதிகம், செந்தில்யமக வந்தாதி, திருவேரகவந்தாதி, எட்டிகுடிப்பிரபந்தம், புலோலிநான் மணிமாலை முதலிய வேறு பிரபந்தங்களுஞ் செய்தவர். யாப்பருங் கலக்காரிகையுரை முதலிய உரைகளுஞ் செய்தவர்.

கல்லாடசாரக்கலித்துறை.

அண்ணுந்த வம்ம மருப்பிடை சீயஞ்செவ் வாம்பலிதழ்
கண்ணுந் தகமுக மப்போ தலர்ந்த கடிக்கமலம்
விண்ணுந் தனித முகிலோதி சம்பக மேனிசுவைப்
பண்ணுந் தகைமொழி பாற்கரன் மால்வரைப் பைந்தொடிக்கே.

நாவலர்மீதுபாடியது.

ஆரூரு னில்லை புகலியர் கோனில்லை யப்பனில்லை
சீரூரு மாணிக்க வாசக னில்லை திசையளந்த
பேரூரு மாறு முகநா வலனில்லை பின்னிங்கியார்
நீரூரும் வேணியன் மார்க்கத்தைப் போதிக்கு நீர்மையரே.

---

## சிவஞானமுனிவர்.

இவரூர் பாண்டிமண்டலத்துள்ள விக்கிரமசிங்கபுரம். குலம் அகத்தியர் வரத்தாலே தலைமுறை ஏழுவரை புலமைநிறைந்த பாண்டிவேளாளர்குலம். சமயம் சைவம். காலம் இற்றைக்கு நூற்று நாற்பது வருடங்களுக்கு முன் என்பர். தந்தையார் அம்பலக்கூத்தர். தாயார் மயிலம்மையார். இவர் பாடசாலையிற் படிக்கும்போதே பாடும் வரமும் அமைந்தவர். குருலிங்கசங்கமபத்தியிற் சிறந்தவர். திருவாவடுதுறையிற் சென்று ஞானதேசிகராயிருந்த பின்வேலப்ப தேசிகரைக் கண்டு பணிந்து சிவதீக்கை முதலியன பெற்று அங்கே வசித்தவர். வடமொழி தென்மொழி என்னும் இருமொழிகளிலும் பூரணபாண்டித்தியம்பெற்றவர். இலக்கியலக்கண நூல்களும், சைவ சித்தாந்த நூல்களும், மற்றைச் சமய நூல்களும், தருக்கம் முதலிய மற்றை நூல்களும், உரைநூல்களும் நுணுக்கம்பெறக் கற்றவர். அவைகளைக் கச்சியப்பமுனிவர் முதலிய பன்னிருமாணவகர்களுக்கும், பிறர்க்குங் கற்பித்தவர்.

இவர் நோக்காத சங்கச்சான்றோர் நூல்களும் இல்லை. வேறு சான்றோர் நூல்களுமில்லை. திருமுறை நூல்களும் இல்லை. சித்தாந்த நூல்களும் இல்லை. கருவி நூல்களும் இல்லை. சமய நூல்களும் இல்லை உரைகளும் இல்லை. இவருரைகளிலே இந்தச் சான்றோர் நூல்களும் பிறவும் பிரமாணமாக ஆங்காங்கு வருகின்றன.

இவர், ஆசு மதுரம் சித்திரம் வித்தாரம் என்னுங் கவிகள் பாடுந் திறமும், யமகவந்தாதி, திரிபந்தாதி முதலிய சிறுகாப்பியஞ் செய்யுந் திறமும், பலவகை வருணனைகளும் அமையும் பெருங்காப்பியஞ் செய்யுந் திறமும், மொழிபெயர்ப்புச் செய்யுந் திறமும், சுருக்கியும், விரித்தும் உரைவகை செய்யுந் திறமும், மறுப்புரை செய்யுந் திறமுமாகிய பலவகைத்திறமும் பெரிதமைந்த அருட்புலமையாளர். இவர் புலமையின் பெருமையும், இவர் நூலுரைகளின் அருமையும், இவர் நூலுரைகளாலே தமிழ்நாடு பெறும் நன்மையும் "ஆயிரங்கவை நாவர வஞ்சொல—ஆயிரங்கர வாணன் பொறிக்கினு மடங்குவன" வல்ல என்போம்.

இவர் இயற்றிய நூல்கள்: காஞ்சிப்புராண முதற்காண்டம், கம்பரந்தாதி, முல்லையந்தாதி, முதுமொழிவெண்பா, அமுதாம்பிகை பிள்ளைத்தமிழ், செங்கழுநீர்விநாயகர்பிள்ளைத்தமிழ், சிவதத்துவ விவேகம், தர்க்கசங்கிரகவுரை, சித்தாந்தப்பிரகாசிகை முதலியன. இவற்றுட் காஞ்சிப்புராணம், சிவதத்துவவிவேகம் முதலியன சில மொழிபெயர்ப்பு. உரைகள்: சிவஞானசித்தியாருரை, சிவஞானபோதச்சிற்றுரை, சிவஞானபோதமாபாடியம், தொல்காப்பிய முதற்சூத்திரவிருத்தி முதலியன. மறுப்புரைகள்: இலக்கணவிளக்கச்சூறுவளி, சிவசமவாதவுரைமறுப்பு முதலியன.

காஞ்சிப்புராணத்திலே கோமூத்திரி, கூடசதுர்த்தம் முதலிய சித்திரகவிகளும், யமகங்களுந், திரிபுகளும், பெருங்காப்பிய வருணனைகளும் விசேடமாய் விரவக் கூறுவர். முதுமொழிவெண்பாவிலே அதிகாரத்துக்கு ஒன்றாகத் திருக்குறள்வெண்பாக்களைப் பின்னீரடிகளாக நிறுத்தி, அவற்றிற்கு இயையும் உதாரணங்களாகப் புராணகதைகளை முன்னீரடிகளிலும் பொருத்தி நேரிசைவெண்பாவிலே நீதிகளை முடிப்பர். மாபாடியத்திலே அரிய இலக்கணவிதிகளையும், அவற்றிற்குச் சான்றாய்வரும் பழைய நூற்பிரமாணங்களையும், துணிபொருட்குச் சான்றாய்வரும் ஆகமப்பிரமாணங்களையும், மறுதலைகூறும் மதமறுப்புக்களையும், பிறவற்றையும் விரித்துக் கூறுவர்.

தனிநிலையாகவுஞ் சில கவிகள் செய்தவர். திருப்பாதிரிப்புலியூர்ச் சிவாலயத்திலே சில வித்துவான்களும் பிரபுக்களுங் கூடிச் சவையிலே "கரையேற விட்டமுதல் வாவுன்னை யன்றியுமோர் கதியுண் டாமோ" என்னும் இவ்வடியை இறுதியடியாக வைத்துக் கவி ஒன்று பாடினவர்க்கு இப்பொற்கிழி என்றதை யாத்திரையாய் வந்த இவரறிந்து மற்றை மூன்றடிகளையும் பாடிக் கவியை முடித்துப்

பொற்கிழியில் இருந்த நூறு பொன்னையும் ஏழைப் பிராமணன் ஒருவன் எடுக்கச் செய்தவர். தாயார் புரிந்த விருந்தோம்பலின் பெருமையைச் சுட்டி "அருந்ததியென்னம்மை" என்றோர் அழகிய செய்யுளும் பாடினவர். அரிதுணர்தற்பாலதாகிய "அங்கோழி முட்டை" என்னுந் தனிநிலைக்கவிக்கு வரையப்பட்டிருக்கும் விரிவுரையையும் இவருரை என்பர். இவர் சரிதவிரிவை அச்சிட்ட இவர் பிரபந்தத்திரட்டு முதலியவைகளிற் காண்க.

காஞ்சிப்புராணம்.

க. விகட சக்கர வாரணந் தொடர்வரும் வித்தக முகில்வீற
விகட சக்கர வித்தமன் னவன்றனக் கருளுமெய்த் தலைவாகு
விகட சக்கர வாகமென் முலையுமை கான்முளை யென்னுச்சே
விகட சக்கர ரெத்திர மௌச்சுழல் வெம்பவக் கடனெஞ்சே.

விகடசக்கர - விகடசக்கர விநாயகரே! ஆரணம் - வேதம். வித்தக - வித்தகரே! முகில் வீறு அவி கட - முகிலின் பெருமையை அழிக்கின்ற மதமுடையவரே! சக்கு - கண். அன்னவன் - ஒத்தவன். குவி கடம் சக்கரவாகம் என் - குவிந்த குடமுஞ் சக்கரவாகமும் என்கின்ற. கான்முளை - மகன். என்னு - என்று. நேஞ்சே! சேவிபவக்கடல் கட. சக்கார் - குயவர்.

கம்பரந்தாதி.

உ. வந்தனை யாவதுஞ் செய்தறி யாமன மேமறலி
வந்தனை யாவது பார்நர கென்னுமுன் வாய்த்திடுத
வந்தனை யாவது செய்தார்க் கருண்மயி லூரருட்ப
வந்தனை யாவது லாகம்ப னேயென்று வாழ்த்துவையே.

வந்தனை - வழிபாடு. யாவதும் - சிறிதும். மறலி - இயமன். வந்தனையா - வந்தாயா? அது, பார், நரகு. தவம்தனை - தவத்தை. மயிலூர் அருட்பவம் தன் ஐயா - முருகபிரானுக்குப் பிதாவே! அதுலா - ஒப்பிலியே.

முதுமொழிவெண்பா.

ங. போசன் கவிஞருக்குப் போதப் பரிந்தளித்துத்
தூசிலாக் கீர்த்தி கொண்டான் சோமேசா—ஆசையுடன்
ஈத லிசைபட வாழ்த லதுவல்ல
தூதிய மில்லை யுயிர்க்கு.

தனிநிலைக்கவி.

ச. வரையேற விட்டமுதஞ் சேர்ந்தனிட வருந்தினைவல் வினமென் றூலும்
உரையேற விட்டமுத லாகுமோ வெனைச்சித்தென் றுரைக்கி லென்னும்
நரையேற விட்டமுத னவனுக் கொண்டுநேறும் புவிசை மேவுங்
கரையேற விட்டமுதல் வாவுன்னை யன்றியுமோர் கதியுண் டாமோ.

வரையேல் - தள்ளாதே. தவிடு அமுதம் சேந்தன் இட அருந்தினை - தவிட்டொடு கூடிய அன்னத்தையுஞ் சேந்தனர் தர உண்டருளினீர். விட்டம் உரையேற முதலாகுமோ - பிரிந்து தொழிலமைந்த விட்டமரமானது முதலாகிய மரமாகுமோ? எனை சித்து என்று உரைக்கில் என்னும் - அறிவிக்க அறியும் தன்மைநோக்கி மலசம்பந்தமுள்ள ஆன்மாவாகிய என்னைச் சித்து என்றுசொல்லின்; அதனுற் பயன் யாது? அறியாது இயல்பாய் அறியும் பேரறிவுடைய உமது தன்மையை அடைவேனு? உம்மை நோக்க நான் அசித்து அல்லேனு? (விட்டமரம் முதன் மரத்தினின்று வேருதல்போல நானும் வேறன்றே!)

நரையேறு — வெள்ளையிடபம். அவிட்டமுதனுளவன் — விட்டுணு. அவிட்டமுதனுள் - திருவோணம். புலிசை - புலியூர். கரையேற விட்டமுதல்வன் — திருப்பாதிரிப்புலியூரிலிருக்கும் சுவாமி. அவர் நாவரசரைக் கடலினின்றுங் கரையேறவிட்டவர்.

விருந்தோம்பல்.

கூ. அருந்ததியெ னம்மை யடியவர்கட் கென்றுந்
திருந்த வமுதளிக்குஞ் செல்வி—பொருந்தவே
ஆனந்தக் கூத்த ரகமகிழத் தொண்டுசெயும்
மானந் தவாத மயில்.

அங்கோழி முட்டை யுறப்புவி யாண்டல ராலவிந்த
வெங்கோழி முட்டைமுன் சேரா வுருப்பவெல் வெம்மைபஞ்சே
ருங்கோழி முட்டை வரும்பாலை போல வுருக்குமந்தோ
செங்கோழி முட்டைக் கருப்போ லெழுந்த செழுந்திங்களே.

(இ - ள்.) அழகிய உறையூரானது முட்டினையுறும்படி உலகத்தை ஆண்டு செவ்வந்திப்பூக்காரணமாக மண்மாரியால் அவிந்த வெவ்விய அரசனுருட்டுந் திகிரியும், அவனைக் கொல்லவந்த மேகமும், அவன் கையிற் படைக்கலமும்போலும் வெப்பமும் கொழுத்த யானையும் முள்ளும் பரம்பாநின்ற பாலைநிலத்தைப்போல உருத்தலைச் செய்யாநிற்கும்; செவ்விய கோழியினது முட்டையாகிய கருவைப்போலெழுந்து ஒளிர்கின்ற வளவிய திங்கள் ஒன்றே என்பது பொருள்.

அம் - அழகு. கோழி - உறையூர். முட்டை - முட்டுப்பாட்டினை. வெங்கோ - வெவ்விய அரசன். (வெங்கோ என்பதற்குப் பின்வரும்) ழி, மு, டை என்னும் எழுத்துக்கள் பின்னர் நிற்ப அவற்றின் முன்னே முறையே பொருந்தும் ஆ, உரு, ப என்பவற்றுலாய

சொற்களாவன: ஆழி, உருமு, படை என்பன. பம் என்பதைச் சேர்ந்த கோழியாவது கோழிபம் என்பது. முள் - முள்ளு. தைவரல் - தடவல். செங்கோழி - செவ்விப் கோழி. இது சுருக்கம். விரிவும் வருமாயின் மிகவும் விரியும்.

செந்தமிழ்ப்பத்திரிகையிலே மொழிபெயர்ப்பு என்னும் பொதுமொழியோடு யாம் எழுதிய விடயத்துள்ளே இவருடைய மொழிபெயர்ப்பின் நெறி கூறும் பாகத்தையும் ஈண்டுக் காட்டுதும்.

மொழிபெயர்ப்பு.

வடமொழியிலிருந்து தென்மொழியிற் பெயர்த்து வசனநடையாக இயற்றப்பட்ட நூல்களுள்ளே சிவஞானமுனிவருடைய தர்க்கசங்கிரகமும், அதனுரையும் மொழிபெயர்ப்பு என்னும் யாப்பினாலே நூல்செய்வோர்க்கெல்லாம் தக்க பிரமாணமாய் வழிகாட்டி நிற்கின்றன. மூலத்திலே நின்றாங்கு மொழிபெயர்த்தற் கியையாத வாக்கியங்களெல்லாஞ் செந்தமிழ்க்குரிய நெறியமையுமாறு கொண்டு கூட்டிச் சொற்பொருளும் வழுவாமற் பெயர்த்தமைக்கப்பட்டிருக்கின்றன. தமிழ்ச்சொற்கள் தெரியாமல் வடசொற்கள்கொண்டு பலநாளாக வழங்கிவந்த எத்தனையோ பொருள்களுக்குத் தக்க தமிழ்ச்சொற்கள் பிரயோகிக்கப்பட்டிருக்கின்றன. அவற்றுள்ளுஞ் சில காட்டுதும்.

| | |
|---|---|
| க. வியுற்பத்தி - சொற்பொருள். | சு. பிரதிஞ்ஞை - மேற்கோள். |
| உ. பிரவிருத்தி - முயலுந்தொழில். | எ. தாற்பரியம் - சொல்லவிரும்பியது. |
| ௩. வாக்கியம் - தொடர்மொழி. | அ. அருத்தவாதம் - புனைந்துரை. |
| ச. அந்நுவயம் - கொண்டுகூட்டு. | கூ. விடயம் - பொருள். |
| ரு. ஆச்சிரமம் - பற்றுக்கோடு. | க0. அநுமானம் - வழியளவை. |

---

## சிவப்பிரகாசசுவாமி.

இவரூர் காஞ்சிபுரம். வாசஸ்தானம் துறைமங்கலம். குலம் சங்கமகுலம். சமயம் வீரசைவம். காலம் ஏறக்குறைய இற்றைக்கு இருநூறு வருடங்களுக்கு முன் என்பர். இவர் வேலையர், கருணைப்பிரகாசர் என்னும் இருவர்க்குஞ் சிரேட்டர். வடமொழி தென்மொழிகளினுள்ள பலவகை நூல்களுங் கற்றவர். கலைமகள் அருளாற் கவிபாடுந்திறம் பெற்றவர். கனிட்டர்களோடுந் தென்னாடு சென்று திருநெல்வேலியிற் சிந்துபூந்துறையிலிருந்த வெள்ளியம்பலத்தம்பிரான் வாயிலாகப் பஞ்சலக்கணமும் பயின்றவர். கு என்பது ஆதி

அந்தங்களிலும் ஊருடையான் என்பது நடுவிலும் வரும்படி வெண்பா ஒன்று பாடுக என்று தம்பிரான் பணித்தபோது அப்படி வருமாறமைத்து வெண்பா ஒன்று பாடிமுடித்தவர்.

வெண்பா.

குடக்கோடு வானெயிறு கொண்டார்க்குக் கேழன்
முடக்கோடு முன்னமணி வார்க்கு—வடக்கோடு
தேருடையான் றெவ்வுக்குத் தில்லைதோன் மேற்கொள்ளல்
ஊருடையா னென்னு முலகு.

குடக்கோடுவான் - சூரியன். எயிறு - பல். கேழல் - பன்றி. கோடு - கொம்பு. வடக்கோடுதேருடையான் - மன்மதன். வடக்கோடு தேர் - தென்றற்றேர். தெவ் - பகை. தில்லை ஊர் எனவும், தோல் உடை எனவும், மேற்கொள்ளல் ஆன் எனவுங் கூட்டி முடிக்க. மேற்கொள்ளல் - ஏறுதல். ஆன் - இடபம்.

இலக்கணங்கள் பயின்றபின் தம்பிரான் விரும்பியவாறே திருச்செந்தூர் சென்று தம்பிரானுக்குப் பகைவராய் இருந்த புலவரைக் கண்டு "நாம் இருவேமும் நிரோட்டயமகம் பாடுவாம். பாடினவர்க்குப் பாடமாட்டாதவர் அடிமை" என்னும் நிபந்தனைக்கு உடம்படுத்திக்கொண்டு பாடத்தொடங்கிச் செந்தூர்க் கந்தவேண்மீது நிரோட்டயமகமாக முப்பது பாடி முடித்தவர். முடித்தபின் ஒன்றும் பாட இயலாமல் நின்றவராகிய அந்தப் புலவரை அடிமையாக்கித் தம்பிரானிடஞ் சேர்த்தவர்.

சிவஸ்தல யாத்திரையிற் சென்றபோது சில தலங்களின்மீது பிரபந்தங்களுஞ் செய்தவர். சிலசில தனிநிலைக்கவிகளுஞ் செய்தவர். வெங்கைக்கோவை, பழமலையந்தாதி, வேதாந்தசூடாமணி, திருச்செந்திநிரோட்டயமகவந்தாதி, நன்னெறி, கூவப்புராணம், நால்வர்நான்மணிமாலை, கைத்தலமாலை, வெங்கைக்கலம்பகம், சோணசைலமாலை, தர்க்கபாஷை மொழிபெயர்ப்பு முதலிய பல நூல்கள் செய்தவர். சிகாளத்திப்புராணத்திலே நக்கீரச்சருக்கம், கண்ணப்பச்சருக்கம் எனவருஞ் சருக்கங்கள் இரண்டும் பாடினவர். வீரமாமுனிவரோடு வாதஞ்செய்து ஏசுமதநிராகரணம் என்னும் நூலும் பாடினவர் என்பர்.

வேங்கைக்கோவை.

க. பொய்ம்மே வருபுனங் காவலர் யாங்கள் புனநடுவே
வம்மே வுறுமது காப்பவ னீவளை சூழ்வதெம்மூர்
நம்மே லருள்வைத் தளிப்பார் திருவெங்கை நாட்டிலுன்னூர்
கும்மேல் வரும்வளை செய்காட் டுவெதொண் குலோத்துங்கனே.

இது குலமுறைகிளத்தல் என்னுந் துறைத்து. புனநடுவே வம் மேவுறுமது - புவனம். வ - வகரம். கும்மேல் வரும் வளை - குவளை. கு - குகாரம்.

பழமலையந்தாதி.

உ. தெய்வசி காமணி யேமணி கூடலிற் சென்றுவிற்ற
மெய்வசி காமணி கண்டா பழமலை வித்தகமீன்
நெய்வசி காமணி மாவெனும் கண்ணியை நெஞ்சகத்து
வைவசி காமணி ஞேவா தெனையின்ப வாழ்வளித்தே.

சிகாமணி - முடிமணி. கூடல் - மதுரை. வசிகா - வணிகனே. நெய் வசி கா மணி மா எனும் - நெய்பூசிய வாளும், காவிலுள்ள அழகிய மாம்பிஞ்சின் பிளவும் என்னும். வை - வைத்துக்கொள். வசி - இரு. கா - பேணுதி. மணில் - பூமியில்.

நான்மணிமாலை.

ஙூ. இடுகோட்டுண் மாத ரெலும்பிற் புரண்மால்
சுடுகோட்டி னுடுவாற் சுட்டி—னெடுகோட்டுஞ்
சம்பந்தா வென்புகின்பாற் றந்தாக்கிக் கொண்டிலனென்
கும்பந்தா னென்னுமுலைக் கொம்பு.

கைத்தலமாலை.

ச. முன்ன மாலய னிந்திர னமரர்கண் முனிவர்
பன்னு மாமறை தேடுதற் கரியநம் பரமன்
மின்னு லாவிய சடாடவிக் கடவுள் வீற்றிருப்ப
என்ன மாதவஞ் செய்ததோ வெனது கைத்தலமே.

ஏகமதநிராகரணம்.

இ. அறிகில நரர்க்காய் வேண்டி யளித்தனன் மிருக மாதி
இறையவ னென்ரு யோரீ யின்றிட மலமீ தாருஞ்
சிறுபுழு விரையு ருதென் செய்குவை யதனை நோக்க
அறிவரு நணிய தேகி யனந்தநீ யவையென் செய்வாய்.

---

## சிவப்பிரகாசபண்டிதர்.

இவரூர் யாழ்ப்பாணத்துள்ள நீர்வேலி. குலம் வேளாளர் குலம். சமயம் சைவம். காலம் இற்றைக்கு ஒரு வருடத்துக்கு முன். இவர் சங்கரபண்டிதருக்கு மைந்தர். தந்தையாரிடத்திலே வட மொழியிலுள்ள இரகுவமிசம், மாகம் முதலிய காவியங்களையும், முக்தபோதம் ஆசுபோதம் முதலிய வியாகரணங்களையும், தென் மொழியிலுள்ள தொல்காப்பியம் நன்னூல் முதலிய இலக்கணங் களையும், வேறு நூல்களையுங் கற்றுக்கொண்டவர். பாலாமிர்தம், பால

பாடம் முதலிய நூல்களும், திருச்செந்தூர்ப்புராணவுரை, சிவானந்தலகரித் தமிழுரை முதலிய உரைகளும், வேறு சில மொழி பெயர்ப்புகளுஞ் செய்தவர். கவிபாடுந் திறமுமுடையவர்.

பாலாமிர்தம்.

இச்செயலா லீதுவரு மென்றுரா யாமலே
எச்செயலு மேலோ ரியற்றார்தாம்—இச்சையொடு
வல்லை யியற்றுவரேல் வந்திடுமே மாறாத
அல்லலவர்க் கென்றே யறி.

---

## சிவாக்கிரயோகிகள்.

இவருடைய இருக்கை சோழமண்டலத்துள்ள சூரனார்கோயில். சமயம் சைவம். ஆச்சிரமம் அதிவர்ணாச்சிரமம். இவர் சிவானுபூதிமான். சைவபரிபாலகர். சிவஞானசித்தியாருக்கு ஒரு விருத்தியுரையும், சைவபரிபாடை முதலிய பல நூல்களும் செய்தவர். சிவஞானசித்தியாருரையினாலே காமிகம், வாதுளம் முதலிய மூலாகமங்களையும், மிருகேந்திரம், சிவதருமோத்தரம் முதலிய உபாகமங்களையும், நியாயம் முதலிய தரிசன சாத்திரங்களையும், பலவகைப் புராணங்களையும், தென்மொழியிலே தேவாரம், ஞானாமிர்தம் முதலியவைகளையும் நன்குணர்ந்த பண்டிதர் என்பது பெறப்படுகின்றது. இவ்வுரை வடமொழியுந் தென்மொழியுங் கலந்த நடையுடையது. ஆகமச்சுலோகப் பிரமாணங்கள் பலவுடையது.

சைவபரிபாடையிலே பிரத்தியக்கம், அநுமானம் முதலிய பிரமாணங்களை விரித்து விளக்கி அவைவாயிலாகச் சிவபரத்துவமும் ஆன்மநிரூபணம் முதலியனவுந் தாபித்தவர்.

---

## சின்னத்தம்பிப்புலவர்.

இவரூர் யாழ்ப்பாணத்துள்ள நல்லூர். குலம் வேளாளர் குலம். சமயம் சைவம். காலம் இற்றைக்கு இருநூறு வருடங்களுக்கு முன் என்பர். இவர் வில்லவராயமுதலியாருக்கு மைந்தர். கலைமகளருளாற் கவிபாடுந்திறம் பெற்றவர் என்பர். வில்லவராய முதலியாருடைய வீடு யாது? என்று வினவிவந்த புலவர் ஒருவர்க்கு விடையாக அவர் வாசலிடைக் கொன்றைமரம் நிற்றலை அடையாளமாகச் சுட்டிக்கூறி அதனையும் வருணித்து வெண்பா ஒன்று பாடினவர்.

வெண்பா.

பொன்பூச் சொரியும் பொலிந்தசெழுந் தாநிறைக்கும்
நன்பூ தலத்தோர்க்கு நன்னிழலாம்—மின்பிரபை
வீசுபுகழ் நல்லூரான் வில்லவரா யன்கனக
வாசலிடைக் கொன்றை மரம்.

இவர் இயற்றிய நூல்கள் மறைசையந்தாதி, கல்வளையந்தாதி, கரவைவேலன்கோவை முதலியன. மறைசையந்தாதி வேதாரணியேசுரர் மேலது. கல்வளையந்தாதி சண்டிருப்பாயிலே கல்வளையிலிருக்கும் விநாயகர் மேலது. கரவைவேலன்கோவை யாழ்ப்பாணத்திலே கரவெட்டியிலே செல்வராயிருந்த வேலாயுதப்பிள்ளை என்னும் பிரபு மேலது. இப்பிரபந்தங்களினால் இவர் பாரதம், இராமாயணம் முதலிய இலக்கியங்களையும், எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி என்னும் இலக்கணங்களையும் இனிதுணர்ந்தவர் என்பது புலப்படுகின்றது. கரவைவேலன்கோவையிலே ஐம்பது கவிவரை செந்தமிழிற் பிரகடனஞ் செய்திருக்கின்றோம்.

மறைசையந்தாதி.

மனக்காக்கை மூவர் தமிழ்க்குயில் வாணியை வைத்தகுழை
உனக்காக்கை வஞ்ச வினையேன்புன் னுவி லுரைத்ததமிழ்
சினக்காக்கை வாயி லுறுங்குரற் சொல்லொக்குஞ் சேண்முகிற்சந்
தனக்காக்கை நீட்டு மறைக்காட்டில் வாழ்சிவ சம்பரனே.

மனக்காக்கை - மனக்காவல். குழை - காது. ஆக்கை - உடம்பு. காக்கை - காகம். சந்தனக்கா - சந்தனச்சோலை.

கல்வளையந்தாதி.

பாலை வனத்தத்தைக் கியொரளிப் பாரென்று பன்னினளைம்
பாலை வனத்தடங் கார்கண்டு வெட்கும் படிவந்தமின்
பாலை வனத்தகன் முள்கல் வளைப்பர மானந்தன்றன்
பாலை வனத்தள வும்மன்பி லாரிற் பதைபதைத்தே.

வனம் - அழகு. தத்தை - கிளி. ஐம்பாலை - கூந்தலை. வனம் - சோலை. ஐவனம் - மலைநெல்லு.

கரவைவேலன்கோவை.

௧. மாசால மோமணி வாய்நோகு மோநும் மரபியலின்
ஆசார மோவிர தத்தடை வோதிரை யாடைசுற்றுந்
தேசா திபர்மெச்சும் வேலன் கரவைச் சிலம்பனையீர்
பேசா திருக்கும் வகையின்ன வாறென்று பேசிடுமே.

இது பேசாதிருக்கும் வகைவினுதல் என்னுந் துறைத்து. ஆசாரம் - ஒழுக்கம். சிலம்பு - மலை.

உ. சுந்தர மாறன் கரவையில் வேலன் சுரும்பனையாய்
அந்தர நீன்முகில் கூன்மதி யார மணிந்தசங்கம்
மந்தர நேரிடை வார்குழல் வாணுதல் வாய்ந்தமணிக்
கந்தர மாமுலை யாமென தாவியின் கண்மணிக்கே.

இஃது இறைவிதன்மை. இறையோனியம்பல். சுரும்பு - மலை. கந்தரம் - கழுத்து. நிரனிறை.

ங. பூவென்ற மாவிலங் கேசனை நாளைக்குப் போர்புரிய
வாவென்ற வீரன் கரவையில் வேல மகிபதிமேற்
பாவென்ற வாணிப் பவளச்செவ் வாய்மடப் பாவையிவள்
ஏவென்ற காதள வோடிய பார்வை யிமைக்கின்றதே.

பூ - பூமி. இலங்கேசன் - இராவணன். மகிபதி - அரசன். வாணி - சொல். மடம் - இளமை. ஏ - அம்பு. பார்வை - கண்.

---

## சீத்தலைச்சாத்தனார்.

இவரூர் சீத்தலை என்னுமூர் எனவும், குலம் வணிகர்குலம் எனவும், சமயம் பௌத்தம் எனவும் சிலர் கூறுவர். வேறு சிலர் சங்கத்திலே அரங்கேற்றப்படுங் கவிகளிலே வரும் சொல்வழு, பொருள்வழு முதலிய வழுக்களைக் கேட்கும்போதெல்லாஞ் சற்றும் மனந்தாங்காது தந்தலையிலே காயமுண்டாகிச் சீ பிடிக்குமாறு குட்டிக்கொள்வர் எனவும், அதனாற் சீத்தலை என்னும் விசேடணம் பெற்றார் எனவும், திருவள்ளுவர்குறளிலே ஒருவழுவுங் கேட்கப்படாமையால் தலையில் குட்டிக்கொள்ளல் இல்லாமைபற்றி மருத்துவன் தாமோதரனார் பாயிரத்திலே "தலைக்குத்துச் சாத்தற்குத் தீர்வு" எனக் கூறினர் எனவுங் கூறுவர்.

இவர் கடைச்சங்கப்புலவருள் ஒருவர். தானிய வாணிகஞ் செய்தமை காரணமாகக் கூலவாணிகன் சாத்தனார் எனவுங் கூறப்படுவர். கண்ணகிகதையை எடுத்துக்கூறி இளங்கோவடிகளைச் சிலப்பதிகாரம் என்னும் இலக்கியம் பாடும்படி செய்தவர். அதன் கதைத் தொடராகிய மணிமேகலை என்பவள் துறவுபூண்ட கதையை மணிமேகலை என்னும் பெயரோடும் இலக்கியமாகச் செய்தவர். அகம், புறம், நற்றிணை முதலிய தொகைநிலைகளிலுஞ் சிலசில கவி பாடினவர். மணிமேகலை நன்மையைச் சிவப்பிரகாசசுவாமியும் வியப்பர்.

மணிமேகலை.

இளங்கோ வேந்த னருளிக் கேட்ப
வளங்கெழு கூல வாணிகன் சாத்தன்

வண்டமி ழகத்தின் மணிமே கலைதிறம்
ஆறைம் பாட்டினு ளறியவைத் தனனே.

வேங்கைக்கோவை.

மந்தா னியணி வேணிப் பிரான்வெங்கை மன்னவநீ
கொந்தார் குழன்மணி மேகலை நூனுட்பங் கொள்வதெங்ஙன்
சிந்தா மணியுந் திருக்கோ வையுமெழு திக்கொளினும்
நந்தா வுரையை யெழுதலெவ் வாறு நவின்றருளே.

---

## சுந்தரமூர்த்திநாயனார்.

இவரூர் நடுநாட்டிலுள்ள திருநாவலூர். குலம் வேதியர்குலம். சமயம் சைவம். இவருஞ் சமயகுரவருள் ஒருவர். சிவபிரானுடைய திருவருளாலே அவரைத் துதித்துப் பதிகங்கள் பல பாடினவர். அவையெல்லாந் தேவாரம் எனப்படும். பாடல்களாற் பல அற்புதங்களுஞ் செய்தவர். அவ்வற்புதங்களைத் தனிநிலைக்கவி ஒன்று கூறுகின்றது. அதனையுங் காட்டுதும்.

கட்டளைக்கலிப்பா.

வெங்க ராவுண்ட பிள்ளையை நல்குமே
வெள்ளை யானையின் மீதேறிச் செல்லுமே
மங்கை பாகனைத் தூது நடத்துமே
மருவி யாறு வழிவிட நிற்குமே
செங்க லானது தங்கம தாக்குமே
திகழு மாற்றிட்டுச் செம்பொ னெடுக்குமே
துங்க வான்பரி சேரற்கு நல்குமே
துய்ய நாவலூர்ச் சுந்தரர் பாடலே.

---

## சுப்பிரமணியதீக்கிதர்.

இவரூர் பாண்டிமண்டலத்துள்ள திருக்குருகூர். குலம் வேதியர்குலம். சமயம் சைவம். காலம் இருநூற்றிருபது வருடங்களுக்கு முன் என்பர். வடமொழி தென்மொழிகளிலுள்ள இலக்கியங்களையும் இலக்கணங்களையும் உரைகளையுங் கலக்கமறக் கற்று இருமொழிக்கும் இலக்கணவொற்றுமை காட்டிப் பிரயோகவிவேகம் என இலக்கணநூல் ஒன்று செய்தவர். பிரயோகம் - வழங்குநெறி. விவேகம் - ஆராய்ந்துணர்தல்.

பிரயோகவிவேகத்திலே சித்தாந்தகௌமுதி, சப்தகௌமுதி முதலிய வியாகரணங்களிலும், மாபாடியம், கையடம் முதலிய உரை

களிலுஞ்சொல்லப்பட்ட இலக்கணங்களுள்ளே சிலசிலவற்றை எடுத்துக் கூறுவர். அவற்ரெடு தொல்காப்பியம் முதலிய இலக்கணங்களிலுஞ் சேனவரையம் முதலிய உரைகளிலுஞ் சிலவற்றை ஒற்றுமையாக்கிச் சிந்தாமணி, சிலப்பதிகாரம், திருக்குறள், நாலடியார் முதலிய இலக்கியப்பிரயோகங்களுங் காட்டுவர். அரியனவாய வேறு விதிகளுங் கூறுவர். சிலருரைகளுக்கு மாறுங் கூறுவர்.

பரிமேலழகர் கூறிய சாதியொருமை, விகுதிபிரித்துக்கூட்டல் முதலிய பிரயோகங்களுக்கும் விதி கூறுவர். உயர்திணையிற் சாதியொருமைக்கு வடமொழி நைடதமொழிபெயர்ப்புங் காட்டுவர்.

நைடதமொழிபெயர்ப்பு.

கவியொடும் புதனெடுங் கலந்து நாடொறும்
புவிபுகழ் நிடதர்கோன் புரவி யேழுடைக்
குவிதலைத் தேர்கடாய்க் குணுது நின்றெழும்
அவிகதிர் வானவ னழகு மேயினன்.

கவி, புதன் என்பன சிலேடை. கவி - புலவன், வெள்ளி. புதன் - அறிஞன், புதனெனுங்கிரகம். கவி, புதன் என்பன ஒருமையாயினும் முறையே கவிஞர் என்றும், அறிஞர் என்றும் பொருள்கொள்ள வேண்டுதலிற் சாதியொருமையாயின.

---

## சுப்பிரமணியமுனிவர்.

இவரூர் தொண்டைமண்டலத்துள்ள தொட்டிக்கலைசை. சமயம் சைவம். காலம் சிவஞானமுனிவர் காலம். இவர் சிவஞானமுனிவர்க்கு மாணவகர். இலக்கியலக்கணங்களுஞ் சித்தாந்த சாத்திரங்களும் நன்கு கற்றவர்; சிலேடை, மடக்குத்திருக்கு முதலிய சொல்லணிகளையெல்லாம் அமைத்துச் சுவைபெறுமாறு கவிபாடுதலிற் சிறந்தவர். இவரியற்றிய நூல்கள் துறைசைக்கோவை, கலைசைச் சிலேடை, சுப்பிரமணியர்விருத்தம், கேசவப்பெருமாளிரட்டைமணிமாலை, கலைசைக்கோவை, தணிகைவிருத்தம் முதலியன.

துறைசைக்கோவை.

மன்னிரு வாணி துறைசையெங் கோமுத்தி வள்ளல்வெற்பிற்
பின்னிருங் கூந்தனின் மென்சாய லின்வளம் பெற்றிடவே
முன்னிரு நான்குகண் ணனைச் சிறையிட்டு முற்றுங்கண்ட
பன்னிரு தோளனை யின்னமுந் தோகை பரிக்கின்றதே.

கலைசைச்சிலேடை.

காவலர்தம் புத்திரரு கண்ணும் பிரமரமுங்
காவியங்க ளாயுங் கலைசையே—தாவெள்ளைக்
கோட்டுக் குழையார் கொழுங்கயற்கண் மெல்லியலாங்
கோட்டுக் குழையார் குடி.

பிரமரம் - வண்டு. காவியங்கள் என்னுஞ் சிலேடைக்குப் புத்திரர்கள் காவியங்களை எனவும், பிரமரம் காவிப்பூவிலுள்ள அழகிய தேனை எனவும் பொருள் கொள்க. கோட்டுக்குழை - சங்கக்குண்டலம். கோட்டுக்கு - கொம்புக்கு. உழை - பக்கம்.

கேசவப்பெருமாளிரட்டைமணிமாலை.

மாலைவிட் டோம்வன மாலையைப் பெற்றபின் வன்பிறவி
வேலைவிட் டோமுன்றன் வேலையைச் செய்தபின் வெய்யகிழிக்
காலைவிட் டோமுன்றன் காலைத் தொழுதபின் காதிவிட்ட
ஓலைவிட் டோமெங்கண் ணூர்வாழ்தொட் டிக்கலை யுத்தமனே.

---

## சுவாமிநாததேசிகர்.

இவரூர் பாண்டிமண்டலத்துள்ள திருநெல்வேலி. குலம் வேளாளர்குலம். சமயம் சைவம். காலம் ஏறக்குறைய இற்றைக்கு இருநூற்றிருபது வருடங்களுக்கு முன் என்பர். இவர் திருவாவடுதுறை யாதினஞ் சேர்ந்து தீக்கையுங் கல்வியும் பெற்றவர். நல்லறிவும் நல்லொழுக்கமுமுடையவர். மயிலேறும்பெருமாட்பிள்ளையிடம் இளம்பூரணம், சேனவரையம், நச்சினார்க்கினியம் என்னும் உரைகளோடு தொல்காப்பியத்தையும், மற்றையிலக்கணங்களையும், கலித்தொகை முதலிய சங்கவிலக்கியங்களையும், திருக்குறள் பரிமேலழகருரை திருக்கோவையுரைகளையும், சிந்தாமணி, சிலப்பதிகாரம் முதலிய மற்றையிலக்கியங்களையும் ஐயந்திரிபறக் கற்றவர். செப்பறைப் பதியில்வாழ்ந்த சிவத்துவிசராகிய கனகசபாபதிவேதியரிடம் வடமொழி வியாகரணங்களையுங் கற்றவர். பின்னர்ச் சித்தாந்த சாத்திரங்களையுங் கற்றவர். சங்கரநமச்சிவாயருக்கு வித்தியாகுரு.

இலக்கணக்கொத்து, செந்திற்கலம்பகம், தசகாரியம் முதலிய நூல்கள் செய்தவர். இலக்கணக்கொத்திற் கூறும் இலக்கணவிதிகளெல்லாம் நன்னூல் சின்னூல் முதலிய இலக்கணங்களிற் பெறப்படாதன. தொல்காப்பியத்தையும் வடமொழியிலக்கணங்களையுந் தழுவி வந்தன. திருக்குறள் திருக்கோவை முதலியவற்றில் அரும் பிரயோகங்களையெல்லாம் மயக்கற விளக்குவன. வேற்றுமைவகை

களையும் வினைச்சொல்வகைகளையும் விசேடமாக விரித்துக் காட்டுவன சில. மொழி வருவித்துமுடிக்கும் நெறி முதலியவைகளைப் பல வகையாற் கூறுவன சில.

சேந்திற்கலம்பகம்.

பாடாத நாவும் பணியாத சென்னியும் பாவித்தன்பாய்
நாடாத வுள்ளமு நான்படைத் தானர கேழுஞ்சென்று
கூடா துயர்கதி கூடவ னேகுன் றெறிந்தவைவேற்
சேடார் மதிற்செந் திலாயென்கொ லோநின் றிருவருளே.

---

## செகராசசேகரமன்னவர்.

இவர் நகரம் யாழ்ப்பாணத்துள்ள நல்லூர். சமயம் சைவம். காலம் ஏறக்குறைய முந்நூறு வருடங்களுக்கு முன் என்பர். இவர், கனகசூரியச்சிங்கையாரியமன்னவர்க்கு மைந்தர். பரராசசேகரமன்னவர்க்குப் பின்னவர். பாண்டிமண்டலஞ் சென்று பலவகைக் கலைகளையும் படித்தவர் என்பர். காவியசாத்திர விநோதர். பாண்டிநாடு முதலிய தமிழ்நாடுகளிலிருந்து பலவகை நூல்களையும் வருவித்துத் தொகுத்துப் பாடசாலைகளும் ஆங்காங்கு வைத்துப் பரவச் செய்தவர். புலவர்களைக் கூட்டித் தமிழ்ச்சங்கமும் ஒன்று தாபித்து நடாத்தினவர். புலவர்களைக்கொண்டு பலவகை நூல்களுஞ் செய்வித்தவர். தாமாகவுஞ் சில நூல்கள் செய்தவர். ஐந்தருவும் நவநிதியும் குலமணியும் பொன்முகிலும் ஆவும் ஒன்றாய் வந்தனைய கொடைவள்ளல். செய்வித்த நூல்கள் செகராசசேகரமாலை முதலியன. செய்த நூல்கள் தக்கிணகைலாசபுராணம் முதலியன.

தக்கிணகைலாசபுராணம்.

உதய தாமரை யொண்கதி ரென்னவென்
இதய தாமரை மீதி லிலங்குவ
மதக டாமழை வாரண மாமுக
முதல்வ னைங்கர மூர்த்தி பதாம்புயம்.

---

## சேக்கிழார்நாயனர்.

இவரூர் தொண்டைமண்டலத்துள்ள குன்றத்தூர். குலம் வேளாளர்குலம். மரபு சேக்கிழார்மரபு. சமயம் சைவம். காலம் * அநபாய சோழராசாவின் காலம். பிள்ளைத்திருநாமம் அருண்மொழித்தேவர் என்பது. சேக்கிழார்மரபினை விளக்கிய காரணத்தாற் சேக்கிழார் எனப்பட்டவர். கல்வியறிவொழுக்கங்களினுஞ் சிவபத்தியினுஞ் சிறந்தவர்.

---



* அநபாயனை முதலாங் குலோத்துங்கன் எனவுங் கூறுவர்.

சிதம்பரத்திலே ஆனித்திருவிழா ஒன்றிலே சுவாமிதரிசனத்தின்பொருட்டுச் சேரசோழபாண்டியர் மூவரும் வந்தனர். தொண்டைநாட்டரசரும் வந்தனர். நால்வரும் ஓரிடத்திற் கூடினர். நால்வருங் கூடியிருக்குஞ் சவையிலே புலவரும் ஒருவர் வந்தனர். அப்புலவர் ஔவையார் பாடிய "வேழமுடைத்து மலைநாடு" என்னும் வெண்பாவை யாவருங் கேட்கும்படி எடுத்துச் சொன்னார்.

வெண்பா.

வேழ முடைத்து மலைநாடு மேதக்க
சோழ வளநாடு சோறுடைத்துப்—பூழியர்கோன்
தென்னாடு முத்துடைத்துத் தெண்ணீர் வயற்றொண்டை
நன்னாடு சான்றோ ருடைத்து.

இதனைக் கேட்ட அரசர் மூவரும் எங்கள் நாட்டிற் சான்றோர் இல்லையா? "தொண்டைநன்னாடு சான்றோருடைத்து" எனச் சொல்லியவாறென்னை? என்று சற்றே நாணமுற்றுத் தொண்டைநாட்டரசரை நோக்கி உமது நாட்டிற் சான்றோருளர் என்பதைக் கண்கூடாகக் காட்டக்கூடுமோ? என்று கேட்டனர். அதற்குத் தொண்டைநாட்டரசர் சான்றோரிருத்தலைத் தக்க வழிகொண்டு நீவிர் அறிதலே தகுதியாகும் என்றனர்.

பின்னர் நூலளவே யாகும் நுண்ணறிவை நோக்கியே ஒருவரைச் சான்றோர் எனத் துணிதல் உத்தமமாகும் என யாவரும் ஒருப்பட்டுப் பூமியிற் பெரிது யாது? கடலிற் பெரிது யாது? மலையிற் பெரிது யாது? என மூன்று வினாக்களை எழுதி இவ்வினாக்கள் மூன்றுக்கும் எவர் விடை சொல்வாரோ அவரே சான்றோராவர்; ஐயமில்லை என உறுதி கூறி அவ்வினாக்களையும் அங்கங்கே அனுப்பினர். பலரும் பெற்றனர்.

யாவரும் விடை எழுதாராக இந்தச் சேக்கிழார்நாயனாரே அந்த வினாக்கள் மூன்றுக்கும் மூன்று திருக்குறள்களை விடையாக எழுதிச் சான்றோரிவர் என அவர்களால் அறியப்பட்டவர். அக்குறள்வெண்பாக்களையுங் காட்டுதும்.

பூமியிற் பேரிது யாது?

க. காலத்தி னாற்செய்த நன்றி சிறிதெனினும்
ஞாலத்தின் மாணப் பெரிது.

கடலிற் பேரிது யாது?

உ. பயன்றூக்கார் செய்த வுதவி நயன்றூக்கின்
நன்மை கடலிற் பெரிது.

மலையிற் பெரிது யாது?

ஈ. நிலையிற் றிரியா தடங்கியான் ருேற்றம்
மலையினு மாணப் பெரிது.

விடை எழுதிய திறத்தைப் பாராட்டி இவர் கையிலேற்றித் திருக்கைவழக்கம் என்னும் நூலிலே கம்பரும் "மண்ணிற் கடலின் மலையிற் பெரியதென—எண்ணியெழுதிக் கொடுத்த வேற்றக்கை" என்பர். இதனைச் சுட்டித் தொண்டைமண்டலசதகத்திலே படிக்காசுப்புலவருங் கூறுவர்.

தொண்டைமண்டலசதகம்.

அஞ்சொன் முதுதமிழ் நால்வேந்தர் வைகு மவையிலவ்வை
செஞ்சொற் புனைகின்ற வேளாளர் வைகுஞ் சிறப்புடைத்தால்
விஞ்சிய வேழ முடைத்தெனும் பாடல் விளம்பிப்பினும்
வஞ்சி வெளிய வெனும்பா மொழிதொண்டை மண்டலமே.

சைவசமயிகள் சிலரும் அநபாய சோழராசனுஞ் சீவகசிந்தாமணி என்னும் ஆருகதகாவியத்தை மேலதாகக் கருதிப் படித்து மகிழ்தலைநோக்கி அதனைப் படித்தல் அதிபாதகம் என்று தடுத்துத் திருத்தொண்டர்கதையை எடுத்துக் கூற அதனைக் கேட்ட அரசன் மகிழ்ந்து "இக்கதையைப் பெருங்காப்பியமாகச் செய்து தாரும்" என்றபடி சிதம்பரஞ் சென்று சபாநாயகர் திருவருளாற் கிடைத்த "உலகெலாமுணர்ந்தோதற்கரியவன்" என்னும் அடியை முதலாக வைத்து அக்கதையைப் பெருங்காப்பியமாகப் பாடினவர். அது திருத்தொண்டர்புராணம் எனவும், பெரியபுராணம் எனவும் சொல்லப்படும். பெரியர் + புராணம்=பெரியபுராணம். பெரியர் - தொண்டர். புராணம் - பழங்கதை.

பெரியபுராணம்.

உலகெ லாமுணர்ந் தோதற் கரியவன்
நிலவு லாவிய நீர்மலி வேணியன்
அலகில் சோதிய னம்பலத் தாடுவான்
மலர்சி லம்படி வாழ்த்தி வணங்குவாம்.

---

## சேரமான்பெருமாணுயனுர்.

இவருடைய இராசதானி மலைமண்டலத்துள்ள மகோதை எனப்படுங் கொடுங்கோளூர். குலம் சேரமன்னர்குலம். சமயம் சைவம். இவர் திருத்தொண்டர்களுள் ஒருவர். பாணபத்திரர்பொருட்டுச் சிவபிரான் பாடிய "மதிமலிபுரிசை மாடக்கூடல்" என்னுஞ்

சிட்டுக்கவி பெற்றவர். திருக்கைலாசஞானவுலா, பொன்வண்ணத் தந்தாதி முதலிய பிரபந்தங்கள் செய்தவர்.

பொன்வண்ணத்தந்தாதி.

பொய்யார் நரகம் புகினுந் துறக்கினும் போந்துபுக்கிக்
குய்யா வுடம்பினொ டேர்வ நடப்ப பறப்பவென்று
மையா வினியினு மானில மாளினு நான்மறைசேர்
மையார் மிடற்று னடிமற வாவரம் வேண்டுவனே.

---

## சேறைக்கவிராசபிள்ளை.

இவரூர் சோழமண்டலத்துள்ள சேறை என்றும், குலம் கருணிகர்குலம் என்றுங் கூறுவர். சமயம் சைவம். இவர் இலக்கியலக்கணங்கள் நன்கு கற்றவர். ஆசுகவிராயரெனும் பேரும் பெற்றவர். காளத்திநாதருலா, அண்ணாமலையார்வண்ணம், சேயூர்முருகனுலா, வாட்போக்கிநாதருலா முதலிய பிரபந்தங்கள் செய்தவர். இப்பிரபந்தங்கள் சிலவற்றிலே சிலேடை, மடக்கு, திருக்கு முதலிய அணிகளும் அமைத்தவர். சேயூர்முருகன்பிள்ளைத்தமிழிலே "கவிராசவிப்பிரான் மிசைசெய்த திருவுலாக் கவிவெள்ளை கற்றுருகலாம்" எனச்சொலும் புகழும்படைத்தவர். அண்ணாமலையார்வண்ணத்தில் ஒருகலியிலே சில சிவதலநாமங்களைச் சிறிதும் அடைமொழியின்றித் தொடுத்துப் பாடினவர்.

காளத்திநாதருலா.

காருலா வுஞ்சோலைக் காளத்தி யாள்வார்க்குச்
சீருலா விண்ணப்பஞ் செய்யவே—பாரில்
விளங்கருளஞ் சந்தியான் வேழமுக மானன்
களங்கருளஞ் சந்தியான் காப்பு.

அஞ்சந்தியான் என்பது தலவிநாயகர் நாமம். களங்கர் உளம் - குற்றமுடையார் மனம். சந்தியான் - இணங்காதவன்.

கலிவெண்பா.

க. வைகைக் கெதிரே வருமேடன் சைவத்தார்க்
குய்கை மறையோ ருவனிடவன்—செய்கை

உ. இதமிகுநக் தொண்டர்க் கெனத்தூது சென்றோன்
கதிரொளிவீ சுங்கற் கடகன்—உதயகலைச்

ங. சிங்கப் புலியன் சிலர்க்கன் வியனுனேன்
சொக்கொண்ட சங்கத் தலாத்தினன்—நங்கை

௲. விரிச்சிகத்தா ராதிப்பான் வீணைத் தநுசன்
கரத்திலிசை பாய்மகரக் காதான்—புரத்தகையின்

௫. விற்சாத கும்பன் விதிக்குமீ னங்கொடுத்தோன்
எற்சாம வீத விராசியான்.

இது காளத்திநாதருலாவிலே பன்னிரண்டு இராசிகளுந் தொனிக்கப் பாடிய பாகம். மேடன், இடவன், மிதுநம் முதலியன நோக்குக. வரும் ஏடன் - வரும் ஏடுடையவன். உவனிடவன் - உபமிடதமுடையவன். இதம் - நன்மை. சொம் - பொருள். சங்கத்து உலாத்தினன். விரிச்சு - விரித்து. இகத்து - இங்கே. வீணைத்தநுசன் - இராவணன். சாதகும்பம் - பொன். விதிக்கும் - பிரமாவுக்கும். ஈனம் - கேடு. இராசி - கூட்டம்.

அண்ணாமலையார்வண்ணம்.

திருக்கோயில் திருவதிகை திருச்சேய்ஞல் திருமருகல்
திருத்தோணி திருவரதை—வஞ்சி பனையூர்
திருச்சேறை தருமபுர மறைக்காடு திருமயிலை
திருக்கோயில் தினைநகரம்—அன்பில் கடவூர்
திருக்காவை பொதியமலை கழிப்பாலை கயிலைமலை
தெளிச்சேரி யிடைமருது—தஞ்சை வழுவூர்
சுழியல் புனவாயில் கூடலுறைவார்.

இவ்வளவும் ஒரு கலை. இங்கே அடைமொழியின்றிச் சில தலநாமங்களை அடக்கியவாறறிக.

---

## சேனாதிராசமுதலியார்.

இவரூர் யாழ்ப்பாணத்துள்ள இருபாலை. குலம் வேளாளர் குலம். சமயம் சைவம். காலம் இற்றைக்கு எழுபத்தைந்து வருடங்களுக்கு முன். தந்தையார் நெல்லைநாதமுதலியார். இவர் கூழங்கைத் தம்பிரானுக்கும் மாதகற் சிற்றம்பலப்புலவர்க்கும் தந்தையார்க்கும் மாணவகர். ஆறுமுகநாவலர் சரவணமுத்துப்புலவர் அம்பலவாண பண்டிதர் முதலியோருக்கு ஆசிரியர். இலக்கிய லக்கண வுணர்ச்சியிலுங் கவிபாடும் பயிற்சியிலுஞ் சிறந்தவர். அக்காலத்திலே இலக்கணக் கல்வி யாழ்ப்பாணத்திற் பரம்பச்செய்தவர். அவதானத்திலும் நினைவிலும் மிக்கவர். அதிகாரம், செல்வம் முதலியவற்றாலுந் தக்கவர்.

வண்ணை வைத்தியலிங்கச்செட்டியார் முன்னிலையிலே வடநாட்டுப்புலவரொருவர் அரங்கேற்றிய கவியை இருமுறை கேட்டு

நினைத்துக்கொண்டு இது பழம்பாட்டு என்று படித்துக்காட்டி அசதியாடி அவாகத்தை போக்கியபின் உள்ளது கூறித் தக்க பரிசிலுங் கொடுப்பித்தவர் என்பர். இச்செயலைச் சிலர் இவர் தந்தையார் மேலேற்றுவர். நல்லைவெண்பா, நல்லைக்குறவஞ்சி, நல்லையந்தாதி, நீராவிக்கலிவெண்பா, ஊஞ்சற்பதிகங்கள் முதலிய பல பிரபந்தங்கள் செய்தவர். தமிழகராதி தொகுத்தோருள்ளுந் தலைவர். நல்லைவெண்பாவிலே அரிதுணரற்பாலனவாகிய திரிசொற்களும் அமைத்துத் திருக்கும் மடக்குஞ் சிலேடையும் பரக்கக்கூறுவர். வானவருலகைச் "சந்திரவைப்பு" என்பர். வானவில்லைச் "சிதமுனி" என்பர். பிரணவத்தை "மகரவளை மாத்திரைசேர்—நீட்டுமொகாரம்" என்பர். காவியைக் "காப்பின் விகாரம்" என்பர்.

நல்லைவெண்பா.

பொன்னங் கலையார் விலோதனத்தான் மாதிரம்போய்த்
துன்னியசீ ராலுமைநேர் தூநல்லை—முன்னயனைத்
தாரகங்க டாவினுன் ருவரக்கட் பீலியைச்சூர்
போரகங்க டாவினுன் பூ.

முன்னிரடியும் உமைக்கும் நல்லைக்குஞ் சிலேடை. பொன் - இலக்குமி. கலையார் - சரசுவதியார். பொன்னங்கலை - பொற்சீலை. விலோதனம் - கண், கொடி. மாதிரம் - மலை, திக்கு. தாரகம் - பிரணவம். கடாவல் - வினவுதல், செலுத்தல். தாவரம் - உடம்பு. பீலி - மயில்.

நல்லைக்குறவஞ்சி.

திருவாரு நல்லைநகர்ச் செவ்வேற் பெருமானுர்
இருவாலைக் குயத்தியரோ டின்பமுற்ரு ரம்மானை
இருவாலைக் குயத்தியரோ டின்பமுற்ரு ராமாயின்
தருவாரோ சட்டிகுடஞ் சாறுவைக்க வம்மானை
தருவார்காண் சட்டிகுடஞ் சாறுவைக்க வம்மானை.

குயத்தியர் - ஸ்தனமுடையவர். சட்டி - ஒரு திதி. குடம் - கும்பமாதம். சாறு - விழா. இங்கே இருபாலையிலிருக்குங் குயத்தியருஞ் சட்டிகுடமுஞ் சாறுந் தொனித்தல் காண்க.

ஊஞ்சல்.

கனககவ ரத்நமணி மவுலி மின்னக்
கவின்கொ ணெற்றிச் சட்டியிளங் கதிர்கள்காலப்
பனகமணிக் குண்டலங்கள் பகலை வெல்லப்
பணித்தரளத் தொடைநிலவின் பரப்பை யெள்ள

அனகவிடைக் கிரங்கியமே கலைக ளார்ப்ப
அடியவரை யஞ்சலெனச் சிலம்பு மார்ப்பத்
தினகரமண் டலமளவு மதில்சூழ் கோவைத்
தேவிதிருக் கண்ணகையே யாடி ரூஞ்சல்.

வெண்பா.

நாநா திராவிடமு நன்னிலக்க ணூறுதச்செய்
சேநா திராசனையோ செத்ததென்றீர்—வானுதி
பொன்னிலத்து முண்மை புகனூ லுரைப்பதற்காய்
இந்நிலத்தை விட்டெடுத்த தே.

இது முதலியார் இறந்தனர் என்றபோது உடுப்பிட்டிக் குமாரசுவாமி முதலியார் பாடியது என்பர்.

இக்கவிகளுட் சில இவர் வழித்தோன்றலும் அரசினர் ஆசிரிய கல்லூரித் தமிழ்ப்பண்டி தருமாகிய ச. கந்தையபிள்ளை தந்தன.

---

## சேனாவரையர்.

இவர் தொல்காப்பியச் சொல்லதிகாரத்துக்குச் சிறந்த விருத்தியுரை ஒன்று செய்தவர். இவருரை சேனாவரையம் எனப்படும். இவ்வுரையோ அரிதுணரற்பாலது. வாக்கிய நடையுங் கார்க்கசியம். வடமொழியிலக்கணவுரை நடையையுந் தர்க்கநூலுரை நடையையுந் தழுவிச்செல்வது. ஐயந்தோன்றுமிடமெல்லாம் ஆசங்கித்து விடைகூறுமுகத்தால் ஐயம் நீக்குவர். சிலவிடங்களில் வடநூன்முடிபுங் கூறுவர். சிலவிடங்களில் உரையாசிரியருரைக்கு மறுப்புங் கூறுவர். இவர் உரையைச் சிவஞானமுனிவர் பாராட்டிச் சூத்திரவிருத்தியிலே "வடநூற் கடலை நிலைகண்டறிந்த சேனாவரையர் எழுத்ததிகாரத்திற்கு உரைசெய்தாராயின் இன்னோரன்ன பொருளனைத்துந் தோன்ற ஆசிரியர் கருத்துணர்ந்து உரைப்பர்" என்பர். பிரயோக விவேகநூலார் "வாக்கியதீபம், அரிபீடிகை, ஏலாராசியம் முதலாயின வழங்குங் காலத்து அவ்வுரை நோக்கிச் சேனாவரையர் முதலாயினர் தொல்காப்பியத்திற்கு உரையெழுதினர் என்க" என்பர்.

---

## ஞானப்பிரகாசசுவாமி.

இவரூர் யாழ்ப்பாணத்துள்ள திருநெல்வேலி. குலம் வேளாளர்குலம். சமயம் சைவம். காலம் இற்றைக்கு முந்நூறு வருடங்களுக்கு முன் என்பர். இவர் அப்பொழுதையரசர் வரியால் வரும்

பகைக்கொலைக்குப் பயந்து யாழ்ப்பாணம் விட்டுச் சிதம்பரஞ்சென்று வசித்தவர். சிதம்பரத்திலிருந்து கௌடதேசஞ் சென்று தர்க்கம், வியாகரணம், மீமாஞ்சை முதலிய சாத்திரங்கள் கற்றுக்கொண்டு பின்னர்த் திருவண்ணாமலையாதீனம் வந்து சந்நியாசம் பெற்றுக் காமிகம் வாதுளம் முதலிய ஆகமங்களுங் கற்றவர். சிதம்பரத்திலே ஞானப்பிரகாசம் என்னுந் திருக்குளமுந் தோண்டினவர். ஆறுமுக நாவலர் மரபின் முன்னுளோருள் ஒருவர்.

வடமொழியிலே பிரமாணதீபிகை, பிராசாததீபிகை, சித்தாந்த சிகாமணி முதலிய நூல்களும், பவுட்கராகமவிருத்தி, சிவஞான போதவிருத்தி முதலிய உரைகளும், தென்மொழியிலே சித்தியாருக்கு உரையுஞ்செய்தவர். சித்தியாருரையிலே காமிகம், வாதுளம், மதங்கம் முதலிய ஆகமங்களையும், தொல்காப்பியம், ஞானமிர்தம், கோயிற்புராணம் முதலிய தமிழ்நூல்களையும் பிரமாணமாகக் காட்டுவர். வடசொற்றொடர்களையும், ஆகமவாக்கியங்களையும் பெரிதும் புணர்ப்பர். அரிதுணரற்பாலது.

சித்தியுரைவணக்கம்.

சிவமுற நமக்கு முந்தித் தந்திவத் திரனைச் சிந்தித்
தவமையில் சிவனைப் பில்லா வுமைகுரு குலங்கண் மற்றென்
இவர்களை வணங்கி யின்பச் சிவஞான சித்திக் கேற்ப
நவமுறு முரை யுரைப்பா முன்னுரை நலங்கொ ளார்க்கே.

---

## தலைமலைகண்டதேவர்.

இவரூர் பாண்டிமண்டலத்திலே நயினார்கோவிலை அடுத்துள்ள காடடர்க்தகுடி என்றும், குலம் மறவர்குலம் என்றும், இவர் புட்படுத்தல், ஆறலைத்தல் முதலிய சாதித்தொழில்களைப் பாவத்தொழில்கள் என்று கைவிட்டுப் பரமனையே பாடித் திரவியம் பெற்றுச் சீவனஞ்செய்தவர் என்றுங் கூறுவர். இவர் பல தனிநிலைக் கவிகளும், பாண்டிமண்டலத்துள்ள புடைமருதூரில் வீற்றிருக்குஞ் சிவபிரான்மீது ஓர் யமகவந்தாதியும் பாடினவர்.

மருதூர்யமகவந்தாதி.

ஒருகொம் பிருபத மும்மத நால்வா யொரைந்துகரம்
பெருகுஞ் செவிசிறு குங்கண் புகர்முகம் பெற்றதந்தி
முருகன் றமைய னுமைமைந்த னைந்து முகன்மகன்மான்
மருகன் றுணைநம் மருதூரந் தாதி வருவிக்கவே.

---

## தாமோதரம்பிள்ளை.

இவர் யாழ்ப்பாணத்திற் சிறுப்பிட்டி வைரவநாதர் குமாரர். குலம் வேளாளர்குலம். சமயம் சைவம். காலம் இற்றைக்கு இருபத்தைந்து வருடங்களுக்கு முன். இவர் அங்கிலமொழி கற்று வித்தியாபண்டிதர் என்னும் பட்டமும் பெற்றுச் சென்னைமாநகரிலே அதிகாரபுருடராய் நெடுநாள் வசித்தவர். தமிழ்மொழியினுந் தக்க பாண்டித்தியம் பெற்றவர். பாரதம் இராமாயணம் முதலிய இலக்கியங்களினும், யாப்பருங்கலக்காரிகை நன்னூல் தொல்காப்பியம் முதலிய இலக்கணங்களினும், திருக்குறள் நாலடியார் முதலிய நீதி நூல்களினும், சைவநூல்களினும் பெரும்பயிற்சியுடையவர். தமிழ் மொழிக்கு வித்தியாகுருவாகச் சுன்னுகம் முத்துக்குமாரகவிராசரைக்கொண்டவர். அச்சிட்ட நூல்களின் பதிப்புரைதோறும் கவிகளால் அவர்க்கு வணக்கங் கூறுவர்.

வீரசோழியப்பதிப்புரை.

க. எழுத்தொடு விழுத்தமிழ் பழுத்தசெந் நாவினன்
முழுத்தகை யேற்கவை யழுத்தியோன் சுன்னா
கத்துயர் மரபினோன் முத்துக்கு மார
வித்தக னடிதலை வைத்துவாழ்த் துவனே.

பலவகைக் கவிகளையும் பாடுந்திறத்திற் சிறந்தவர். சிறப்புக்கவியுந் துதிகவியுஞ் சீட்டுக்கவியும் பிறகவியுமாகத் தனிநிலைக்கவிகள் பல பாடினவர். உரையும் பாட்டுமாகச் சைவமகத்துவம், கட்டளைக் கலித்துறை என்னும் நூல்களும் வேறு சில நூல்களுஞ் செய்தவர். சைவமகத்துவத்திலே பரசமயவாதிகள் கூறும் வினுக்களுக்கு விடைகளும் பரசமயகண்டனமுங் கூறுவர். கட்டளைக்கலித்துறையிலே வரற்பாலனவாகிய உத்தமமோனை முதலியனவும், உத்தமச்சீர் முதலியனவும், பிறவுங் கட்டளைக்கலித்துறையில் வித்தகம்பெற விரித்துக் கூறுவர். சிவசம்புப்புலவர் கவிகளையும்,வேதநாயகம்பிள்ளை கவிகளையுந் தமது கவிகளால் வியந்து கூறுவர். அவர் கவிகளாலும் அங்ஙனம் வியந்து கூறப்படுவர்.

புலவர்கவியைப்புகழ்தல்.

உ. ஆரூர னில்லையென் காரிகை யாலிவ் வவனிதொழப்
பேரூரு மாறு முகநா வலர்பெரு மான்பெருமை
சீரூரு மாறு தெரித்தாய் சிவசம்பு தேசிகநிற்
காரூரி னேரின்றன் ளூேநின்சொல் வன்மை யறிந்தனனே.

### சிவசம்புப்புலவர்கவி.

கற்றுரைக் கற்றவர் காமுறு வாரெனக் கண்டமொழிக்
குற்று யிலக்கிய மாகவென் பாவை யுவந்தகவி
சொற்றுய தென்றலைக் கண்ணறுன் னன்பு தொடர்ந்துகொண்டேன்
மற்று ரெனக்கிணை தாமோ தரம்பிள்ளை மன்னவனே.

### வேதநாயகம்பிள்ளைகவி.

நீடிய சீர்பெறு தாமோ தரமன்ன நீள்புவியில்
வாடிய கூழ்கண் மழைமுகங் கண்டெனு மாண்புறநீ
பாடிய செய்யுளைப் பார்த்தின்ப வாரி படிந்தனன்யான்
கோடி புலவர்கள் கூடினு நின்புகழ் கூறரிதே.

வேறுஞ் சில புலவர் கவிகளால் வியந்து கூறப்பட்டவர். இவர் கவிகளிற் சைவமகத்துவ விருத்தங்களுள் ஒன்றும், சுப்பிரமணிய தேசிகர் மீது பாடிய கட்டளைக்கலித்துறைகளுள் ஒன்றும், அம்பல வாணபண்டிதர் மீது பாடிய கட்டளைக்கலித்துறைகளுள் ஒன்றும், புத்திரசோகத்திற் பாடிய கட்டளைக்கலித்துறைகளுள் ஒன்றும் இங்கே காட்டப்படும்.

### சைவமகத்துவம்.

ҧ. பூவின்மெய்ம்மத மிதுவிது பொய்யெனப்
புகலுவ தரிதேயோ
நாவினுன் மனத்தா னவின்றுணர்வரு
ஞானசாகரமா மெய்த்
தேவவாசகம் யுத்தியிற் கதிதமாந்
திறம்புமோ மனுவாலே
மேவு மெவ்வெவ வேதமுந்திறம்புநல்
விஞ்சையா ளளப்பின்னே.

### சுப்பிரமணியதேசிகர்.

௪. விண்ணுடு கைலை வழித்தே சிகர்வெவ் வினைக்கு நெற்றிக்
கண்ணுன சுப்ர மணிய சுவாமிகள் கான்மலரை
நண்ணுத் தலையி னசைதீரத் தாங்கநற் கோகழிவாய்
மண்ணுய்ப் பிறந்தில னேயைய கோவிந்த வையகத்தே.

### அம்பலவாணபண்டிதர்.

௫. வாக்கிற் சரச்வதி வாய்மைக் கரிச்சந்திர மன்னனெடுந்
தூக்கு நவு நீலமையிற் சானவி தூய்மையிற் பொன்
ஆக்கந் தனிலள காபதி மார னழகிலிந்த்ரன்
தேக்கும்வை போகத்தி லம்பல வாணனைச் செப்பிடினே.

### புத்திரசோகம்.

௬. விந்தை மிகுந்த வியன்சோம சுந்தர மென்கொழுந்தைச்
சந்திர சூரியர் வந்துதி யாமுன் சகோதரர் தாய்
தந்தைய ரின்றித் தனிநின்ற வேளையிற் றுவினையோ
நிந்தனை நிந்தனை காணந்த காவிது நீணிலத்தே.

இவர் தமிழ்மொழி வளர்ச்சியிலும் தமிழ்ப்பாடசாலைகளிலும் பேரபிமானமுடையவர். சென்ற தாதுவருடம் ஏழாலையிலே தமிழ்ப் பாடசாலை ஒன்று தாபித்து முருகேசபண்டிதரையும் அடுத்து நம்மையும் பாடஞ்சொல்ல வைத்துப் பலவருடம் நடாத்திப் பல மாணவகர்கள் தமிழுணரச் செய்தவர். பாடசாலையின் ஆரம்பம் தாதுவருடம். அது முருகேசபண்டிதர் வெண்பாவாற் புலப்படும்.

### வெண்பா.

தாது வருடந் தனிலா வணிபத்தாந்
தேதி புகர்வாரந் தீபநாள்—ஓதுபுகழ்த்
தாமோ தரேந்திரனூர் தர்மவித்தி யாசாலை
நாமாரம் பஞ்செய்த நாள்.

கல்விகற்போர் பலர்க்குத் தாமாக வேதனங்கொடுத்துக் கற்பித்தவர். நட்டார்க்குங் கற்றூர்க்கும் இனியவர். இவைகளை இவர் கனிட்டர் வித்வான் சின்னப்பாப்பிள்ளை பாட்டுங் காட்டும்.

### கட்டளைக்கலித்துறை.

கற்றூர்க் கினிமையுஞ் சைவர்க்கு மாண்புங் கருது செல்வம்
அற்றூர்க் குதவியுங் கல்வி கற்போருக் கரும்பொருளும்
உற்றூர்க்குக் கீர்த்தியு நட்டார்க் குறுதி யுடனறிவும்
பற்றூருக் கச்சமுந் தாமோதரன் பின் பறந்தனவே.

பழந்தமிழ்நூற்பரிபாலனத்திலும்பேரபிமானமுடையவர். வீரசோழியம், இறையனூரகப்பொருள், இலக்கணவிளக்கம், தணிகைப் புராணம், தொல்காப்பியநச்சினூர்க்கினியம், சூளாமணி முதலிய நூல்களைப் பழைய ஏட்டினின்றும் எடுத்துத் திருத்தி அச்சிட்டுத் தமிழ்நாட்டிற் பரவச்செய்தவர். இவருடைய பாடுந் திறத்தையும் பழந்தமிழ்நூற் பரிபாலனத்தையும் பாராட்டி நாமுஞ் சில கவிகள் கூறினும். அவைகளுள்ளும் இரு கவிகளை இங்கே காட்டுதும்.

### கட்டளைக்கலித்துறை.

௧. பாடுங் கவியிற் பழந்தமிழ் நூற்பரி பாலனத்திற்
கூடும் வலியி லறிவிற் பொறையிற் குணநிறைவிற்

றேமெம் புகழி லதிகார மேன்மையிற் சிரியர்யார்
நீமெம் புவியினிற் குமோதரற்கு நிகர்சொலவே.

௨. எட்டி லிருந்த வருந்தமிழ் நூல்க ளெனப்பலவுங்
கிட்டி வழுக்களைக் தள்ளி லாக்குபு செந்தமிழ்சேர்
நாட்டி லளித்துயர் தாமோ தரேந்திர னண்ணுபுகழ்
பாட்டி லடங்குந் தகைத்தோ புலவர்கள் பாடுதற்கே.

கீரிமலையிற் கோயில்கொண்டு வீற்றிருக்கும் நகுலேசமூர்த்தியிலும், கீரிமலைச் சாகரசங்கமதீர்த்தத்திலும், கீரிமலை வாசத்திலும் பெருநேசமுடையவர். நகுலேசமூர்த்திமேல் ஊஞ்சலும் ஒன்று நம்மைக்கொண்டு பாடுவித்து விழாவும் ஒன்று நடந்துவர வேண்டும் பொருட்டு மூலதனம் நியமித்தவர்.

நகுலேசருஞ்சல்.

இச்சகத்திற் றனைநினைவோ ரிடரைநீக்கும்
ஏகதந்த விநாயகமுக் கண்ண னோடு
பச்சைமயில் வாகனனும் பாங்கர் மேவப்
பண்ணவராம் விண்ணவர்பல் லாண்டு சொல்ல
அச்சுதனுஞ் செங்கமலத் தயனும் வாழ்த்த
அம்பொன்மய வம்பலத்தி னருளே பூண்டு
நச்சரவக் கச்சசைத்து நடனமாடும்
நகுலகிரி நாயகரே யாடி ரூஞ்சல்.

---

## தாயுமானசுவாமி.

இவரூர் வேதாரணியம் என்பர். குலம் வேளாளர்குலம். சமயம் சைவம். காலம் ஏறக்குறைய இற்றைக்கு இருநூறு வருடங்களுக்கு முன். திரிசிராமலையிலே தாயுமான ஈசுரர் திருவருளால் அவதரித்தமைபற்றித் தாயுமானவர் எனப்பட்டார். இவர் தாயுமான ஈசுரரைத் தரிசிக்கவந்த மவுனகுருவுக்குச் சீடர். மவுனகுருவிடத்திலே சித்தியார் முதலிய சித்தாந்தோபதேசம் பெற்றவர். தமது பாடலிலும் மவுனகுருவைச் "சிவஞானசித்திநெறி மவுனோபதேச குருவே" என்பர். வடமொழி தென்மொழி என்னும் இருமொழிகளிலும் வல்லவர். "வடமொழியிலே

வல்லா னொருத்தன் வரவுந்த்ரா விடத்திலே
வந்ததா விவக ரிப்பேன்

வல்லதமி ழறிஞர்வரி னவ்வனே வடமொழியின்
வசனங்கள் சிறிது புகல்வேன்''

என்பர். ஆசிரியவிருத்தம் பாடுந் திறத்தில் அதிகஞ் சிறந்தவர். இவர் பாடல் தாயுமானசுவாமிபாடல் எனப்படும். இவரைச் சிலர் ஏகான்மவாதி என்பர். ஏகான்மவாதியாயின்; சந்தானகுரவர்க்குஞ் சமயகுரவர்க்குந் துதிகூறமாட்டார். மெய்கண்டதேவரைச் சுட்டிப் "பொய்கண்டார் காணுத புனிதமெனு மத்துவித—மெய்கண்ட நாதனருண் மேவுநா ளெந்நாளோ'' எனக் கூறவும்மாட்டார். அருணந்திசிவாசாரியரைச் சுட்டிப் "பாதிவிருத்தத்தாலிப் பார்விருத்தமாகவுண்மை—சாதித்தார் பொன்னடியைச் சாருநாளெந்நாளோ'' எனக் கூறவும் மாட்டார். "வெம்பந்தந் தீர்த்துலகாள் வேந்தன் றிருஞான—சம்பந்தனை யருளாற் சாருநா ளெந்நாளோ'' எனக் கூறவுமாட்டார். "சைவசமயமேசமயஞ் சமயாதீதப் பழம்பொருளைக்—கைவந்திடவே மன்றுள்வெளி காட்டும்'' எனக் கூறவும்மாட்டார். "சித்தாந்த முத்தி முதலே'' எனக் கூறவுமாட்டார்.

ஆசிரியவிருத்தம்.

ஆசைக்கொ ரளவில்லை யகிலமெல் லாங்கட்டி
யாளி னுங்கடன் மீதிலே
ஆணைசெல வேநினைவ ரளகேச னிகராக
அம்பொன்மிக வைத்த பேரும்
நேசித்து ரசவாத வித்தைக் கலைந்திவோர்
நெடுநா ளிருந்த பேரும்
நிலையாக வேயினுங் காயகற் பந்தேடி
நெஞ்சுபுண் ணுவ ரெல்லாம்
யோசிக்கும் வேளையிற் பசிதீர வுண்பதும்
உறங்குவது மாக முடியும்
உள்ளதே போதுநா னெனக் குளறியே
ஒன்றைவிட் டொன்று பற்றிப்
பாசக் கடற்குளே வீழாமன் மனதற்ற
பரிசுத்த நிலையை யருள்வாய்
பார்க்குமிட மெங்குமொரு நீக்கமற நிறைகின்ற
பரிபூ ரணு னந்தமே.

---

## திரிகூடராசப்பகவிராயர்.

இவரூர் பாண்டிமண்டலத்திற் குற்றாலத்துக்குச் சமீபமாயுள்ள மேலகரம். குலம் வேளாளர்குலம். சமயம் சைவம். காலம்

இற்றைக்கு நூற்றெழுபது வருடங்களுக்கு முன் என்பர். இவர் பல வகை நூல்களையுங் கற்றவர். சொல்லின் நயமும் பொருளின் நயமும் அணியின் நயமும் அமையக் கவிபாடுந் திறந்தனிற் சிறந்தவர். குற்றாலப்புராணம், குற்றாலக்குறவஞ்சி, குற்றாலச்சிலேடை, குற்றாலமாலை, குற்றாலயமகவந்தாதி முதலிய பற்பல பிரபந்தங்கள் விற்பனமேவச் செய்தவர்.

### குற்றாலப்புராணம்.

அன்னவா ரிசமும் யாறு மம்பொனு டரங்கங் காட்டும்
பொன்னணி மறுகும் வாணர் புலமையுஞ் சங்க மேவும்
மன்னுசீர் விழவு மாதர் வதனமுந் திங்க ளார்க்கும்
மின்னனூர் தனமுஞ் சோலை வேலியு நரந்த நாறும்.

இது சிலேடை. வாரிசம் - தாமரை. அம் பொன் ஆடு அரங்கம் - அழகிய இலக்குமி நடிக்குஞ் சபை. அம் பொன் ஆள் தரங்கம் - நீரையும் பொன்னையும் ஆளுந்திரை. சங்கம் - சபை, சங்கநிதி. திங்கள் - மாசம், சந்திரன். நரந்தம் - கத்தூரி, நாரத்தை.

### குற்றாலக்குறவஞ்சி.

பன்னிருகை வேல்வாங்கப் பதினொருவர் படைதாங்கப் பத்துத் திக்கும்
கன்னவவீ ரரும்புகழ மலைகளெட்டுங் கடலேழு நாடி யாடிப் [றுய்த்
பொன்னின்முடி யாறேந்தி யஞ்சுதலை யெனக்கொழித்துப் புயகான் மூன்
தன்னிருதா டருமொருவன் குற்றாலக் குறவஞ்சித் தமிழ்தர் தானே.

### கண்ணி.

மீறு மிலஞ்சிக் குறத்தியைக் கொண்டசெவ்
வேட்குற வன்முதல் வேட்டைக்குப் போனநாள்
ஆறு நாட்கூடி யொருகொக் குப்பட்ட
தகப்பட்ட கொக்கை யவித்தொரு சட்டியிற்
சாறு வைத்தபின் வேதப் பிராமணர்
தாமுங்கொண்டார் சைவர் தாமுங்கொண்டார் தவப்
பேறு முனிவரு மேற்றுக்கொண் டாரிதைப்
பிக்குச்சொல் லாமலே கொக்குப் படுக்கவே.

இலஞ்சி - புனம். கொக்கு - சூதாகிய மாமரம். சட்டி - ஆறுந்திதி. சாறு - திருவிழா.

---

## திருக்குருகூர்ப்பெருமாட்கவிராசர்.

இவரூர் பாண்டிமண்டலத்துள்ள திருக்குருகூர். குலம் வசியர்குலம். சமயம் வைஷ்ணவம். இவர் இலக்கிய லக்கணமும் பிறவும்

மயக்கமறக் கற்றவர். கவிபாடுந் திறந்தனிலுஞ் சிறந்தவர். மாறனலங்காரம், மாறனகப்பொருள், மாறன்கிளவிமணிமாலை, குருகாமான்மியம் முதலிய பிரபந்தங்கள் செய்தவர். மாறனலங்காரத்திலே விசேடமான அணிகள் பல கூறினவர். அதன்கண் வரும் உல்லேகம், அசங்கதி முதலிய சில அலங்காரங்களும், இரதபந்தம், கடகபந்தம் முதலிய சில சித்திரகவிகளும் தண்டியலங்காரம் முதலிய தமிழலங்காரங்களாற் பெறப்படமாட்டா.

மாறனலங்காரம்.

பூமாது மன்னும் புகழ்க்குருகூர் வாழ்புலவர்
கோமா னியற்பெயராற் கூறுமணிப்—பாமாலைக்
காரணனுஞ் செஞ்சொ லலங்காரன் சோலைமலைக்
காரணனு நாரணனே காப்பு.

மாறன்கிளவிமணிமாலை.

விழியுங் களப முலையும்புன் மூரலும் வேயுமுந்திச்
சுழியு முரோம வொழுங்குங்கண் டேம்வண்டு சூழ்ந்துசெந்தேன்
வழியுந் திருமகிழ் மாலைப் பிரான்வெற்பில் வல்லிசெவ்வாய்
மொழியுந் துணைநெஞ்ச மேசெவிக் கேயென்று மூழ்குவதே.

---

## திருஞானசம்பந்தசுவாமிகள்.

இவரூர் சோழமண்டலத்துள்ள சீகாழி. குலம் ஆதிசைவவேதியர்குலம். இவர் சமயகுரவருள் ஒருவர். திருவருட்புலமையாளர். மூன்றாம் வயசிற் பாடத்தொடங்கினவர். பல பதிகங்கள் பாடினவர். பதிகங்களெல்லாம் தேவாரம் எனப்பெற்ற சிவஸ்துதிகள். ஏகபாதம், கோமுத்திரி, எழுகூற்றிருக்கை, மாலைமாற்று முதலிய சித்திரகவிப்பதிகங்களும் பாடினவர். வழிமொழி, மொழிமாற்று, மடக்கு முதலிய அலங்காரப்பதிகங்களும் பாடினவர். ஈரடிமேல் வைப்பு, யாழ்முறி முதலிய சந்தவிகற்பப்பதிகங்களும் பாடினவர்.

தொண்டர் வரிசையிற் சொல்லற்குரியராயினும் புலமையின் பெருமையும் வலிமையும் நோக்கிப் புலவர்வரிசையினுங் கொண்டாம். சோமேசர் வெண்பாவினும் புலவர் எனக்கொளப்பட்டார். ஏகபாதம் முதலியவைகளைத் தேவாரத்திலே நோக்குக. இவர் பாடலின் அற்புதங்களைச் சுட்டிக்கூறுங் கட்டளைக்கலிப்பாவும் ஒன்றுண்டு. அதனையுங் காட்டுதும்.

கட்டளைக்கலிப்பா.

புனலி லேயெதிர் போகெனப் போகுமே
புத்த னூர்தலை தத்தெனத் தத்துமே
கனலி லேயிடப் பச்சென் றிருக்குமே
கதவ மாமறைக் காட்டி லடைக்குமே
பனையி லாண்பனை பெண்பனை யாக்குமே
பழைய வென்புபொற் பாவைய தாக்குமே
சினவ ராவிடந் தீரெனத் தீருமே
செய்ய சம்பந்தர் செந்தமிழ்ப் பாடலே.

---

## திருஞானசம்பந்த உபாத்தியாயர்.

இவரூர் யாழ்ப்பாணத்துள்ள சுழிபுரம். வாசஞ்செய்த இடம் திருநெல்வேலி. குலம் செல்வநாயகச்செட்டியார்குலம். சமயம் சைவம். காலம் ஏறக்குறைய இற்றைக்குப் பத்து வருடங்களுக்கு முன். ஆறுமுகநாவலர்க்கு மாணவகர். கந்தபுராணம், பெரியபுராணம், பாரதம் முதலிய இலக்கியங்களை நன்கு கற்றவர். பலர்க்குங் கற்பித்தவர். பிரசங்கஞ்செய்யுந் திறமுங் கவிபாடுந் திறமுமுடையயவர். மாணிக்கப்பிள்ளையார்திருவருட்பா, கதிர்காமவேலர்திருவருட்பா முதலிய பிரபந்தங்களுஞ், சில தனிநிலைக்கவிகளுஞ் செய்தவர். பிரபந்தப் பிரதி சில இவர் புதல்வராகிய தமிழ்ப்பண்டிதர் சோமசுந்தரம்பிள்ளையாற் பெற்றனம்.

கதிர்காமவேலர்திருவருட்பா.

பூவார் மலர்மிசைப் போதனு மாயனும் போற்றியினும்
நாவாற் றுதித்தற் கரிதாங் கதிரை நகருறையும்
மாவாரும் வள்ளிதெய் வானை மணாளற்கு மன்னுமருட்
பாவார் துதித்துணை மாணிக்க வைங்கரன் பாதங்களே.

---

## திருஞானசம்பந்தப்பிள்ளை.

இவரூர் யாழ்ப்பாணத்துள்ள நல்லூர். குலம் வேளாளர் குலம். சமயம் சைவம். காலம் ஏறக்குறைய இற்றைக்குப் பதினைந்து வருடங்களுக்குமுன். இவர், நாவலர்க்கும் பொன்னம்பலபிள்ளைக்கும் மாணவகர். இலக்கிய லக்கணமும், தருக்க நூலுஞ் சித்தாந்த சாத்திரமுங் கற்றவர். தர்க்கசாத்திரவாராய்ச்சியிலும், தர்க்கவாதஞ் செய்தலிலும் மிக்க வேட்கையுடையவர். அதுபற்றித் தர்க்க

குடாரதாஅதாரி எனவும்படுவர். கும்பகோணத்திலுஞ் சிதம்பரத்திலும் பலநாள் வசித்தவர். பலர்க்கும் பாடஞ்சொன்னவர். நமக்கும் நண்பர். தர்க்காமிர்தமொழிபெயர்ப்பு, அரிகரதாரதம்மியம், வேதாகமவாததீபிகை, நாராயணபரத்துவநிரசனம் முதலிய நூல்கள் செய்தவர்.

அரிகரதாரதம்மியம்.

ஒருவனே ரிடத்திலிந்த விசுவத்தில் வசிக்கையி லுவகை யுற்றான்
கருதுமற்றை யவன்விசுவே சுரனெனவே யவனியினிற் கழறப் பெற்றான்
இருவர்தமி லெவனதிக னெனவூகித் துண்மையிசைத் திடுக மாசு
மருவுதலி லறிவுடையீர் யாமவனை யடைந்துவழி படுவா மன்றே.

---

## திருத்தக்கதேவர்.

இவர் குலம் சோழர்குலம். தீக்ஷாகுலம் அருங்கலான்வயம் என்பர். சமயம் ஆருகதம். காலம் கடைச்சங்கத்தை அடுத்த காலம் என்பர். நிலை துறவு. இவர், அகத்தியம் தொல்காப்பியம் முதலிய இலக்கணங்களையும், சங்கச்சான்றோரிலக்கியங்களையும், ஆருகத சாத்திரங்களையும் ஆராய்ந்து கற்றவர். தக்க புலவர் என்று சான்றோரால் மதிக்கப்பட்டவர். குருவாக்கிய பரிபாலனமுஞ் சகவாசமும் பெரிதுமுடையவர்.

எதிரே வந்த நரியை நோக்கி இந்நரியைத் தலைமைப்பொருளாக வைத்துச் சிறிய காப்பியம் ஒன்று செய்க என்று தமது குரவர் கூறியபோது இதோபதேசத்தில் வரும் வியாதமிருகசூகரசர்ப்பசிருகாலர்கள் கதையை முதலில் எடுத்துக்கூறி இக்கதையை உவமையாகவைத்தும், வேறு கதைகளை உவமையாகவைத்தும் இளமையுஞ் செல்வமும் யாக்கையும் நில்லா எனவும், கொலையுங் களவும், கோபமும் உலோபமும், பொய்யும் புலையுந் தவிர்க எனவும், தானமுந் தருமமும் செய்க எனவும் நன்னெறிகளைச்சொல்லி நரிவிருத்தம் என்னுஞ் சிறு காப்பியஞ் செய்தவர்.

"தத்தைகுண மாலையொடு தாவில்புகழ்ப் பதுமை—ஒத்தபுகழ்க்கேமசரி" முதலிய பாவையர் எண்மரைச் சீவகன் என்பவன் விவாகஞ் செய்த கதையையும், அவர்கள் துறவையும் முதலிய பொருளாகவைத்து மலை, கடல், நாடு, வளநகர், பருவம் முதலியவற்றின் வருணனைகளுஞ் சேர்த்துச் சீவகசிந்தாமணி என்னும் பெருங்காப்பியமுஞ் செய்தவர்.

இச்சீவகசிந்தாமணி பின்னர்த்தோன்றிய பாரதம், நைடதம், இராமாயணம் முதலிய இதிகாசங்கட்கும், கந்தபுராணம், தணிகைப் புராணம், கூர்மபுராணம் முதலிய சில புராணங்கட்கும், வேறு சில நூல்களுக்கும் ஆசிரியவசனமாகச் சொற்களையும் சொற்றொடரை யும் வருணனைகளையும் இடையிடை எடுத்துத் தொடுக்குமாறு கொடுத்துநின்ற ஆதிகாவியம். நச்சினார்க்கினியருரையுடையது.

நரிவிருத்தம்.

கோற லோம்புமின் கொன்றபி னூன்றடி
மேற லோம்புமின் மெய்ப்பொரு ளல்லன
தேற லோம்புமின் றீயவை யாவையுங்
கூற லோம்புமி னற்குண மல்லன.

கோறல் - கொல்லல். தடி - இறைச்சி. மேறல் - உண்ணல், மெல் + தல் = மேறல்; மெல்லல். தேறல் - நம்புதல். ஓம்புதல் - நீக்குதல்.

சீவகசிந்தாமணி.

கரும்பே தேனே யமிர்தே காமர் மணியாழே
அரும்பார் மலர்மே லணங்கே மழலை யன்னம்மே
சுரும்பார் சோலை மயிலே குயிலே சுடர்வீசும்
பெரும்பூண் மன்னன் பாவாய் பூவாய் பிணைமானே.

---

## திருநாவுக்கரசசுவாமிகள்.

இவரூர் நடுநாட்டிலுள்ள திருவாமூர். குலம் வேளாளர்குலம். சமயம் சைவம். இவருஞ் சமயகுரவருள் ஒருவர். திருவருட்புலமை யாளர். பல பதிகங்கள் பாடினவர். பதிகங்களெல்லாந் தேவாரம் எனப்படுஞ் சிவஸ்துதிகள். சில பதிகங்களிலே சிவதருமங்களையும் உலகநிலையாமையையும், உய்யும்வழி முதலியவைகளையும் விசேட மாக விரித்து விளங்கக் கூறுவர்.

சிவதருமம்.

கற்றுக் கொள்வன வாயுள நாவுள
இட்டுக் கொள்வன பூவுள நீருள
கற்றைச் செஞ்சடை யானுள னுமுளேம்
எற்றுக் கோநம னன்முனி வுண்பதே.

தாண்டகம் பாடுந் திறத்திற் சாதுரியர். "தாண்டகசதுரர்" என்று சேக்கிழாருங் கூறுவர். தாண்டகங்களைத் தேவாரத்திற் காண்க. இவர் பாடலின் அற்புதங்களைச் சுட்டிக்காட்டுங் கட் டளைக்கலிப்பாவும் ஒன்றுண்டு. அதனையுங் காட்டுதும்.

கட்டளைக்கலிப்பா.

தலைகொ ணஞ்சமு தாக விளையுமே
தழல்கொ ணீறு தடாகம தாகுமே
கொலைசெ யானை குனிந்து பணியுமே
கோள ராவின் கொடுவிடந் தீருமே
கலைகொள் வேத வனப்பதி தன்னிலே
கதவு தானுங் கடுகத் திறக்குமே
அலைகொள் வாரியிற் கல்லு மிதக்குமே
அப்பர் செப்பு மருந்தமிழ்ப் பாடலே.

---

## திருமங்கையாழ்வார்.

இவரூர் சோழமண்டலத்துள்ள திருக்குறையலூர். குலம் வேளாளர்குலம். சமயம் வைஷ்ணவம். இவர் விட்டுணுபத்தியின் மிக்கவர். நாற்கவியும் பாடும் வலிமைபற்றி நாற்கவிப்பெருமாள் எனவும்படுவர். கலியர், பரகாலர் முதலிய நாமங்களையும் பெறுவர். பாரதகாரரும் "கலியனெங்கள் மங்கையாதி" என்பர். சீகாழியிற் சென்றபோது ஞானசம்பந்தமூர்த்தியோடு வாதஞ்செய்தவர் என்றுஞ் சொல்வர். பெரியதிருமொழி, திருக்குறுந்தாண்டகம், திருநெடுந்தாண்டகம், திருவெழுகூற்றிருக்கை, பெரியதிருமடல், சிறியதிருமடல் என அறு பிரபந்தங்கள் செய்தவர். இவர் கவிகளை "நன்னூற்றுறைகளஞ்சுக்கிலக்கியமாரணசாரம்" என்று கூரத்தாழ்வார் கூறுவர்.

பெரியதிருமொழி.

நந்தா நரகத் தழுந்தா வகைநாளும்
எந்தாய் தொண்டரா னவர்க்கின் னருள்செய்வாய்
சந்தோ காதலை வனேதா மரைக்கண்ணா
அந்தோ வடியேற் கருளா யுன்னருளே.

---

## திருமழிசையாழ்வார்.

இவரூர் திருமழிசை என்றும், சுதர்சனத்தின் அவதாரம் என்றும், பல சமயங்களிலும் பிரவேசித்துப் பல சமய நூல்களையுங் கற்றவர் என்றும், விட்டுணுசமயத்தையே மெய்ச்சமயமாக நிச்சயித்து நடந்த விட்டுணுபத்தர் என்றுங் கூறுவர். இவர் காஞ்சிமாநகரில் வசிக்கையிலே கணிகண்ணன் என்னுந் தமது சீடனைத் தன்மேற் கவிபாட உடம்பட்டிலன் என்று "இவ்வூரை விட்டு வெளியே

போ" என அவ்வூரரசன் முனிந்து கூறியபோது "நானும் பெருமாளை அழைத்துக்கொண்டு நின்னுடன் வருவேன்" எனக் கூறிக் கோயிலுட் பிரவேசித்துப் பெருமாளை நோக்கிக் "கணிகண்ணன் போகின்றான்" என வெண்பா ஒன்று பாடிப் பெருமாளையும் பின் வருமாறுசெய்து சென்றவர்.

வெண்பா.

கணிகண்ணன் போகின்றான் காமருபூங் கச்சி
மணிவண்ணா நீகிடக்க வேண்டா—துணிவுடைய
செந்நாப் புலவனும் போகின்றே னீயுமுன்றன்
பைந்நாகப் பாய்சுருட்டிக் கொள்.

இக்கதையைவைத்துக் குமாரகுருபரசுவாமிகள் "பைந்தமிழ்ப் பின்சென்ற பச்சைப் பசுங்கொண்டலே" என்பர். அருணகிரிநாதர் "வண்டமிழ் பயில்வோர் பின்றிரிகின்றவன்" என்பர். பின்னர் அரசன் குறையிரக்க அதனை மாற்றிப் பாடிப் பெருமாளுடனும், அவனுடனும் மீண்டு சென்றவர்.

---

## திருமுனைப்பாடியார்.

இவர் சமயம் ஆருகதம். அறநெறிகளை எடுத்துக்காட்டி அறநெறிச்சாரம் என ஒரு நூல்செய்தவர். சூதாடலால் "ஓதலுமோதியுணர்தலுஞ் சான்றோரால்—மேதை எனப்படும் மேன்மையும்" போகும் என்பர். பிறர்க்குத் துயர்செய்தலை நோக்கிப் "பிறர்க்கின்னா செய்தலிற் பேதைமை இல்லை" என்பர். கல்வியாற் செருக்குறுவாரை நோக்கிப் "பலகற்றோ மென்று தற்புகழ வேண்டாம்" என்பர்.

அறநெறிச்சாரம்.

காய்த லுவத்த லகற்றி யொருபொருட்கண்
ஆய்த லறிவுடையார் கண்ணதே—காய்வதன்கண்
உற்ற குணந்தோன்றா தாகு முவப்பதன்கண்
குற்றமுந் தோன்றா கெடும்.

---

## திருமூலநாயனார்.

இவர் திருக்கயிலாசமலையிலே நந்தியந்தேவர்க்கு மாணவகராயிருந்த ஒரு சிவயோகி. அகத்தியமுனிவரோடு சிலநாள் வசிக்க விரும்பிப் பொதியமலைநோக்கி வரும் வழியிலே எதிர்ந்த திருவாவடுதுறையில் வசித்துப் பக்கத்திற் சென்றபோது தம்மை மேய்க்குக்

தலைவனாகிய மூலன் என்பவனுடைய உடம்பைத் தழுவிக் கதறும் பசுக்களின் துயரை ஒழிக்கக் கருதித் தமதுடலைக் காவல் செய்து அவனுடலிற் பிரவேசித்து மூலன் எனச் சொல்லப்பட்டுப் பசுக்களையும் மேய்த்தவர்.

திருவாவடுதுறைச் சிவாலயத்தினிற்கும் அரசமரத்தின் கீழே யோகத்திலிருந்தவர். அங்கே மூவாயிரம் வருடம் இருந்து வருடம் ஒரு கவியாக மூவாயிரந் திருமந்திரம் பாடி முடித்தவர்.

திருமந்திரம்.

கல்லாத மூடரைக் காணவு மாகாது
கல்லாத மூடர்சொற் கேட்கக் கடனன்று
கல்லாத மூடர்க்குக் கல்லாதார் நல்லராய்
கல்லாத மூடர் கருத்தறி யாரே.

---

## திருவள்ளுவர்.

இவர், யாளிதத்தர் என்னும் முனிவருக்கும் முன்னர்ச் சண்டாளியாய்ப் பிராமணனொருவனால் வளர்க்கப்பட்டுப் பின்னர்ப் பிராமணியாய் நின்ற பெண்ணொருத்திக்கும் புத்திரர் என்று ஞானமிர்தத்தில் வாகீசமுனிவர் கூறுவர். வேறு சிலர் பகவன் என்னும் பார்ப்பானுக்கும் ஆதி என்னும் புலைமகட்கும் புத்திரர் என்றும், மயிலாப்பூரிலே வள்ளுவர் வீட்டில் வளர்ந்தவர் என்றும், பிரமாவின் அவதாரபுருடர் என்றுங் கூறுவர். வேறு சிலர் பகவான் என்றது யாளிதத்தரை என்றும் ஆதி என்றது அந்தச் சண்டாள மாதினை என்றுங் கூறுவர். இவர் பெருநாவலர், முதற்பாவலர் முதலிய பெயர்களும் பெறுவர். காலம் கடைச்சங்ககாலம்.

சில தனிநிலைக்கவிகளும் அறம், பொருள், இன்பம் எனும் மூன்றையுந் திறம்பட விளக்கித் திருக்குறள் எனப்படும் இலக்கியமுஞ் செய்தவர். இத்திருக்குறள் உத்தரவேதம், தெய்வநூல் முதலிய பெயர்களும் பெறும். இத்திருக்குறளை மதுரைச்சங்கத்தில் ஏற்றச் செல்லும் மார்க்கத்திலே ஔவையார் கண்டு அறம், பொருள், இன்பம் கூற இவ்வளவு விரிவு வேண்டுமோ? என்று சொல்லி அவைகளை "ஈதலறம்" என்னும் ஒரு வெண்பாவிற் கூறினர் என்றும், இவர் சங்கப்புலவர்கள் வினவிய வினாக்களுக்குக் கவிகளால் விடை கூறினர் என்றும் நக்கீரர் இவரை நோக்கி உமது நூலிலே எல்லாப்பொருள்களும் உள என்றீரே! இக்கல்லும் உளதா? என்றபோது

"வாழ்நாள் வழியடைக்குங் கல்" என்ற அடியைச் சொல்லினர் என்றும் இவ்வாறே பல கதைகள் கூறுவர்.

இத்திருக்குறட்பொருட்களையுஞ் சொற்களையுந் தத்தம் நூலுரைகளிற் கொள்ளாத சான்றோர் யாவர்! சமயவாதிகள் யாவர்! சிந்தாமணிகாரர், சிலப்பதிகாரர் முதலிய நூலாசிரியருங்கொள்ளுவர். இளம்பூரணர் நச்சினார்க்கினியர் முதலிய உரையாசிரியருங் கொள்ளுவர். கம்பநாடர் ஏரெழுபதிலே "உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார்மற் றெல்லாரும்—தொழுதுண்டு பின்செல்வா ரென்றேயித் தொல்லுலகில்—எழுதுண்ட மறையன்றோ" என்பர். திருக்கைவழக்கத்தில் "உடுக்கை யிழந்தவன் கைபோல வாங்கே—கொடுக்க விசைந்த குளிர்க்கை" என்பர்.

தனிநிலைக்கவி.

ஐயரென் றுரைத்தீர் நாயேற் கடுக்குமோ வருளிலேனைப்
பொய்யொடு களவுமற்றுப் புலன்களை யொடுக்கிக் கொண்டு
உய்யவே புலன்க ளைந்து முயர்பர வெளியு ளாக்கி
வெய்யவன் மதியம் போல விரவுவா ரையராவார்.

---

## திருவாதவூரர்.

இவரூர் பாண்டிமண்டலத்துள்ள திருவாதவூர். குலம் வேதியர்குலம். சமயம் சைவம். காலம் அரிமர்த்தனபாண்டியன்காலம். தந்தையார் சம்புபாதாசிரிதர். தாயார் சிவஞானவதியார். அவதாரம் நந்தியந்தேவரவதாரம். இவர் வேதவேதாங்கங்களையும், தருக்கம், மீமாஞ்சை, தருமசாத்திரம், புராணம் முதலியவைகளையும், பிறவற்றையும் இளமையிற் கற்றுத் தெளிந்தவர். அருட்புலமையாளர். சிவபிரானே குருவாய் வந்து சிவஞானபோதம் உபதேசிக்கப் பெற்றவர். "அன்பிலாத பண்பினரெனினுந் தன்னைப் பாடினர்க் கிரங்குமென்றே" சிவபிரான்மீது "தேனெனப் பாலெனச் சில்லமிர் தூற்றெனத்" துதிவடிவாகப் பல கவி பாடினவர். பௌத்தரை வாதில் வென்று சைவராய்வரச்செய்தவர். அவர் வினவிய வினக்களுக்கெல்லாம் ஊமைப்பெண்ணைப் பேசவைத்து விடைகளுஞ் சொல்லுவித்தவர். அவ்வினவிடைகளைச் சாழலாம் விளையாடலாகவைத்துக் கவிகளும் பாடினவர். கவிகளெல்லாந் திருவாசகம் எனப்படும்.

திருவாசகமோ படிப்பவர் கேட்பவர்க்கெல்லாம் பத்தியையும் முத்தியையும் பயக்கும். மனத்தையும் உருக்கும். "திருவாசகமிங்

கொருகாலோதிற்—கருங்கன்மனமுங் கரைந்துருகும்" எனச் சிவப்பிரகாசசுவாமி கூறுவர். திருவாசகமன்றிச் சிவபிரான்மீது திருக்கோவை எனப்படும் அகப்பொருட்கோவையும் பாடினவர். இக்கோவையை வேதியர் வேதம் என்பர். யோகியர் ஆகமம் என்பர். காமுகர் இன்பநூல் என்பர். தார்க்கிகர் தர்க்கநூல் என்பர். தமிழ்ப்புலவர் இலக்கனம் என்பர். இதனைப் பாடக்கேட்டவரும், இவைகளிரண்டையும் ஏட்டிற்றீட்டிய இலேககரும் வேதியராய் முன்னின்ற ஆதியங்கடவுளேயாவர்.

### திருவாசகம்.

தென்பா லுகந்தாடுந் தில்லைச்சிற் றம்பலவன்
பெண்பா லுகந்தான் பெரும்பித்தன் காணேடீ
பெண்பா லுகந்திலனேற் பேதா யிருநிலத்தோர்
விண்பால் யோகெய்தி வீடுவர்காண் சாழலோ.

---

## திருவேங்கடநாதர்.

இவரூர் நடுநாட்டுள்ள திருவாமாத்தூர். குலம் வேதியர்குலம். சமயம் வைஷ்ணவம். காலம் வைத்தியநாததேசிகர்காலம். இவர் புலவரன்றிப் புலவர் பாடும் புகழுடைத்தலைவருமாவர். பணவிடுதூது என்னும் பிரபந்தம் பெற்றவர் என்றும், மந்திரித்தலைவராய்த் திருநெல்வேலியில் அரசியல் நடாத்தினவர் என்றுங் கூறுவர். இலக்கணவிளக்கம் என்னும் இலக்கணமுஞ் செய்வித்தவர். இலக்கணவிளக்கப் பாயிரம் இவரை "வேதியர் திலகன் விரவலர் கோளரி—மாதைய ரதிபன் வரகுண மேரு—கல்விக் கெல்லை கருணைக் காகரம்—பெருமான் மெய்த்தவப் பேறெனத் தோன்றிய—திருமா லுலகஞ் செவ்விதிற் புரக்கும்—மேதகு புகழ்த்திரு வேங்கட நாதன்" என்று கூறும். இவர் செய்த நூல் பிரபோதசந்திரோதயம் எனச் சொலும் மெய்ஞ்ஞானவிளக்கம்.

### மெய்ஞ்ஞானவிளக்கம்.

பேராசை யாலீனர் பின்சென் றுழன்றும்
தீராத மிடியாளர் சிலர்பாரி லுண்டே
நேராக வரில்வாழ்வு நினையாமல் வருமால்
வாராத தார்தாம் வருந்தினும் வராதே.

---

## தொண்டரடிப்பொடியாழ்வார்.

இவரூர் சோழமண்டலத்துள்ள திருமண்டங்குடி. குலம் வேதியர்குலம். சமயம் வைஷ்ணவம். வாசம் திருவரங்கம். இவர் பாகவதர் பாதநூளிபோன்று அடிமைபூண்ட காரணத்தாலே தொண்டரடிப்பொடி எனப்பட்டார். இவர் இயற்றிய பிரபந்தங்கள் திருமாலை, திருப்பள்ளியெழுச்சி என்பன.

திருமாலை.

புலையற மாகி நின்ற புத்தொடு சமண மெல்லாங்
கலையறக் கற்ற மாந்தர் காண்பரோ கேட்ப ரோதான்
தலையறுப் புண்டுஞ் சாகேன் சத்தியங் காண்மி னையா
சிலையினு லிலங்கை செற்ற தேவனே தேவ னுவான்.

---

## தொல்காப்பியத்தேவர்.

இவர் திருப்பாதிரிப்புலியூர்க் கோயிற்றலைவர் கேள்விப்படி திருப்பாதிரிப்புலியூர்க்கலம்பகம் என்னும் பிரபந்தஞ் செய்தவர் என்பர். இக்கலம்பகப் பெருமையை இரட்டைப்புலவர்களும் "தொல்காப்பியத்தேவர் சொன்னதமிழ்ப் பாடலன்றி—நல்காத் திருச்செவிக்கு நாமுரைப்ப தேறுமோ" என்பதனுல் எடுத்துக் கூறுவர். இக்கலம்பகம் சொற்சிறப்பும் பொருட்சிறப்புமுடையது.

கலம்பகம்.

சேதாம்பல் பூக்குந் திருப்பா திரிப்புலியூர்
வேதாந்த நாதர் வியன்கயிலை—மாதர்
மொழியா மமுத முகமா முளரி
விழியாங் கோலைபயிலும் வேல்.

---

## தொல்காப்பியர்.

இவர் இடைச்சங்கப்புலவருள் ஒருவர். குலம் வேதியர்குலம். பழைய காப்பியக் குடியிற் பிறந்ததுபற்றித் தொல்காப்பியர் எனப்பட்டார் என்பர். அகத்தியமுனிவர்க்கு முதன்மாணவகர். அகத்தியத்தின் வழித்தாக இலக்கணம் ஒன்று செய்தவர். அது தொல்காப்பியம் எனப்படும். பன்னிருபடலத்துள்ளும் ஒரு படலஞ் செய்தவர். தொல்காப்பியம் ஒன்றே அன்றுதொடங்கி இன்றுவரையும்

னின்றுநிலவுவதோர் பண்டையிலக்கணம். இலக்கணங்கட்கெல்லாம் முதற்கண் நிற்பதும், இலக்கண பண்டிதர்கள் விரும்பிக் கற்பதும் இதுவே என்க. இஃது இளம்பூரணர் முதலிய ஐவருரையுடையது.

## நக்கீரர்.

இவரூர் பாண்டிமண்டலத்துள்ள மதுரைமாநகர். குலம் வேதியர் குலம் என்பர். சமயம் சைவம். தந்தையார் கணக்காயனார். இவர் கடைச்சங்கப் புலவர்களுள்ளே தலைவர். இவரை "இலக்கியப்புலவர் சிங்கம்" என்று சிவப்பிரகாசசுவாமி கூறுவர். இவர் பத்துப்பாட்டிலே திருமுருகாற்றுப்படை, நெடுநல்வாடை என்னும் பிரபந்தங்களையும், பதினோராந்திருமுறையிலே கைலைபாதி காளத்திபாதியந்தாதி முதலிய பிரபந்தங்களையும், நற்றிணை, குறுந்தொகை, புறநானூறு முதலிய பிரபந்தங்களிற் சில சில கவிகளையும், வேறு சில தனிநிலைக்கவிகளையும் பாடினவர். யாப்பருங் கலவுரையில் வரும் நாலடிநாற்பதையும் இவர் கவி என்பர். இறையனர் களவியற்கு உரையுஞ் செய்தவர். பட்டிமண்டபம் புகுந்து வடமொழியே சிறப்புடையது என்ற கொண்டான் என்னுங் குயவன் இறக்கப் பாடினவர். உயிர்க்கவும் பாடினவர். தமது கவிகளிலே அப்பொழுதையரசருட் பலரைப் பாடினவர். நற்றிணைச் செய்யுள் ஒன்றில் அருமன் என்னும் பிரபுவையும் பாடினவர். வேறும் பலரைப் பாடினவர். சொக்கநாதக் கடவுளோடு வாதும் புரிந்தவர். வாதசம்பவத்தைச் சிறிது கூறுதும்.

வங்கியசூடாமணி என்னுஞ் சம்பகபாண்டியன் பரந்து வீசிய பெருந்தேவி கூந்தலின் வாசம் இயற்கையோ செயற்கையோ என நாடி இயற்கையே எனக் கருதி இக்கருத்தமையக் கவிபாடி வருவார்க்கே இக்கிழியுரியதாகும் என்று பொற்கிழி ஒன்று சங்க மணடப முகப்பிலே தூக்கினன். அக்கிழியும் ஆயிரம்பொன் அடங்கியது. அதன்மேல் அவாக்கொண்ட பாவலர் யாவரும் பாடி வந்தனர். அவர் கவி ஒன்றும் இயையாது தருமி என்னும் பனவன் கொணர்ந்த "கொங்குதேர்வாழ்க்கையஞ்சிறைத்தும்பி" என்னும் அகவற்கவி ஒன்றே அரசன் கருத்தொடும் இயைவதாயிற்று, அக்கவி பாடினவர் சொக்கநாதக்கடவுள்.

குறுந்தொகை.

கொங்குதேர் வாழ்க்கை யஞ்சிறைத் தும்பி
காமஞ் செப்பாது கண்டது மொழிமோ
பயிலியது கெழீஇய நட்பின் மயிலியற்
செறி யெயிற் றரிவை கூந்தலின்
நறியவு முளவோ நீயறியும் பூவே.

பொற்கிழிக்குத் தருமியே உரிமையாதலை நக்கீரர் நோக்கித் தருமியைத் தடுத்துப் "பாட்டிற் பிழை காட்டுவேன். பதப்பொருளறியாப் பார்ப்பான் நீ, பாட்டியற்றிய புலவரைக் கூட்டிவா, போ" எனக் கூறத் தருமியும் மனம் வருந்திப் போய்க் கடவுட்கு முறையிட்டான். கடவுளும் புலவர்கோலம்பூண்டு புலவர் சவைநடுவில் வந்து பிழை சொன்னவர் யாவர்? என்றார். நக்கீரர் சொன்னவன் நானே எனத் தருக்கொடு சொன்னார். அத்தருக்கினை அடக்குமாறு கடவுள் ஒரு கவிபாடக் கீரரும் ஒன்று பாடினர்.

கடவுள்பாடியது.

அங்கங் குலுங்க வரிவாளி னெய்தடவிப்
பங்கம் படவிரண்டு கால்பரப்பிச்—சங்கைக்
கீரிக் ரெனவறுக்குங் கீரனோ வென்கவியை
யாராயு முள்ளத் தவன்.

கீரர்பாடியது.

சங்கறுப்ப தெங்கள்குலந் தம்பிராற் கேதுகுலம்
பங்கமறச் சொன்னாற் பழுதாமோ—சங்கை
அரிந்துண்டு வாழ்வே மரனாரைப் போல
இரந்துண்டு வாழ்வ திலை.

கடவுள் பிழை யாது? என்றார். கீரர் இயற்கை வாசம் என்று பாடியதே பிழை என்றார். கடவுள் தேவமகளிர் கூந்தலும் நமது தேவி கூந்தலும் எப்படி? என்றார். கீரர் அவையுஞ் செயற்கைவாசம் என்றார். கடவுள் நெற்றிக்கண்ணையுங் கற்றைச் சடையையுங் காட்டினர். அவற்றாலுங் கீரரடங்கிலர். கடவுள் கோபம்பூண்டு கீரரை நோக்கி நம்மையும் பகைத்தனை; நமது தேவிகூந்தலையும் நகைத்தனை. குட்டநோயுறுக எனச்சாபமிட்டனர். பின்னர்ப்பிழை பொறுத்தருள்வாய் எனக் கீரர் வேண்டலுக் கிரங்கிச் "சென்று நீள்கயிலைகாணிற்றிருமிந்நோய்" எனச் சாபத்தீர்வுங் கூறினர்.

கீரருங் கயிலைநோக்கிச் சென்றனர். செல்லும் வழியிலோர் ஆலமர நிழலுங் குளக்கரையும் அகப்படக் கண்டு சிவபூசை செய்

யத் தொடங்கினர். ஆலிலை ஒன்று கீழே வீழ்ந்து நிலத்திற் பாதியுங் குளத்திற் பாதியும் பொருந்தி நீரிலும் நனைந்தது. நிலத்தில் வீழ்ந்த பாதி பறவையாயிற்று. குளத்தில் வீழ்ந்த பாதி மீனாயிற்று. கீரரும் நோக்கினர். பூசையுந் தவறிற்று. தவறுகண்ட பூதமும் பிடித்தது. கொல்லக் கருதிக் குகையொன்றிற் கொடுபோய் வைத்தது. அதனை வெல்லக் கருதிய கீரர் முருகக்கடவுளை முன்னி ஆற்றுப்படை சொல்ல முருகக்கடவுளுந் தோன்றி அதனுயிர் அழித்தனர். கீரரும் பிழைத்தனர்.

---

## நச்சினார்க்கினியர்.

இவரூர் பாண்டிமண்டலத்துள்ள மதுரைமாநகர். குலம் வேதியர் குலம். சமயம் சைவம். காலம் இற்றைக்கு ஐந்நூறு வருடங்களுக்கு முன்னரென்பர். இவர் தொல்காப்பியத்துக்கும், கலித்தொகைக்கும், பத்துப்பாட்டுக்குஞ், சீவகசிந்தாமணிக்கும் பேருரை செய்த உரையாசிரியர். இவர் தம்முரைகளிலே இலக்கணமும் இலக்கியமுமாகப் பலநூற் பிரமாணங் காட்டுவர். சுபர்த்தி காரிகை முதலிய வடமொழிப் பிரமாணமுங் காட்டுவர். இவருரையில்லையாயின்; இந்நூற் பொருள்களை அறிபவர் யாவர்? இவர் வேறு நூல்களுக்கும் உரை செய்தனர் என்பர். இவருரையின் அருமை பெருமைகள் சொல்லில் அடங்குவனவல்ல.

---

## நடராசையர்.

இவரூர் யாழ்ப்பாணத்துள்ள இணுவில். குலம் வேதியர் குலம். சமயம் சைவம். காலம் இற்றைக்குப் பதினொரு வருடங்களுக்குமுன். இவர் இலக்கணம், இலக்கியம், சித்தாந்தம் முதலியவைகளை ஆறுமுகநாவலரிடங் கற்றவர். சித்தாந்த சாத்திரங்களிலே தக்க பாண்டித்தியம் பெற்றவர். சிதம்பரம் மதுரை முதலிய சிவஸ்தலங்களிற் பலநாள் வசித்தவர். அங்கும் இங்கும் பலர்க்குச் சித்தாந்தசாத்திரங்கள் படிப்பித்தவர். சோதிடம், மந்திரம், வைத்தியம், யோகம், வடமொழி முதலியவைகளுந் தெரிந்தவர். கவிபாடுந் திறமுமுடையவர். தற்புகழ்ச்சி, தருக்குத், தலையெடுப்பு முதலிய தீக்குணங்களில்லாதவர்.

விருத்தம்.

சொல்லி னுவிற் றரிசறுஞ் சோத்திரத்
தொல்லு மேற்சிவ ஞான முதித்திடும்
செல்லு மெய்யரு ணந்திசெய் சித்திக்கு
நல்ல ஞானப் ப்ரகாச னவிற்றுரை.

---

## நம்பியாண்டார்நம்பி.

இவரூர் சோழமண்டலத்துள்ள திருநாரையூர். குலம் வேதியர் குலம். சமயம் சைவம். வேதம், வேதாங்கம் முதலிய எல்லாக் கலைகளையும் பொல்லாப்பிள்ளையாரிடங் கற்றவர். தேவாரம், திருவாசகம் முதலியவைகளைப் பதினொரு திருமுறையாக வகுத்தவர். பொல்லாப்பிள்ளையார் சொல்லியவாறு திருத்தொண்டத் தொகையை முதலாகவைத்துத் திருத்தொண்டர் திருவந்தாதி செய்தவர். திருத்தொண்டர் திருவந்தாதி யன்றித், திருவிரட்டை மணிமாலை முதலிய பிரபந்தங்களுஞ் செய்தவர்.

திருத்தொண்டர்திருவந்தாதி.

பெற்ற முயர்ந்தோன் விரையாக் கலிபிழைத் தோர்தமது
சுற்ற மறுக்குந் திருநாட் டியத்தான் குடிக்கோன்
குற்ற மறுக்குநங் கோட்புலி நாவற் குரிசிலருள்
பெற்ற வருட்கட லென்றுல கேத்தும் பெருந்தகையே.

---

## நம்மாழ்வார்.

இவரூர் பாண்டிமண்டலத்துள்ள திருக்குருகூர். குலம் வேளாளர் குலம். சமயம் வைஷ்ணவம். இவர் குருகைப்பிரான், மாறர், சடகோபர் முதலிய பெயர்களையும பெறுவர். குருகைப்பிரான் - குருகூரார்க்குத் தலைவர். "கொத்தவிழ்த்த சோலைமன்னு குருகையாதி" என்று பாரதகாரருங் கூறுவர். மாறர் - உலகியற்கு மாறுனவர். மாறனலங்காரம் என்புழி மாறன் என்றதும் இவரையேயாம். சடகோபர் - சடவாயுவை முனிந்தவர். கம்பநாடரை நம்பெருமாள் நோக்கி "நஞ்சடகோபனைப் பாடினையோ" எனக் கம்பநாடர் பாடிய சடகோபரந்தாதியும் பெற்றவர். திருவிருத்தம், திருவாசிரியம், பெரியதிருவந்தாதி முதலிய பிரபந்தங்கள் செய்தவர்.

திருவிருத்தம்.

வீசுஞ் சிறகாற் பறத்திர்விண் ணாடுநுங் கட்கெளிது
பேசும் படியன்ன பேசியும் போவது நெய்தொடுவுண்
டேசும் படியன்ன செய்யுமெம் மீசர்விண் ணோர்பிரானார்
மாசின் மலரடிக் கீழெம்மைச் சேர்விக்கும் வண்டுகளே.

---

## நமச்சிவாயக்கவிராசர்.

இவரூர் பாண்டிமண்டலத்துள்ள செங்கோட்டை. விக்கிரம சிங்கபுரத்திலும் வசித்தவர். குலம் வேளாளர்குலம். சமயம் சைவம். காலம் இற்றைக்கு நூற்றைம்பது வருடங்களுக்கு முன் என்பர். இவர் உலகுடையம்மைமேல் அந்தாதி முதலியவைகளுஞ் சிங்கைச் சிலேடைவெண்பா முதலியவைகளுஞ் செய்தவர். சிங்கை என்பது விக்கிரமசிங்கபுரம்.

சிங்கைச்சிலேடைவெண்பா.

மாலைக் குழன்மடவார் வார்விழியு மாளிகையுஞ்
சேலைக் கொடிதிகழுஞ் சிங்கையே—ஆலைக்
கரும்பனைக்கா யங்கெடுத்தார் காலாந்தத் தாடல்
விரும்பனைக்கா யங்கெடுத்தார் வீடு.

சேலைக் கொடி திகழும் என்பது சிலேடை. விழி சேலை கொடிது இகழும் என்க. சேலை - சேலென்னும் மீனை. மாளிகை சேலைக் கொடி திகழும் என்க. சேலை - சீலை. கரும்பன் - மன்மதன். காயம் - உடல். விரும்பு அனைக்காய் அங்கு.

---

## நரிவெரூஉத்தலையார்.

இவர் கடைச்சங்கப் புலவருள் ஒருவர். சேரமான்கோப் பெருஞ்சேரலிரும் பொறையைக்கண்டு தம்முடம்பின் வேறுபாடு நீங்கி அவனை வியந்து கவிபாடினவர். அக்கவியும் அவர்பாடிய மற்றொரு கவியும் புறநானூற்றில் வருகின்றன. குறுந்தொகையிலும் இருகவி பாடினவர். திருக்குறட்கும் பாயிரம் பாடினவர்.

புறநானூறு.

பல்சான் றீரே பல்சான் றீரே
கயன்முள் ளன்ன நரைமுதிர் திரைகவுட்
பயனின் மூப்பிற் பல்சான் றீரே

கணிச்சிக் கூர்ம்படைக் கடுந்திற லொருவன்
பிணிக்குங் காலை யிரங்குவிர் மாதோ
நல்லது செய்த லாற்றீ ராயினும்
அல்லது செய்த லோம்புமி னதுதான்
எல்லாரு முவப்ப தன்றியும்
நல்லாற் றுப்படூஉ நெறியு மாரதுவே.

குறுந்தொகை.

அதுகொ றோழி காம நோயே
வதிகுறங் குறங்கு மின்னிறைப் புன்னை
உடைதிரைத் திவலை யரும்புந் தீநீர்
மெல்லம் புலம்பன் பிரிந்தெனப்
பல்லிதழ் முண்கண் பாடொல் லாவே.

## நல்லதம்பிப்பிள்ளை.

இவரூர் மலைமண்டலத்துள்ள தத்தைமங்கலம். குலம் வேளாளர் குலம். சமயம் சைவம். காலம் ஏறக்குறைய இற்றைக்குப் பத்து வருடங்களுக்கு முன். இவர் மாணிக்கவாசக சுவாமிகளாதீன வித்துவான். இலக்கிய லக்கணங்களுந் தருக்கமுந் தெரிந்தவர். வடமொழியினுஞ் சென்றவர். வடமொழி தென்மொழி என்னும் இருமொழி யிலக்கணங்களுக்கும் இயைபுகாட்டிப் பாலப்பிரபோதம் என்னும் இலக்கணஞ் செய்தவர். சைவசித்தாந்த ரகசியம் முதலிய நூல்களுஞ் செய்தவர். நமது நிகண்டுச் சொற்பொருளுரைக்குப் பாயிரமுந் தந்தவர்.

பாயிரம்.

தென்மொழியில் வடமொழியிற் செறிசிகண்டு மிலக்கணமுந்
திண்மை நுண்மை
மன்றுபல விலக்கியமுந் தருக்கமுத லியநூலும்
வாய்ந்த சைவ
நன்னெறிசேர் நூனூலு மோர்ந்துணர்ந்தோ னட்பினர்பா
னன்மை யாளன்
பின்னமிலா துறைமனத்தன் குமாரசுவா மிப்புலமைப்
பெருமை மிக்கோன்.

## நாகநாதப்பிள்ளை.

இவரூர் யாழ்ப்பாணத்துள்ள சுன்னாகம். குலம் வேளாளர் குலம், காலம் இற்றைக்கு முப்பத்திரண்டு வருடங்களுக்கு முன்.

இவர் அம்பலவாணர்க்கு மைந்தர். அம்பலவாணர், சிநிவாசர் என்னும் இருவர்க்குந் தந்தையார். பிரசித்திபெற்ற வைத்தியராகிய வல்லிபுரநாதர்க்கு மாதுலர். அங்கிலம், தமிழ் சங்கதம், சிங்களம் என்னும் நான்கு பாஷைகளும் நன்கு கற்றவர். முல்லைத்தீவு நியாய சாலையிலுங் கற்பிட்டி நியாயசாலையிலும் துவிபாஷாவாதி எனப் படும் அதிகாரபுருடராய் இருந்தவர்.

அங்கில மொழிபெயர்ப்போடிருந்த மானவதருமசாத்திரம், பகவற்கீதை, மேகதூதம் முதலிய சங்கதநூல்களைத் தமிழிற்பெயர்த்துச் சங்கரபண்டிதர் படித்துக்கொள்ளக் கொடுத்தவர். இதோபதேசம், சிசுபாலவதம் முதலிய சில காவியங்களையுஞ் சில வியாகரணங்களையுந் தமிழில்விளக்கி எமக்கும் படிக்கத் தந்தவர். சில நூல்களுக்குப் பாடமுஞ் சொன்னவர். சாந்தோக்கியம் முதலிய சில உபநிடதங்களையும் சாங்கியத்தையும் மொழிபெயர்த்தவர். இதோபதேசத்தை அச்சிடும்படி எமக்குத் தந்தவர். இலங்காபிமானி முதலிய பஞ்சிகைகளிலும் பலவிடயங்கள் எழுதினவர். கவிபாடுஞ் செயலு முடையவர்.

வெண்பா.

நீதி நெறிவிளக்க நேர்முறை யாராய்ந்து
போதவுரை செய்யப் புலவோர்க்கு—மேதினியில்
ஆமோ வயிரவ நாதரரு ளாசிரியன்
தாமோ தரற்கன்றித் தான்.

---

## நாராயணபாரதி.

இவரூர் தொண்டைமண்டலத்துள்ள வெண்மணி என்பர். குலம் வேதியர்குலம். சமயம் வைஷ்ணவம். நீதிநெறிகள் பலவற்றை எடுத்துக் காட்டித் திருவேங்கடசதகம் என்னும் பிரபந்தஞ் செய்தவர். இது மனவாளநாராயண சதகம் எனவும்படும். சதகம் - நூறு செய்யுளாலாயது.

காப்பு.

செந்திருவாழ் மார்பன் றிருவேங் கடசதகம்
பைந்தமிழா னீதிநெறி பாடவே—வந்தருளுங்
கார்முகமஞ் சங்கத்தான் கைத்தா மரையணிந்த
கார்முகமஞ் சங்கத்தான் காப்பு.

கார் - முகில். முகம் அஞ்சு அங்கத்தான். கார்முகம் - வில்லு. அம் - அழகு. சங்கம் - சங்கு.

---

## நாற்கவிராசநம்பி.

இவர் பெயர் நம்பி. ஆசு, மதுரம் முதலிய நாற்கவியும் பாடும் வன்மையால் நாற்கவிராச நம்பி எனப்பட்டார். நம்பி நயினர் எனவும்படுவர். இவரூர் பாண்டிமண்டலத்திலே பொருநையாற்றங் கரையிலுள்ள புளிங்குடி. சமயம் ஆருகதம். இவர் தொல்காப்பியத்தின் வழியாய் அகப்பொருள்விளக்கம் என்னும் பொருளிலக்கணஞ் செய்தவர். இதனை உரையினுற்புதுக்கி நாமும் தி. த. கனகசுந்தரம் பிள்ளையும் அச்சிட்டிருக்கின்றோம்.

## நிரம்பவழகியதேசிகர்.

இவரூர் சோழமண்டலத்துள்ள வேதாரணியம். குலம் வேளாளர் குலம். சமயம் சைவம். காலம் இற்றைக்கு நானூறு வருடங்களுக்கு முன் என்பர். இவர் மதுரைமாநகரிலே வசித்தவர். தென்மொழி வடமொழி இரண்டும் தெரிந்தவர். இலக்கணம், தருக்கம் நிகண்டு முதலிய கருவிநூல்களையும், இலக்கியங்களையும், சைவசித்தாந்த நூல்களையும் நன்கு உணர்ந்தவர். சேதுமான்மியத்தைத் தமிழிற்பெயர்த்துச் சேதுபுராணம் என விருத்தப்பாவில் உரைத்தவர். சித்தியார் சுபக்கத்துக்குந் திருவருட்பயனுக்கும் உரைசெய்தவர்.

சேதுபுராணத்திலே வழக்கில் வாராத நிகண்டுச் சொற்களையெல்லாம் அடிக்கடி பிரயோகிப்பர். இலக்கண விடயங்களையும் பிரயோகிப்பர். திருக்கு, மடக்குச், சிலேடைகளையும் அமைப்பர். சேதுவை அணை என்பர். சக்கரதீர்த்தத்தைப் பரிதியலந்தை என்பர். சடாதீர்த்தத்தைப் பின்னலிலஞ்சி என்பர். ஒரு வேதியன் தேவனுயினன் என்பதை "நிலைமொழி தன்னை நீத்தான் பூசுரனென்று தொக்கபுணர்மொழியிரண்டுதம்மில்" என்பர். இலக்குமிதீர்த்தம் செல்வராக்கும் என்பதை "வெறுங்கையாரென்னுஞ்சொல்லின் மென்மையைவன்மைசெய்யும்" என்பர். வல்லெழுத்தாக்க வெறுக்கையார் என வரும். வெறுக்கை - செல்வம். இலக்குமியை "மகரவாகாரநங்கை" என்பர்.

சேதுபுராணம்.

இல்லமென் கிளவி யக்காட் டிருப்பவ ரிசைக்குங்கால<br>வெல்லருங் கேள்வி மேலோர் விதித்திடு மிலக்கணத்துட்<br>சொல்லிடும் பெயரே யெனைத் தொழிற்குறிப் பிரண்டினுள்ளும்<br>சில்லதோர் பெயரே யன்றி நவின்றிட நாடடாரே.

இல்லம் என்பது பெயராகி வீடு எனவும், தொழிற்குறிப்பாகி வறியேம் எனவும் பொருள்படும். தொழிற்குறிப்பு - வினைக்குறிப்பு. அந்நாட்டவர் யாவருஞ் செல்வராயிருத்தலால் இல்லம் என்னுஞ் சொல்லை வறியேம் என்னும் பொருளில் வழங்கார் என்றார் என்க. இச்சேதுபுராணத்தின் பெருமையையுங் கவிகளின் அருமையையும் பற்றிச் செந்தமிழிற் சில கூறினும். வேண்டுவார் ஆண்டுங் காண்க.

---

## நெற்குன்றவாணர்.

இவரூர் தொண்டைமண்டலத்துள்ள காஞ்சிபுரம். குலம் வேளாளர் குலம். சமயம் சைவம். இவர் பொறுமை, தயை முதலிய நற்குணமுடையவர். ஒரு வழக்குக்காரணமாக அவ்வூரரச ராலே தூரத்தப்பட்டுச் சோழமண்டலம் வந்து சிதம்பரம் முதலிய தலங்களைத் தெரிசித்துக்கொண்டு திருப்புகலூரிற் சிவஸ்தலம் புகுந்து விநாயகர்சந்நிதியில் ஒருகவி கூறினர். அதனைப்பின்னின்றார் ஒருவர் கேட்டு அந்தாதிக்காப்பு என்ன அதற்கும்உடம்பட்டுத் திருப்புகலூரந்தாதி எனத் திருக்கந்தாதி ஒன்று பாடினவர் என்பர்.

### திருப்புகலூரந்தாதி.

பூக்க மலத்து விழிவளர் வானென்றும் போற்றியலூர்
மாக்க மலத்து மகிழ்கின்ற ஹூர்மது வானிறைந்து
தேக்க மலத்து வழியே பரக்குந் திருப்புகலூர்
நோக்க மலத்துயர் சோதிநெஞ் சேநமை நோக்குதற்கே.

கமலம் - நீர். மா - இலக்குமி. தேக்கு அம் அலத்து வழியே - ததும்பிய நீர் கலப்பையின் வழியே. நோக்கு - பார். அமலத்து உயர் சோதி. இதனைத் தொண்டைமண்டல சதககாரரும் "பூக்க மலமென்றுய்ந் தெடுத்த—ளப்பாள னெற்குன்ற வானனந்தாதிக் கலித்துறையே" எனச் சுட்டிக் கூறுவர்.

---

## பகழிக்கூத்தர்.

இவரூர் பாண்டிமண்டலத்துள்ள சந்நாசிக்கிராமம் என்றும், குலம் வேதியர்குலம் என்றும், சமயம் சைவம் என்றுஞ் சிலர் கூறுவர். வேறு சிலர் ஊருங் குலமும் வேறு கூறுவர். நிற்க. இவர் இயற்றிய நூல் திருச்செந்தூர்ப் பிள்ளைத்தமிழ்.

பிள்ளைத்தமிழ்.

கஞ்சல் பொருந்திய குவளைக்குழியிற் கழியிற் பழனத்திற்
 கரையிற் கரைபொரு திரையில்வளைத்த கவைக்கால் வரியலவன்
பொங்கு குறுந்துளி வாடையினொந்து பொருதே வெயில்காயும்
 புளினத் திடரிற் கவரிற்றுவரிற் புன்னை நறுந்தாதிற்
கொங்கு விரிந்த மடற்பொதிதாழைக் குறுமுட் கரியபசுங்
 கோலச் சிறியகுடக் காயிற்புயல் கொழுதிய செய்குன்றிற்
சங்கு முழங்கிய செந்திற்பதியாய் தாலோ தாலேலோ
 சமய விரோதிக டிமிரதிவாகர தாலோ தாலேலோ.

---

## பட்டினத்துப்பிள்ளையார்.

இவர் காவிரிப்பூம் பட்டினத்திற் பிறந்தமைபற்றிப் பட்டினத்துப்பிள்ளையார் எனப்பட்டார். திருவெண்காடர் என்பது இவரியற்பெயர். குலம் வைசியர்குலம். சமயம் சைவம். நிலை துறவு. இவர் பத்திரகிரியார், சேந்தனர் முதலியோர்க்கு ஞானகுரு. சிதம்பரம், மதுரை முதலிய சிவஸ்தலங்களுக்கு யாத்திரைசெய்தவர். ஆங்காங்குத் துதிகளும், நன்மதிகளும் பிறவுமாகப் பல தனிநிலைக் கவிகள் பாடினவர். அவையெல்லாம் "பட்டினத்துப்பிள்ளையார் பாடல்" எனப்படும். கோயினான்மணிமாலை, கழுமலமும்மணிக்கோவை முதலிய பிரபந்தங்களுஞ் செய்தவர். பலகவிகளிலே இவ்வுலகப் பொய்ம்மையையும், அவ்வுலக மெய்ம்மையையுஞ் செவ்வை பெறத் தெரித்தவர். கதைகள் பல.

கட்டளைக்கலித்துறை.

கொல்லாமற் கொன்றதைத் தின்னுமற் குத்திரங் கோள்களவு
கல்லாமற் கைதவ ரோடிணங் காமற் கனவிலும் பொய்
சொல்லாமற் சொற்களைக் கேளாமற் றோகையர் மாயையிலே
செல்லாமற் செல்வந் தருவாய் சிதம்பர தேசிகனே.

---

## படிக்காசுப்புலவர்.

படிக்காசு என்பது சிதம்பரத்திலே சிவகாமியம்மையார் பஞ்சாக்கரப்படியில் வைத்த படிக்காசு பெறுதலாற் பெற்ற பெயர் என்பர். இவரூர் தொண்டைமண்டலத்துள்ள களத்தூர். குலம் செங்குந்தர்குலம் என்பர். சமயம் சைவம். காலம் தளவாய் இரகுநாதசேதுபதிகாலம். இலக்கண விளக்கஞ்செய்த வைத்தியநாத

தேசிகர்க்கு மாணவகர். அந்தச் சேதுபதியின் சமஸ்தான வித்துவானும் இருந்தவர். சந்தக்கவிபாடுதலிற் சமர்த்தர். "பகர்சந்தம் படிக்காசலாலொருவர்பகரொணுதே" எனும் புகழுரையும் பெற்றவர். சபாநாயகர்மீதும், செந்தூர்க் கந்தவேள்மீதும், கொடையாளர்களாகிய காளத்திபூபதி, காயற்பட்டணச் சீதக்காதி முதலியோர்மீதும் பல தனிநிலைக்கவிகள் பாடினவர். தொண்டைமண்டல சதகம், வேளூர்க்கலம்பகம் முதலிய பிரபந்தங்களும் பாடினவர்.

சிவகாமியம்மையார்.

வேல்கொடுத் தாய்திருச் செந்தூரர்க் கம்மியின் மீதுவைக்கக்
கால்கொடுத் தாய்நின் மணவாள னுக்குக் கவுணியர்க்குப்
பால்கொடுத் தாய்மத வேளுக்கு மூவர் பயப்படச்செங்
கோல்கொடுத் தாயன்னை யேயெனக் கேதுங் கொடுத்திலையே.

இரகுநாதசேதுபதி.

மூவேந் தருமற்றுச் சங்கமும் போய்ப்பதின் மூன்ருெடெட்டுக்
கோவேந் தருமற்று மற்ருெரு வேந்தன் கொடையுமற்றுப்
பாவேந்தர் காற்றி லிலவம்பஞ் சாகப் பறக்கையிலே
தேவேந்த்ர தாருவொத் தாய்ரகு நாத செயதுங்கனே.

காளத்திபூபதி.

பெற்ருெ ளொருபிள்ளை யென்மனை யாட்டியப் பிள்ளைக்குப்பால்
பற்ருது கஞ்சி குடிக்குந் தரமல்லப் பாலிரக்கச்
சிற்ருளு மில்லையிவ் வெல்லா வருத்தமுந் தீரவொரு
கற்ரு தரவல்லை யோவல்லை மாநகர்க் காளத்தியே.

சீதக்காதி.

காய்ந்து சிவந்தது சூரிய காந்தி கலவியிலே
தோய்ந்து சிவந்தது மின்னுர் நெடுங்கண்க டொல்பலநூல்
ஆய்ந்து சிவந்தது பாவாணர் நெஞ்ச மநுதினமும்
ஈந்து சிவந்தது வேள்சீதக் காதி யிருகரமே.

தமிழினிரப்பு.

அடகெடுவாய் பலதொழிலு மிருக்கக் கல்வி
அதிகமென்றே கற்றுவிட்டே மறிவில் லாமல்
திடமுளமோ கனமாடக் கழைக்கூத் தாடச்
செப்படிவித் தைகளாடத் தெரிந்தோ மில்லைத்
தடமுலைவே சையராகப் பிறந்தோ மில்லைச்
சனியான தமிழைவிட்டுத் தைய லார்தம்
இடமிருந்து தூதுசென்று பிழைத்தோ மில்லை
என்னசென்ம மெடுத்துலகி லிரக்கின் ருேமே.

---

## பரஞ்சோதிமுனிவர்.

இவரூர் சோழமண்டலத்துள்ள வேதாரணியம். குலம் அபி டேகத்தர்குலம். சமயம் சைவம். காலம் ஏறக்குறைய இற்றைக்கு என்னூற்றைம்பது வருடங்களுக்குமுன் என்பர். இவர் வட மொழி தென்மொழிகளிலுள்ள பலவகை நூல்களையுங் கற்றவர். வேதாரணியமான்மியத்தையும், ஆலாசியமான்மியத்தையுந் தமிழிற் பெயர்த்து முறையே வேதாரணியபுராணம் எனவும், திருவிளையாடற்புராணம் எனவும் செய்யுள் வடிவமாகச் செய்தவர். திருவிளையாடற்புராணம் சிவஸ்தல யாத்திரையிற் சென்று மதுரையில் வசிக்கும்போது பெரியோர் சிலர் விரும்பியவாறு பாடிச் சோமசுந்தரக் கடவுள் முன்னிலையிலே அறுகாற்பீடமீதிருந்து அரங்கேற்றியது. இவையன்றித் திருவிளையாடற் போற்றிக்கலிவெண்பா, மதுரைப் பதிற்றுப்பத்தந்தாதி என்பவைகளுஞ் செய்தவர் என்பர்.

### வேதாரணியபுராணம்.

வேத நாயகனே போற்றி விண்ணவர் தலைவா போற்றி
மாதொரு பாகா போற்றி மறுசம யங்கண் மாளப்
பேதகஞ் செய்வாய் போற்றி பிஞ்ஞகா போற்றி யான்செய்
பாதக மனைத்துந் தீர்க்கும் பராபரா போற்றி போற்றி.

### திருவிளையாடற்புராணம்.

காதவே லன்ன கண்ணார் கங்கைநீர் சுமந்த தேதக்
கோதுமி னென்றார் நம்பா லுண்பலி யேற்க வென்றான்
ஏதுபோ லிருந்த தைய னிசைத்தசெப் பென்றா ரீசன்
கோதறு வமுதன் னீர்நங் கொங்கைபோ லிருந்த தென்றான்.

இது வளையல்விற்கச் சென்ற சோமசுந்தரக் கடவுளுக்கும் வீதியில்வந்த மகளிர்க்கும் நிகழ்ந்த சல்லாபம். இங்கே கங்கை, செப்பு என்பன சிலேடை. கங்கை - ஒருநதி, கம் - தலையோடு. கை - கரம். செப்பு - வார்த்தை, செப்பு என்னுஞ் சிமிழ். இவ்விரு பொருள்களுள்ளே மகளிர் முதலாம் பொருள்களைக் கருதியே வினவினர். கடவுள் இரண்டாம் பொருளைச் சுட்டியே விடை கூறினர். இதனை அலங்காரகாரர் வக்கிரோக்தி என்பர். தார்க்கிகர் சலஞ்சாதித்தல் என்பர். சலஞ்சாதித்தல் ஒரு கருத்துப்பற்றிக் கூறிய சொற்கு மற்றொருபொருள் படைத்துக்கொண்டு நகுதல். பின் வருவதும் இது.

கறுத்ததை யெவன்கொ லைய கந்தா மென்றார் வேளை
வெறுத்தவன் மாரி பெய்தற் கென்றனன் விழியால் வேலை
ஒறுத்தவர் யாவ தென்றீ ருத்தா மென்றார் கூற்றைச்
செறுத்தவன் றென்பா னின்று நோக்கினுற் றெரிவ தென்றான்.

இங்கே கந்தாம், உத்தரம் என்பன சிலேடை. கந்தரம் - கழுத்து, மேகம். உத்தாம் - மறுமொழி, வடக்கு.

---

## பரணர்.

இவர் கடைச்சங்கப்புலவர்களுள் ஒருவர். கபிலர்க்கு நண்பர். சூடாமணிநிகண்டிற் சொல்லப்பட்ட ஓரி, ஆஅய் என்னும் வள்ளல்களையும், சேரசோழபாண்டியர்களையும் வேறுசிலரையும் உறையூர் வேங்கைமலை முதலியவைகளையும் வியந்துபாடினவர். அகநானூறு, புறநானூறு, நற்றிணை, குறுந்தொகை, பதிற்றுப் பத்து என்னுந் தொகைநிலைகளில் வருஞ் செய்யுள்களுள்ளே பல செய்யுள் பாடினவர். திருக்குறட்கும் பாயிரம் பாடினவர்.

குறுந்தொகை.

இல்லோ னின்பங் காமுற் றாஅங்
கரிது வேட்டனையா னெஞ்சே காதலி
நல்ல ளாகுத லறிந்தாங்
கரிய ளாகுத லறியா தோயே.

---

## பரிமேலழகர்.

இவரூர் தொண்டைமண்டலத்துள்ள காஞ்சிபுரம். "காஞ்சிவாழ் பரிமேலழகன்—வள்ளுவனார்க்கு வழிகாட்டினான் றொண்டைமண்டலமே" என்பது தொண்டைமண்டலசதகம். குலம் வேதியர் குலம். சமயம் வைணவம் என்பர். இவர் வடமொழி தென்மொழி களிலுள்ள பலவகைநூல்களையுங் கற்றவர். திருக்குறட்கும் பரிபாடற்கும் உரைசெய்தவர். திருக்குறளுரை மற்றை உரைகளெல்லாவற்றுள்ளும் மிக்கது. கொற்றங்குடியார், சிவஞானமுனிவர் முதலிய அருட்புலமையாளர்களும் வியந்தது. திருக்குறளுரையிலே தருக்கம், வியாகரணம், சாங்கியம், யோகம் முதலிய வடநூற் பொருள்களையும், சங்கநூன் முதலிய சான்றோர் நூற்பொருள்களையுஞ் சான்றாகக் கூறுவர்.

இவரை வேறுசிலர் "கோளில்பொறியில்" என்னுங் கவியுரை கொண்டும், மெய்யுணர்வு, அவாவறுத்தல் என்னும் அதிகாரங்களில் வருஞ் சில கவிகளினுரைகொண்டும் சைவர் என்பர். வித்துவான் ரா. இராகவையங்கார் வைஷ்ணவர் என்பதற்கு "நீணிலங் கடந்தோன் ருடொழுமரபிற்—பரிமேலழக னுரிமையி னுணர்ந்தே" என்னும் பரிபாடற் பாயிரபாகத்தையும், பின்வரும் வெண்பாவையுஞ் செந்தமிழ்ப்பத்திரிகையிற் காட்டுவர்.

வெண்பா.

விரும்பி யருணில வெற்பிமயக் குன்றின்
வரும்பரிசு புள்ளூரு மாலே—சுரும்பு
வரிபாட வின்சீர் வளர்துளவத் தோளாய்
பரிபாட வின்சீர்ப் பயன்.

---

## பவணந்திமுனிவர்.

இவரூர் தொண்டைமண்டலத்துள்ள சனகாபுரம். குலம் வேதியர்குலம் என்பர். சமயம் ஆருகதம். காலம் இற்றைக்கு எழுநூறுவருடங்களுக்குமுன் என்பர். இவர் வடமொழி தென்மொழி என்னும் இருமொழிநூல்களையுங் கற்றவர். அருங்கலை விநோதன் அமராபரணன் திருவேகம்பமுடையான் சீயகங்கன் என்னுஞ் சிற்றரசன் விரும்பியவாறு முன்னூல் வழியே நன்னூல் என்னும் இலக்கணஞ் செய்தவர். இந் நன்னூல் பாணிநீய வியாகரணம்போலச் சில்வகை யெழுத்திற் பல்வகைப் பொருள்சொலுந் திட்பநுட்பத்தாற் சிறந்தது. இதனருமை பெருமைகளைப் பாராட்டி "முன்னூலொழியப் பின்னூல்பலவினுள் நன்னூலார்தமக்கு எந்நூலாரும் இணையோ என்னுந் துணிவேமன்னுக" என்று இலக்கணக்கொத்து நூலார் கூறுவர். இது மயிலைநாதர் ஆண்டிப்புலவர் முதலிய பலருரையுடையது.

---

## பாண்டித்துரைத்தேவர்.

இவர் நகரம் இராமநாதபுரம். குலம் சேதுபதியரசர்குலம். சமயம் சைவம். காலம் இற்றைக்கு நான்குவருடங்களுக்குமுன். இலக்கிய லக்கணங்களும் சித்தாந்தமும் பிறவும் நன்கு கற்றவர். இலக்கியலக்கணங்களைப் பலர்க்குக் கற்பித்தவர். கற்றவர்க்கெல்லாம் நற்றுணையாளர். புலவர்பாடும் புகழாளர். "தேடினர்யாவரே

கொலெழுவகையாலுஞ்சீர்த்தி" என்புழிக் கூறப்பட்ட நூல்செய்தலாலும், அதற்கினமாகிய நூல் செய்வித்தலாலும், பழந்தமிழ்ப் பரிபாலனத்தாலும் பெரும்புகழ்தேடிய பிரபுதிலகர்.

சிவஞானசுவாமிகளிரட்டைமணிமாலை, இராசராசேசுவரிபதிகம், சைவமஞ்சரி, பன்னூற்றிரட்டு முதலிய நூல்களும், பல தனிநிலைக்கவிகளுஞ் செய்தவர். செந்தமிழ்ப்பஞ்சிகையினுஞ் செந்தமிழ் வளர்ச்சிக்குரிய சில விடயங்கள் எழுதினவர். பலரையும் ஏவி எழுதுவித்தவர். தணிகைப்புராணச் சிலேடைக்கவிகளுக்கும் பொருள் எழுதினவர். திருக்குறளைப்பற்றிய சில கதைகளும் எழுதினவர்.

பழந்தமிழ்நூல்களைப் பரிசோதித்தச்சிடலிற் சிறந்துவிளங்கும் மகாமகோபாத்தியாயர் சாமிநாதையர் வெண்பாமாலை முதலிய சில நூல்கள் அச்சிடற்குந் துணைபுரிந்தவர். வேறுசிலர் வேறு சிலநூல்கள் அச்சிடற்குந் துணைபுரிந்தவர். நமக்குந் தண்டியலங்காரவுரை அச்சிடப் பெருந்தொகை உதவிப் பெருந்துணை புரிந்தவர். இவருடைய தமிழ்ப்பரிபாலனம் முதலியவைகளைத் தண்டியலங்காரமுகவுரையினுஞ் சைவமஞ்சரிப் பாயிரத்திலுங் கூறினும். இவர் பெருமை புலப்பட அவைகளுள்ளும் சில காட்டுதும்.

தண்டியலங்காரமுகவுரை.

"பாலவனத்தம் ஜமீந்தார் என்றும், மதுரைத் தமிழ்ச்சங்கத் தலைவர் என்றும், தலைமைப்புலவர் என்றும், செந்தமிழ்க்கலாவிநோதர் என்றும், செந்தமிழ்ப்பரிபாலகர் என்றும், பிரபுசிகாமணி என்றுஞ் சொல்லப்படும் ஸ்ரீமான். பாண்டித்துரைத்தேவர் என்போம். மூவேந்தரும் போய் முச்சங்கமும் போய்ப் பாவேந்தருங் குறைந்து பழைய நூலுரைகளும் மறைந்து படிப்பாருமின்றிக் கேட்பாருமின்றித் தமிழ்க்கல்வி மழுங்கிவரும் இக்காலத்திலே மதுரைமாநகரில் வித்துவசங்கங் கூட்டியும், அருந்தமிழ் நூல்களை ஈட்டியும், படித்து வல்லராவார்க்குப் பரிசில் கொடுத்தும், செந்தமிழ் என்னும் மாசிக வாசிக பத்திரிகையை வெளிப்பட விடுத்தும் பிரபுசிகாமணியவர்கள் பலவாறுகச் செய்து வருஞ் செந்தமிழ்ப் பரிபாலனச் செயல்களுள் இத் தண்டியலங்காரவுரையையும் ஒன்ருக மதிப்பார்கள் என்பது நமது கருத்து."

சைவமஞ்சரிப்பாயிரம்.

திக்குலவும் புகழாளன் பிரபுகுல சிகாமணியாய்ச் சிறந்த சீலன்
அக்கிரகண் ணியன்பொன்னு சாமியெனு நரபால னருளும் பாலன்
நக்கனடி யவர்பாலன் பேறுளத்தன் வெண்ணீறு நண்ணும் பாலன்
தக்கபொரு ணிலவுகலை விநோதனுயர் சற்சங்க சனனு கூலன்.

பூதேவன் புகலியர்கோன் முதலறிஞர் தமிழ்நூலின்பொருள்களுள்ள
மீதேவன் புறமருவப் பதித்தேவன் ரேவனெனும் வெளிறுநீங்கி
நீதேவ னெனக்கொண்டு நிலத்தேவன் பகைகடந்து நெறிநின்றீசன்
மாதேவன் பதத்தேவன் மகிழ்பாண்டித்துரைத்தேவ மன்னன்மாதோ.

பூதேவன் - பிராமணன். உள்ளமீதே வன்புற பதித்து ஏவன் தேவன். வெளிறு - வெள்ளறிவு. நிலத்தே வன்பகை. மாதேவன் பதத்து ஏவல். இனித் திருக்குறளைப்பற்றிய கதைகளையுஞ் சுருக்கி எடுத்துக் காட்டுவோம்.

## புலவரிருவர்.

புலவரொருவர் பொதிசோறுங்கொண்டு தூரமான ஒரூருக்குப் போயினர். இடைவழியில் ஒருகுளமும் மரநிழலும் எதிர்ப்படக் கண்டு மரநிழலிலே பொதிசோற்றை வைத்துவிட்டுக் குளத்திலே முழுகி வழிபாடும் முடித்துப் பசிமிகுதியாற் பொதிசோற்றை அவிழ்த்தார். அவிழ்த்தலை நெடுவழி நடந்த களைப்பினால் அங்கேதங்கி முழுகி வழிபாடும் முடித்துப் பசியோடிருந்த வேறொரு புலவர் கண்டு சிறிதிரந்துண்ண எண்ணி "அவிற்கு நீரென் றிரப்பினு நாவிற் கிரவி னிழிவந்த தில்" என்னுங் குறளை நினைத்து நேரே கேட்டு வாங்க நாணித் தமது கருத்தை,

விருந்து புறத்ததாத் தானுண்டல் சாவா
மருந்தெனினும் வேண்டற்பாற் றன்று.

என்னுங் குறளைச் சொல்லிக் குறிப்பாக அறிவித்தார். பொதிசோறவிழ்த்த புலவர் அக்குறிப்பை அறிந்து உண்ணுமளவன்றி அதிகமின்மையாற் கவலையுற்றுப் பிரித்துண்டால் இருவர்பசியும் நீங்காதே என்பதுங் கருதி ஒருசோற்றவிழை மாத்திரம் எடுத்து அவர் காத்திலே விழ எறிந்து,

தினைத்துணை நன்றி செயினும் பனைத்துணையாக்
கொள்வர் பயன்றெரி வார்.

என்னுங் குறளையுஞ் சொன்னார். இருகுறளும் ஒன்றினொன்று வலிதாயிருத்தலை இருவரும் நோக்கிப் பின்னர் ஒருவரை ஒருவர் அளவளாவி நண்பூண்டனர்.

## பொய்சொல்லாமை.

திருடன் ஒருவன் நெடுவழியிலே நின்று போக்குவரவு செய்வோர் வைத்திருக்கும் பொருளைப் பறித்துச் சீவனஞ் செய்துவந்தான். ஒருநாள் அவ்வழியில் ஒரு சந்நியாசியும் வந்தான். திருடன் அடித்துப் பறிக்க ஆரம்பித்தான். சந்நியாசி "இது காஷாய

மூட்டை உனக்கேன்?" எனத் தடுத்து "வயிறுவளர்த்தற்குப் பல தொழிலிருக்கவும் பாவத்தொழிலை என் செய்கின்றாய்?" என அவன் இத்தொழில் செய்யாமல் என் பெண்டு பிள்ளைகளைப் பேணமுடியாது என்றான். சந்நியாசி "களவுசெய்தாலும் பொய் ஒருகாலுஞ் சொல்லாதே; அதனால் அதிக லாபம் வரும்" என்றுசொல்லிப்

பொய்யாமை பொய்யாமை யாற்றி னறம்பிற
செய்யாமை செய்யாமை நன்று.

என்ற குறளின் பொருளையும் அறிவுறுத்திப் போயினன். அதனைத் திருடனுந் தலைமேற்கொண்டு அற்பமும் பொய்பேசாமல் வந்தான். ஒருநாளிரவு நகரிசோதித்துவரும் அரசன் களவுக்குப் போன திருடனை வழியிற் கண்டுபேசி அவன் வாயால் உண்மை அறிந்து "எனக்கும் பங்கு; யானுங் கூடவருகிறேன்" என்று கூட்டிக்கொண்டுபோய்த் தனது திரவியசாலையுட் புகும் வழியையுங் காட்டிவிட்டு வெளியிலே நின்றான். திருடன் புகுந்து விலையுயர்ந்தனவாயிருந்த மூன்று இரத்தினங்களுள்ளே இரண்டுமாத்திரம் எடுத்துக்கொண்டு வெளியில் வந்து ஒன்றை அரசனுக்குக் கொடுத்துவிட்டு ஒன்றைத் தான் கொண்டுபோனான். மறுநாள் அரசன் கட்டளைப்படி களவுபோன பொருள்களைப் பரிசோதித்து வந்த மந்திரி எஞ்சிய ஒன்றையுந் தான் எடுத்துக்கொண்டு மூன்று இரத்தினமுங் களவுபோயின என்றான். அரசன் விசாரணைசெய்து பொய்கூறிய மந்திரியை விலக்கி உண்மைகூறிய திருடனையே மந்திரியாக்கி நன்குமதித்தான்.

இரட்டைமணிமாலை.

நற்பாலர் வேண்டின் மயிலம்மை யார்தவ நாடகெநூல்
கற்பா னசையிற் சிவஞான தேவன் கலையுணர்க
சொற்பா லறத்துற வுன்னிலன் ஞனிற் றுறக்கவிப்பா
ரிற்போகம் வேண்டிற் சிவயோக மேவிரைந் தெய்துகவே.

---

## பிங்கலர்.

இவர் பிங்கலம் என்னும் நிகண்டுநூல் செய்தவர். பவணந்தி முனிவர்க்கும், மண்டலபுருடர்க்கும் முந்தியவர். பிங்கலநிகண்டு இராமாயணம், பாரதம் முதலியவற்றில் வரும் துமிதம் புள்ளிமலை, பெருக்காளர் முதலிய அருஞ்சொற்கள் பலவற்றின் பொருள்களையும் பிறவற்றையும் அறிவிப்பது.

இராமாயணம்.

குமுத னிட்ட குலவரை கூத்தரிற்
றிமித மிட்டுத் திரியுந் திரைக்கடல்
துமித மூர்புக வானவர் துள்ளினர்
அமுத மின்னு மெழுமெனு மாசையால்.

இக்கவியைச் சோழன்சவையிற் கம்பர் பிரசங்கிக்கும்போது துமி என்பதற்குத் துளி என்று பொருள் கூறற்குப் பிரமாணம் யாது என வினவிய ஒட்டக்கூத்தர்க்கு "மோர்த்துமிதெறிக்கப் போகின்றது" என இடைக்குலக் கிழவி கூறியதைக் கம்பர் பிரமாணமாகக் காட்டினர் என்பர். துமிதம் என்பது பிங்கலம்போல இங்குங் கொள்ளக் கிடந்தலின் அது பொருந்தும் வகை அரிது.

---

## பீதாம்பரப்புலவர்.

இவரூர் யாழ்ப்பாணத்துள்ள நீர்வேலி. குலம் வேளாளர் குலம். சமயம் சைவம். காலம் சேனாதிராயமுதலியார் காலம். இவர் சேனாதிராயமுதலியார்க்கு மாணவகர். இலக்கியலக்கணங் கற்றவர். கவிபாடுந் திறமுடையவர். மறைசைக்கலம்பகம், நீர்வைவெண்பா, மறைசைத்திருப்புகழ் முதலிய நூல்கள் செய்தவர்.

மறைசைக்கலம்பகம்.

மேவுமலை மானை விழைவோ டிடம்வைத்து
வாவுமலை மானைமுடி வைத்தவா—காவகமேல்
வந்துவழங் கும்மறைசை வானவா வாழ்த்தெனக்கு
வந்துவழங் குன்றுண் மலர்.

மலைமான் - உமாதேவி. வாவும் அலைமான் - கங்கை. வந்து - காற்று. மறைசை - வேதாரணியம்.

---

## புகழேந்திப்புலவர்.

இவரூர் தொண்டைமண்டலத்துள்ள பொன்களத்தூர். குலம் வேளாளர் குலம். சமயம் வைஷ்ணவம். காலம் ஒட்டக்கூத்தர் காலம். வெண்பா இயற்றும் பண்பான் மிக்கவர். "வெண்பாவிற் புகழேந்தி" என்னும் புனைந்துரையும் பெற்றவர். வரகுணபாண்டியன் சவைப்புலவராயும் வசித்தவர். படிக்காசுப்புலவராற் "பாட்டாலுயர்ந்தபுகழேந்தி" எனப்பட்டவர். நளவெண்பா, இரத்தினச்

சுருக்கம் முதலிய தொகைநிலைச் செய்யுள்களும், பல தனிநிலைச்செ ய்யுள்களும் பாடினவர். வாணிதாசருடன் வாதுகொண்டும் பாடி னவர். தற்கோலி என்ற சந்தவிருத்தத்தால் அவரை வென்றவர் என்றுங் கூறுவர்.

நளவெண்பா.

க. மல்லிகையே வெண்சங்கா வண்டே வான்கருப்பு
வில்லி கணைதெரிந்து மெய்காப்ப—முல்லையெனும்
மென்மாலை தோளசைய மெல்ல நடந்ததே
புன்மாலை யந்திப் பொழுது.

உ. வையம் பகலிழப்ப வான மொளியிழப்பப்
பொய்கையு நீள்கழியும் புள்ளிழப்பப்—பையவே
மென்மாலை தோளசைய மெல்ல நடந்ததே
புன்மாலை யந்திப் பொழுது.

ஙு. பொன்னுடைய ரேனும் புகழுடைய ரேனுமற்
றென்னுடைய ரேனு முடையரோ—இன்னடிசிற்
புக்களையுந் தாமரைக்கைப் பூநாறுஞ் செய்யவாய்
மக்களையிங் கில்லா தவர்.

சந்தவிருத்தம்.

தற்கோ லிப்பூ சற்பா சத்தே தப்பா மற்சா கைக்கே நிற்பீர்
முற்கோ லிக்கோ லிப்பூ சித்தே முட்டா மற்சே வித்தே நிற்பீர்
வற்று நெட்டோ டைப்பா ரைச்சேன் மைப்பூ கத்தே நித்தா விப்போய்
நெற்று ளுற்று லைப்பா கிற்சேர் நெய்த்தா னத்தா னைத்யா னித்தே.

தொண்டைமண்டலசதகம்.

நூலார் கலைவல்ல செம்பியன் கேட்க நுனித்துமிக்க
கோலா கலனெட்டக் கூத்தனை யன்றுதற் கோலியென்று
மேலார் கவிசொல்லி நெய்த்தானத் தேசென்று வென்றுகொண்ட
மாலார் களந்தைப் புகழேந்தி யுந்தொண்டை மண்டலமே.

---

## புத்தமித்திரர்.

இவரூர் தொண்டைமண்டலத்துள்ள பொன்பற்றியூர். சமயம் பௌத்தம். காலம் ஏறக்குறைய இற்றைக்கு ஆயிரத்தைந்நூறு வருடங்களுக்கு முன் என்பர். இவர் ஒரு சிற்றரசர். இடையிடை வடமொழி விதிகளையுங் கூட்டி எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி என்னும் ஐந்திலக்கணங்களையும் வேறுவேறு காட்டி

வீரசோழன் என்னும் பேரரசன் பெயரை நாட்டி. வீரசோழியம் என்னும் பேரிலக்கணஞ் செய்தவர். திகழ்+தசக்கரம்=திகடசக்கரம் என வரும் புணர்ச்சிவிதி முதலிய அரிய விதிகள் பல இதிலே காணப்படும். பெருந்தேவனாருரையுடையது. செய்யுள் கட்டளைக்கலித்துறை.

வீரசோழியம்.

நாமே வெழுத்துச்சொ னற்பொருள் யாப்பலங் காரமெனும்
பாமேவு பஞ்ச வதிகார மாம்பரப் பைச்சுருக்கித்
தேமே வியதொக்கற் றேர்வீர சோழன் றிருப்பெயராற்
பூமே லுரைப்பன் வடநூன் மரபும் புகன்றுகொண்டே.

---

## பூதன்றேவனார்.

இவர் மதுரைக் கடைச்சங்கப் புலவர்களுள் ஒருவர்; ஈழத்துப் பூதன்றேவனார் எனவும் சொல்லப்படுவர். கடைச்சங்க காலத்திலே நமது ஈழமண்டலத்திலிருந்து பாண்டிமண்டலம்போய் மதுரைச்சங்கத்திலும் புலவராய் நிலவினர்போலும். ஈழத்துப் பூதன்றேவனார் என்னும் பெயர் நற்றிணையிலுங் குறுந்தொகையிலும் கவிகளின் முகப்பில் வரையப்பட்டிருக்கின்றது. இவர் நற்றிணை, குறுந்தொகை, அகநானூறு என்னுந் தொகைநூல்களிற் சில சில கவிகள் பாடியிருக்கின்றார். இவராற் பாடப்பட்டன பாலையுங் குறிஞ்சியும்.

குறுந்தொகை.

நினையாய் வாழி தோழி நனைகவுள்
அண்ணல் யானை யணிமுகம் பாய்ந்தென
மிகுவ லிரும்புலிப் பகுவா யேற்றை
வெண்கோடு செம்மறுக் கொளீஇய விடர்முகை
கோடை யொற்றிய கருங்கால் வேங்கை
வாடு பூஞ்சினையிற் கிடக்கும்
உயர்வரை நாட னெடுபெயரு மாறே.

---

## பெருந்தேவனார்.

பெருந்தேவனார் என்னும் பெயருடைப் புலவர் பலர். இங்கே கூறப்படும் புலவர் பாரதம்பாடிய பெருந்தேவனார். இவர் நாடு

"பாரதம்பாடும் பெருந்தேவர்வாழும் பழம்பதிகாண் *** தொண்டைமண்டலமே" என்று படிக்காசுப்புலவர் கூறுவர். இவர் புறநானூறு, குறுந்தொகை முதலிய தொகைநிலைச் செய்யுள்களில் வருங் கடவுட்பாட்டுக்கள் பாடினவர். புறநானூற்றிற் சிவபிரானுக்கு வணக்கங் கூறுவர். குறுந்தொகையில் முருகவேளுக்கு வணக்கங் கூறுவர். நற்றிணையிலே நாராயணமூர்த்திக்கு வணக்கங் கூறுவர்; வெண்பாவும் அகவலும் உரைப்பாட்டுமாகப் பாரதகதையைப் பாடினவர். கடைச்சங்கப்புலவருள் ஒருவர்.

நற்றிணை.

மாநிலஞ் சேவடி யாகத் தூநீர்
வளைநரல் பௌவ முடுக்கை யாக
விசும்பு மெய்யாகத் திசைகை யாகப்
பசுங்கதிர் மதியமொடு சுடர்கண் ணாக
இயன்ற வெல்லாம் பயின்றகத் தடக்கிய
வேத முதல்வ னென்ப
தீதற விளங்கிய திகிரி யோனே.

பாரதவெண்பா.

இந்நோய் நமக்குண்டென் றெண்ணாதே யெவ்வுயிரும்
முன்னேவக் கொன்றுண்ணு மூர்க்கர்தாம்—எந்நோவும்
பண்ணப் படுநரகிற் பாவிகளிற் பாவிகளென்
றெண்ணப் படுவ ரிசைந்து.

---

## பெரும்பற்றப்புலியூர் நம்பி.

இவரூர் பாண்டிமண்டலத்துள்ள செல்லிநகர் என்பர். குலம் வேதியர்குலம். சமயம் சைவம். இவர் இலக்கியலக்கணங்கள் நன்கு கற்றவர். பழைய திருவிளையாடல் எனப்படுந் திருவாலவாயுடையார் திருவிளையாடல் என்னும் பிரபந்தஞ் செய்தவர். இதன்கண் "கருதிடின் வலவை மாவலி கங்கை கம்பளை கல்லணை யென்னும் - சமனொளிசூழ் நதிகள்" என இலங்கையினுள்ள நதிகளையும் சமனொளி என்னும் மலையையுங் கூறுவர்.

திருவிளையாடல்

ஓது பாலர் மழலை யுரையையும்
தாதை தாயர் தயாவுறக் கேட்டெனப்
பேதை யேன்புன் மொழிபெரு மான்புகழ்
ஆத லானல் லறிஞர் வியப்பரே.

---

## பெருவாயின்முள்ளியார்.

இவரூர் பாண்டிமண்டலத்துள்ள கயத்தூர். சமயம் சைவம். காலம் கடைச்சங்க காலம். இவர் ஆசாரக்கோவை என்னும் பிரபந்தஞ் செய்தவர். இதன்கண் காலை மாலைகளிற் செய்யவேண்டிய முறையும், பெரியோர்முன்னிலை, போசனபந்தி, பிரயாணம், வழி, திவசம், விவாகம், திருவிழா முதலியனவற்றிற் செய்யவேண்டிய முறையும், பிறவும் குறள்வெண்பா, சிந்தியல்வெண்பா முதலிய வெண்பாக்களில் அமைத்துக் கோவை செய்யப்பட்டிருக்கின்றன. ஆசாரம் - ஒழுக்கம். ஒழுக்கம் - நடக்குமுறை. கோவை - கோத்தது.

ஆசாரக்கோவை.

கல்யாணந் தேவர் பிதிர்விழா வேள்வியென்
றைவகை நாளு மிகழா தறஞ்செய்க
பெய்க விருந்திற்குங் கூழ்.

பயணத்தடை.

எழுச்சிக்கட் பிற்கூவார் தும்மார் வழுக்கியும்
எங்குப்போ கின்றீரோ வென்னரே—முன்புக்
கெதிர்முக மாகநின் றுரையா ரிருசார்வுங்
கொள்வர் குரவர் வலம்.

---

## பொய்யாமொழிப்புலவர்.

இவரூர் தொண்டைமண்டலத்துள்ள செங்காட்டக் கோட்டத்துறையூர் என்பர். சமயம் சைவம். காலம் இற்றைக்கு ஆயிரம் வருடங்களுக்கு முன் என்பர். இவர் வரகவி. பல தனிநிலைக் கவிகளும், தஞ்சைவாணன்கோவை என்னும் பிரபந்தமுஞ் செய்தவர். தஞ்சைவாணனுவான் பாண்டிமண்டலத்திலே தஞ்சாக்கூரிலே பாண்டியர்க்கு மந்திரியும் படைத்தலைவனுமாயிருந்த ஒரு வேளாளப் பிரபு. தஞ்சை - தஞ்சாக்கூர்.

இந்த வாணன்கோவை இவர் பாண்டிமண்டலஞ் சென்று சஞ்சரித்தபோது பாடியது. பாண்டிமண்டல வழியிலே ஒரு பாலைவனத்தருகிலே முருகவேள் ஒரு வேடனாய் நின்று பயமுறுத்தி "என்பெயர் முட்டை என வைத்து இப்பாலைவனத்தையுஞ் சுட்டி நற்றுயிரங்கலாக ஒன்று பாடுக" என ஒருவெண்பாப் பாடினவர். அது சுவையில்லை என்று தம்பெயர் வைத்து முருகவேள்பாடிய வெண்பாவும் பெற்றவர்.

போய்யாமோழிபாடியது.

பொன்போலுங் கள்ளிப் பொறிபறக்குங் கானலிலே
என்பேதை செல்லற் கியைந்தனளே—மின்போலும்
மானவேன் முட்டைக்கு மாறாய தெவ்வர்போங்
கானவேன் முட்டைக்குங் காடு.

முருகவேள்பாடியது.

விழுந்ததுளி யந்தரத்தே வேமென்றும் வீழின்
எழுந்து சுடர்சுடுமென் றேங்கிச்—செழுங்கொண்டல்
பெய்யாத கானகத்தே பெய்வளையும் போயினாள்
பொய்யா மொழிப்பகைஞர் போல்.

கள்ளிப் பொறி பறக்குங் காட்டிலே வேலமரத்தின் முள் வெந்தெரியாமற் கிடந்து தைக்கும்வகை எப்படி? என முருகவேள் இவர்கவியில் வினவினார் எனவுங் கூறுவர். இச்சம்பவத்தை அருணகிரிநாதர் "முற்பட்ட முரட்டுப் புலவனை - முட்டைப் பெயர் செப்பிக் கவிபெறு பெருமாளே" என்பர். படிக்காசுப்புலவர் "சையாறி ரண்டுடைக் காளைதன் வாயிற் கவிதை கொண்ட - பொய்யா மொழி" என்பர்.

இவர் சோழமண்டலஞ்சென்று சோழராசன்மீதுஞ் சீனக்க வள்ளன்மீதும் வேறுசிலர்மீதும் கவிபாடினவர் என்பர்.

வாணன்கோவை.

தண்பட்ட மேவும் வயற்றஞ்சை வாணன் றமிழ்ச்சிலம்பிற்
பண்பட்ட தேமொழிப் பாவையன் னீர்பனை பட்டகையும்
மண்பட்ட கோடு மதம்பட்ட வாயும் வடிக்கணைதோய்
புண்பட்ட மேனியு மாய்வந்த தோவொரு போர்க்களிறே.

---

## பொன்னம்பலப்பிள்ளை.

இவரூர் யாழ்ப்பாணத்துள்ள நல்லூர். குலம் வேளாளர் குலம். சமயம் சைவம். காலம் இற்றைக்குப் பத்தொன்பது வருடங்களுக்குமுன். இவர் ஆறுமுகநாவலர்க்கு மருகரும் மாணவருமாவர். இளம்பூரணம் நச்சினார்க்கினியம் முதலிய உரைகளோடு தொல்காப்பியம் முதலிய இலக்கணங்களையும், சிந்தாமணி, சிலப்பதிகாரம், கந்தபுராணம், இராமாயணம், முதலிய இலக்கியங்களையும் பலமுறை ஆராய்ந்து கற்றவர். அவைகளைப் பலமாணவர்க்குங்

கற்பித்தவர். பரிமேலழகருரையை ஒருபோதும் மறவாதவர். பாரதத்தில் ஆதிபருவத்துக்கும், மயூரகிரிப்புராணத்துக்கும் உரை செய்தவர்.

கந்தபுராணம் முதலிய சில புராணங்களுக்கும், இராமாயணத்துக்கும் அறிஞர் பலர் கூடிய சவையிலே பதவுரையும் விரிவுரையும் பிழையறக் கூறிப் பிரசங்கஞ் செய்யும் வன்மையினாலும், இராகத்தோடமைந்த இனிய மிடற்றிசையாலும் பலரும் பாராட்டப் பெற்றவர். வித்துவசிரோமணி என யாவராலும் புகழப்பட்டவர். இராமாயணப் பொருளுணர்ச்சியில் இணையில்லாதவர்.

வெண்பா.

செஞ்சடிலன் வெண்ணீற்றன் சிற்றம் பலமுதல்வன்
மஞ்சடையுங் கண்ட னடிமறவா—நெஞ்சுடைய
ஆறுமுக வையற்கே யாட்செய்யப் பெற்றனம்யாம்
வேற்றங்கள் வேண்டுமோ மேல்.

---

மாவைப்

## பொன்னம்பலப்பிள்ளை.

இவரூர் யாழ்ப்பாணத்துள்ள மாவிட்டபுரம். குலம் வேளாளர் குலம். சமயம் சைவம். காலம் இற்றைக்கு இருபத்தைந்து வருடங்களுக்கு முன் என்பர். மாவையந்தாதி, சித்திரகவி முதலிய பிரபந்தங்கள் செய்தவர். மாவையந்தாதி மாலைபோலவரும் யமகாவலியுடையது. யமகாவலி - யமகவரிசை.

மாவையந்தாதி.

மாவைய மாவைய முப்புரஞ் செற்றவர் மைந்ததரு
மாவைய மாவைய தாழ்க்கிற் கடிகை வரைநிலைக்கு
மாவைய மாவைய மன்கொள வூன்று மலிசரிக்கா
மாவைய மாவைய வீதோநா னென்று வருந்தினனே.

---

## மண்டலபுருடர்.

இவரூர் தொண்டைமண்டலத்துள்ள பெருமண்டூர் எனப்படும் வீரபுரம் என்பர். "வீங்குநீர்ப்பழனஞ்சூழ்ந்த வீரைமண்டலவன்" என இவர் தாமுங் கூறுவர். வீரை என்பது வீரபுரம் என்பதன் மரூஉ. சமயம் ஆருகதம். காலம் கிருஷ்ணதேவராயர் காலம். இவர் சூடாமணி என்னும் நிகண்டு செய்தவர். சூடாமணி

கிகண்டிலே சிறப்புப்பாயிரமுந் தாமே கூறுவர். பல வடசொற்களுக்குந் தமிழ்ச்சொற்களுக்கும் பொருள் கூறுவர். முதலிருதொகுதியும் சொற்களுக்குப் பொருள்கூறி அச்சிட்டிருக்கின்றும்.

---

## மணவாளதாசர்.

இவரூர் சோழமண்டலத்துள்ள திருமங்கையூர். குலம் வேதியர்குலம். சமயம் வைஷ்ணவம். காலம் ஏறக்குறைய இற்றைக்கு முந்நூறு வருடங்களுக்கு முன்னர் என்பர். வேறுங் கூறுவர். இவர் பிள்ளைப்பெருமாளையங்கார் எனவுஞ் சொல்லப்படுவர். பெரும்பாலுஞ் சிறீரங்கத்தில் வசித்தவர். விட்டுணுபத்தியிலும் ஆழ்வார்பத்தியிலும் மிக்கவர். தொல்காப்பியம் முதலிய இலக்கணங்களையுஞ் சங்கச்சான்றோரிலக்கியங்களையும், வேதம், வேதாங்கம் முதலிய நூல்களையும் நன்கு கற்றவர். சொல்லும், பொருளுந், தொடையும், நடையுஞ் சுவைபெற அமைத்துக் கவிபாடுந் திறமுடையவர். சொற்கள் இலகுவிற்பிரிந்து பொருள்படுமாறு திருக்கு, மடக்குச், சிலேடைகள் பாடுந் திறமுமுடையவர்.

திருவரங்கயமகவந்தாதி, திருவரங்கக்கலம்பகம், திருவேங்கடமாலை, திருவேங்கடத்திரிபந்தாதி, அழகாந்தாதி, எதிராசசரந்தாதி முதலிய பல பிரபந்தங்களுஞ் செய்தவர்.

### திருவரங்கயமகவந்தாதி.

தருக்கா வலாவென்று புல்லரைப் பாடித் தனவிலைமா
தருக்கா வலாய்மயி லேகுயி லேயென்று தாமசராய்த்
தருக்கா வலாநெறிக் கேதிரி வீர்கவி சாற்றுமின்பத்
தருக்கா வலாயுதன் பின்றோன் றரங்கர்பொற் றளிணைக்கே.

தரு - கற்பகதருவே. விலைமாதருக்கு ஆவலாய் - பொதுப்பெண்களை விரும்பி. தருக்கா அலா நெறிக்கு - செருக்குற்றுத் தீயவழியிலே. பத்தருக்கா - அடியார்பொருட்டு. அலாயுதன் - பலராமன்.

### திருவரங்கக்கலம்பகம்.

தேனமருஞ் சோலைத் திருவரங்க ரெப்பொருளும்
ஆனவர்தா மாண்பெ ணலியலர்கா ணம்மானை
ஆனவர்தா மாண்பெ ணலியலரே யாமாகிற்
சானகியைக் கொள்வரோ தாரமா யம்மானை
தாரமாய்க் கொண்டதுமோர் சாபத்தா லம்மானை.

சானகி - சீதை. சாபம் - சபிப்பு, வில்லு.

திருவேங்கடமாலை.

நாலு திசைமுகமு நன்னுதலா லொண்கமல
மேலுறலால் வேதாவாம் வேங்கடமே—சாலுறையும்
மண்மயக்கந் தேற்றுவித்தான் மாற்றுதல்போ லாரியனால்
உண்மயக்கந் தேற்றுவித்தா னூர்.

கமலம் - தாமரை, நீர். சால் - ஒருவகைப் பாத்திரம். மண் மயம் கம் - மண்ணொடுகலந்த நீர். தேற்றுவித்து - தேற்றாங் கொட்டை. உள் மயக்கம் - மனமயக்கம். தேற்றுவித்தல் - தெளிவித்தல்.

இம்மணவாளதாசரும், எல்லப்பநாவலரும் ஒரேகாலத்தவர் என்றும், மணவாளதாசர் தாம் பாடிய திருவரங்கக்கலம்பகத்தை எல்லப்பநாவலர் பார்க்கும்படி அனுப்பினர் என்றும், எல்லப்ப நாவலர் அதனைப்பார்த்தபின் தாமும் அருணைக்கலம்பகம் என ஒரு கலம்பகம்பாடி அதனை மணவாளதாசர் பார்க்க அனுப்பினர் என்றும், எல்லப்பநாவலர் தேவி திருவரங்கக்கலம்பகத்திலே "வாடி யோடவனசமன்னன்" என்னுங் கவியில் வரும் சிவநிந்தையை நோக்கி அதற்கு மாறாகக் "கருடனோட" என ஒரு கவிபாடிச் சிவ பரத்துவங் கூறினர் என்றும் சில கூறுவர். வேறு கதைகளுங் கூறுவர்.

திருவரங்கக்கலம்பகம்.

வாடியோட வனசமன்ன னிருகண்வெள்ள மருவிபோன்
　　மருவியோட மதனன்வாளி யருவியோட வாடையூ
டாடியோட வன்றிலோசை செவியிலோட்ட வண்டுழாய்
　　ஆசையோடு மெங்கள்பேதை யாவியோட விதியோ
மோடியோட வங்கிவெப்பு மங்கியோட வைங்கரன்
　　முடுகியோட முருகனோட முக்கணீசன் மக்களைத்
தேடியோட வாணனாயிரம்புயங்கள் குருதிநீர்
　　சிந்தியோட நேமிதொட்ட திருவரங்க ராசரே.

நாவலர்தேவிபாட்டு.

கருடனோட மற்சமாமை கமலமோட முற்கரங்
　　காட்டிலோட மூன்றிராமற் கண்டமட்டி லோடவே
மருளிவந்த சிங்கமோட வாமனென்பு பாறவே
　　வஞ்சமுள்ள கண்ணனோட மாரனீறச் சேனனும்
இருளினோடு முண்டகத்த னேங்கியோட வென்றவர்க்
　　கிறைவனுக் குயிரளித்த வேந்தல்யாவன் வேதமே
அருளுமந்த முதல்வன்யாவ னருணைகண்டு வாழ்மினோ
　　ஆகாதி மூலமென்ப தறிகிலாத மாக்களே.

---

## மயில்வாகனப்புலவர்.

இவரூர் யாழ்ப்பாணத்துள்ள மாதகல். குலம் "பரராசசேகரன்பேர்நிருவி - மெய்யாகநல்ல கலைத்தமிழ்நூல்கள் விரித்துரைத்த - வையாவின் கோத்திரம்" என்பர். சமயம் சைவம். காலம் ஏறக்குறைய நூறு வருடங்களுக்கு முன் என்பர். இவர் கூழங்கைத் தம்பிரானுக்கு மாணவகர் என்றுங் கூறுவர். இலக்கியலக்கணங் கற்றவர். புலியூர்யமகவந்தாதி, யாழ்ப்பாணவைபவம் முதலிய நூல்கள் செய்தவர். புலியூர்யமகவந்தாதி உரையாசிரியர் வேற்பிள்ளையுரையுடையது. யாழ்ப்பாணவைபவம் வசனவடிவம்.

புலியூர்யமகவந்தாதி.

பாயசங் கண்டு பரியாக்கி யத்தபத் தர்க்கினிய
பாயசங் கண்டு நிகர்புலி யூர பகையைவெல்லு
பாயசங் கண்டு கரத்தாற் கரியவ பாழ்வினைக்குப்
பாயசங் கண்டொட ராதெனை யாள்க பராபரனே.

பாய் அசம் - பாய்கின்ற ஆடு. பரி - வாகனம். பாயசம் - பாற்சோறு. கண்டு - கற்கண்டு. வெல் உபாய - வெல்லும் உபாயமுடையவரே. சங்கு அண்டு கரத்தாற்கு - விட்டுணுவுக்கு. குப்பாயம் - சட்டை. சம் - பிறப்பு.

---

## மருதனிளநாகனூர்.

இவரூர் பாண்டிமண்டலத்திலுள்ள மதுரை. சமயம் சைவம். காலம் கடைச்சங்ககாலம். இவர் புறநானூறு, அகநானூறு, நற்றிணை, குறுந்தொகை என்னுந் தொகைநிலைகளிலே சிலசில கவிகள் பாடினவர். இறையனாரகப்பொருளுக்கு உரையும் ஒன்றுசெய்தவர். புறநானூற்றுச்செய்யுள் ஒன்றிலே சிவபிரானுடைய திரிபுரதகனத்தையும், திருச்செந்தூரையும் வியந்து பாடினவர்.

குறுந்தொகை.

அம்ம வாழி தோழி யாவதுந்
தவறெனிற் றவறோ விலவே வெஞ்சுரத்
துலந்த வம்பல ருவவிடு பதுக்கை
நெடுநல் யானைக் கிடுநீ ராகும்
அரிய கானஞ் சென்றோர்க்
கெளிய வாகிய தடமென் றோளே.

---

## மறைஞானசம்பந்தர்.

இவருடைய வாசஸ்தானம் சிதம்பரம். நிலை துறவு. வடமொழி தென்மொழி என்னும் இருமொழியினும் வல்லவர். சைவாகமங்களையுஞ் சித்தாந்த சாத்திரங்களையும் தேவாரம் முதலியவைகளையும் நன்குணர்ந்தவர். ஆகமசாரங்களை எடுத்துத் தமிழிற் பெயர்த்துப் பல நூல்செய்தவர். அந்நூல்கள் சிவதருமோத்தரம், சைவசமயநெறி, சங்கற்பநிராகரணம்முதலியன. இவரும் வேறே. சந்தானகுரவராகிய மறைஞானசம்பந்தரும் வேறே என்பர். இவை ஒருவர் சொன்னவை.

### சிவதருமோத்தரம்.

ஆதி நாத னமல னரன்திருப்
பாத முன்னினர் பாவம் பயிற்றினும்
வேத னார கக்குழி வீழ்வரோ
நாத ரேயவ னிக்கவர் நாடினே.

## மாங்குடிமருதனார்.

இவர் மாங்குடி கிழார் எனவும் படுவர். பாண்டியன் நெடுஞ்செழியனுக்கு நிலையாமை அறிவுறுத்தற்பொருட்டுப் பாடிய மதுரைக்காஞ்சிபற்றிக் காஞ்சிப்புலவர் எனவும் படுவர். இவரூர் சோழமண்டலத்துள்ள மாங்குடி என்றும், குலம் வேளாளர்குலம் என்றும் கூறுவர். காலம் கடைச்சங்ககாலம். இவர் நெடுஞ்செழியனவைக்களப்புலவராயும் இருந்தவர். இவர் பாடிய மதுரைக்காஞ்சி ஏறக்குறைய எண்ணூறடிகளுடையது. அகநானூறு, புறநானூறு, நற்றிணை முதலிய தொகைநிலைகளினுஞ் சில கவிகள் பாடினவர். எழினியாதனையும் பரிசில்வேண்டிப் பாடினவர். "ஓங்கிய சிறப்பினுயர்ந்த கேள்வி—மாங்குடி மருதன்" எனப் புறநானூற்றிற் பாடவும்பட்டவர்.

### குறுந்தொகை.

பொன்னே ராவிரைப் புதுமலர் மிடைந்த
பன்னூன் மாலைப் பனைபடு கலிமாப்
பூண்மணி கறங்க வேறி நாணடப்
பழிபட ருண்ணோய் வழிவழி சிறப்ப
இந்நாள் செய்த திதுவென முன்னின்

றவன்பழி நவலு மிவ்வூர்
ஆக்குணர்ந் தமையினி ரேகுமா றளனே.

---

## மாமூலனர்.

இவர் கடைச்சங்கப்புலவருள் ஒருவர். வேதியர்குலத்தினர். தொல்காப்பியவுரையிலே "யோகிகளாய் உபாயங்களால் முக்காலமு முணர்ந்த மாமூலர் முதலியோர்" என நச்சினர்க்கினியராற் புகழப்பட்டவர். பாரதப்போரிற் சோறளித்த பெருஞ்சேரலாதன் கொடை, சிற்றரசனகிய நன்னன்வேண்மான் கொடை முதலியவை களையும், துளுநாடு, குட்டநாடு முதலியவைகளையும் அகநானூற் றிலே தாம் பாடிய கவிகளிற் புகழ்ந்தவர். நற்றிணை குறுந்தொகை களினுஞ் சில கவிகள் பாடினவர். வள்ளுவமாலையினும் ஒன்று பாடினவர்.

வள்ளுவர்மாலை.

அறம்பொரு ளின்பம்வீ டென்னுமந் நான்கின்
திறந்தெரிந்து செப்பிய தேவை—மறந்தேயும்
வள்ளுவனென் பானேர் பேதை யவன்வாய்ச்சொற்
கொள்ளா ரறிவுடை யார்.

---

## மாரிமுத்துப்பிள்ளை.

இவரூர் சிதம்பரத்துக்குச் சமீபமான தில்லைவிடங்கம். குலம் வேளாளர்குலம். சமயம் சைவம். காலம் இற்றைக்கு நூற்று முப் பது வருடங்களுக்கு முன் என்பர். இவர் புலியூர்வெண்பா, சிதம்ப ரேசர்விறலிவிடுதூது முதலிய பிரபந்தங்கள் செய்தவர். புலியூர் வெண்பாவிலே திருக்கு, மடக்கு, சிலேடை முதலியவற்றால் இரு பத்தைந்து ஒருவகையாக நான்குவகை கூறுவர். "ஐயைந் தொரு வயண மையைந்தொருவயணம்—ஐயைந் தொருவயணமாம்" என்பர்.

புலியூர்வெண்பா.

பொன்னா ருந்தில்லைப் புலியூர்வெண் பாவுக்குப்
பன்னாளு மேத்திப் பணிகுவாம்—நன்னாரி
கக்குஞ் சரப்பூங் கடுக்கையோ னின்றகப்ப
கக்குஞ் சரப்பூங் கழல்.

நல் நாரி - நல்ல தேன். சரம் - மாலை. கடுக்கை - கொன்றை. குஞ்சரம் - யானை. கழல் - பாதம்.

---

## மீனாட்சிசுந்தரக்கவிராயர்.

இவரூர் பாண்டிமண்டலத்துள்ள முகவூர். சமயம் சைவம். காலம் ஏறக்குறைய இற்றைக்கு இருபது வருடங்களுக்கு முன் என்பர். இவர் எட்டயபுர சமஸ்தானப்புலவராயும் இருந்தவர். எட்டயபுர சம்ஸ்தானபதியாகிய "இராஜ ஜகத்வீர ராமகுமார எட்டப்ப மகாராச அவர்கள்" வேண்டுகோளின்படி மொழிபெயர்க்கப் பட்ட குவலாயனந்தம் என்னும் அலங்காரத்துக்குஉதாரணகவிகள் பாடினவர். வேறும் பல பிரபந்தங்கள் பாடினவர் என்பர்.

குவலாயனந்தம்.

காகமே கத்துகரீ கத்துமுன்மே லென்னகுற்றம்
கோகிலமோ டுன்னையுமே கூர்மதர—மாகியதோர்
மாவினிடைச் சேர்த்திடுநோல் வத்திரத்தோன் றன்னையல
வாவிசழ வேண்டு வது.

---

## மீனாட்சிசுந்தரம்பிள்ளை.

இவரூர் சோழமண்டலத்துள்ள திரிசிரபுரம். குலம் வேளாளர்குலம். சமயம் சைவம். காலம் ஏறக்குறைய இற்றைக்கு முப்பத்தைந்து வருடங்களுக்கு முன் என்பர். இவர் திருவாவடுதுறையாதினத்திற் சிறந்த வித்துவானாய் இருந்தவர். தொல்காப்பியம், நன்னூல் முதலிய இலக்கணங்களும் சங்கச்சான்றோரிலக்கியங்களும் மற்றைச் சான்றோரிலக்கியங்களும் சைவசித்தாந்த சாத்திரங்களும் பிறவுங் கற்றுத் தெளிந்தவர். தியாகராசச்செட்டியார், மகாமகோபாத்தியாயர் சாமிநாதையர் முதலிய பற்பல மாணவகர்களைக் கல்விவிற்பனர்களாக்கி நல்லாசிரியராய் அமர்ந்தவர். பாக்களையும், பாவினங்களையும்நோக்கமையப்பாடும் நுண்மையிற் சிறந்தவர். திருக்கு, சிலேடை மடக்கு முதலிய அருங்கவிபாடும் வன்மையும் அமைந்தவர். சித்திர கவி பாடுந் திறமும் இயைந்தவர். கவிகளில் அமைக்கும் சொல், பொருள், தொடை, அணி முதலியவற்றின் நயங்களெல்லாம் நன்கறிந்தவர். பாடற்சிறப்பு "ஆயிரங்கர வானன் பொறிக்கினும்" அமைவதொன்றன்று.

தேசிகர்வணக்கமுஞ் சிறப்புப்பாயிரமும் பிறவுமாகப் பல தனிநிலைக்கவிகளும், புராணம், அந்தாதி, கலம்பகம், பிள்ளைத்தமிழ், கோவை, மாலை என்னும் பிரபந்தவகைகள் ஒவ்வொன்றிலும் பற்பல

பிரபந்தங்களும் பிறவும் பாடினவர். அவையெல்லாந் தனித்தனி உரைக்கப்புகின் மிகப் பரக்கும். சிலசில உரைத்து முதலிய என்பத னால் அடக்கி முடித்தும்.

புராணங்கள் நாகைக்காரோணபுராணம், பெருந்துறைப்புரா ணம், தியாகராசலீலை முதலியன. அந்தாதி தில்லையமகவந்தாதி, துறைசையமகவந்தாதி முதலியன. கலம்பகம் வாட்போக்கிக்கலம்ப கம், துறைசைக்கலம்பகம் முதலியன. பிள்ளைத்தமிழ் அகிலாண்ட நாயகிபிள்ளைத்தமிழ், சேக்கிழார்பிள்ளைத்தமிழ் முதலியன. கோவை சீகாழிக்கோவை, குளத்தூர்க்கோவை முதலியன. மாலை சுப்பிரம ணியதேசிகர்மாலை, சித்திரசத்திரப்புகழ்ச்சிமாலை முதலியன.

பெருங்காப்பியங்களிலே பெறுமாறு சில புராணங்களிலே மலை, கடல், நாடு, நகர் முதலியவற்றின் வருணனைகளைப் பெரிதும் அமை ப்பர். அவற்றொடு சில புராணங்களிலே சைவாகமத்தின் கிரியா காண்டப்பொருள்களாகிய நித்தியகருமவிதிகளையும், ஞானகாண் டப்பொருள்களாகிய கடவுளிலக்கணம் முதலியவைகளையுங் கூறு வர். நாகைக்காரோணபுராணத்திலே கோமூத்திரி, கூடசதுர்த்தம் முதலிய சித்திரகவிகள் கூறுவர். தில்லையந்தாதி, துறைசையந்தாதி முதலியவைகளிலே சில கவிகளில் ஐந்தாஞ்சீர்வரையும் யமகம் வரக் கூறுவர். குடந்தையந்தாதி முதலியவைகளிலே அங்ஙனந் திருக்கும் வரக் கூறுவர். வாட்போக்கிக்கலம்பகம் முதலியவைகளிலே பலவகை மடக்கு முதலியன வரக் கூறுவர். குமாரகுருபரசுவாமிசரிதத்திலே வாதிகள் கூறும் பக்கமும், சுவாமிகூறும் மறுப்புஞ் சிறப்புறக் கூறுவர்.

தியாகராசலீலை.

பெருகலை யருட்கொப் பாக்கிப் பிங்கலை யிடை மாற்றிக்கால்
கருகலை யுருதெ ழுப்பிக் கருங்கலை நிகர்த் திருப்பார்
ஒருகலை யிடக்கை வானத் தொளிர்கலை முடிவைத் தார்வாய்
வருகலை யனைத்து மோர்ந்தார் வற்கலை யுடுத்த மேலார்.

வாட்போக்கிக்கலம்பகம்.

எம்மா தவரு மிறைஞ்சுஞ் சடாடவியார்
செம்மா மணிவான் சிலம்பர்கா ணம்மானை
செம்மா மணிவான் சிலம்பரெனி னுய்கர்பொருள்
அம்மா விரும்புவர்நா ணற்றவரோ வம்மானை
ஆசை யுடையார்நா ணரியரே யம்மானை.

---

## முத்துக்குமாரகவிராசர்.

இவரூர் யாழ்ப்பாணத்துள்ள சுன்னாகம். குலம் வேளாளர் குலம். சமயம் சைவம். காலம் ஏறக்குறைய இற்றைக்கு எழுபத்தைந்து வருடங்களுக்கு முன். இவர் உடுவில் அம்பலவாணர்க்குப் புத்திரர். சுப்பிரமணியருக்குப் பௌத்திரர். சந்திரசேகரமாப்பாணர்க்குப் பிரபவுத்திரர். நமது தாதைதன்றாதைக்குச் சியேட்டர். அங்கிலதிராவிட பண்டிதராயிருந்த தாமோதரம்பிள்ளைக்குத் தமிழாசிரியர். அவரச்சிட்ட வீரசோழியம் முதலிய நூல்களின் பதிப்புரைகளில் அவர் கூறிய குருவணக்கம் பெற்றவர்.

### இலக்கணவிளக்கப்பதிப்புரை.

இங்க டங்கிய செஞ்சடை முடியினன் திருத்தாட்
பங்க யங்கயி லாயநா தனைமுனிப் பழிச்சிச்
சங்க மங்களத் தமிழ்முத் துக் குமாரன்றன் மலர்ப்பா
தங்கள் வங்கமாத் தமிழ்க்கட லிடைப்படி குவனே.

சொல்லும் பொருளுஞ் சுவைபடவைத்து நல்லிசையமையக் கவிபாடும் பெருமையிற் சிறந்தவர். திருக்கு, மடக்கு, சிலேடைகளும் பாட வல்லவர். பல தனிநிலைக்கவிகளும், ஞானக்கும்மி, யேசுமதபரிகாரம், ஐயனாரூஞ்சல், நடராசர்பதிகம் முதலிய பிரபந்தங்களும் பாடினவர். தனிநிலைக்கவிகளுள்ளே மாவைக்கடவுண்மீதும், நல்லைக்கடவுண்மீதும், சுன்னைச் சந்திரசேகரவிநாயகர்மீதும், ஐயனார்மீதும் பாடிய துதிகளும் பிறவுமாக இருபத்தைந்து கவிகள் அரிதிற்பெற்றுச் சிலவற்றிற்கு உரையுங்கூறி முத்தகபஞ்சவிஞ்சதி என்னும் பெயருமிட்டு அச்சிட்டிருக்கின்றாம். நடராசர்பதிகம் அகப்பட்டிலது.

### கட்டளைக்கலித்துறை.

வாட்டானை யன்னமை திட்டா விழிமிளிர் மான்மகளைத்
தாட்டானை யாளுக்கு வேட்டானை யன்பர் சஞ்சலங்கள்
மீட்டானை யென்கவி கேட்டானைச் சுன்னையின் மேவுநரை
மாட்டா னருளொரு கோட்டானை நாளும் வணங்குவனே.

### கட்டளைக்கலிப்பா.

முடிவி லாதுறை சுன்னகத் தான்வழி
முந்தித் தாவடிக் கொக்குவின் மீதுவந்
தடைய வோர்பெண் கொடிகாமத் தானசைத்
தானைக் கோட்டை வெளிசட் டைவிட்டான்

உடுவி லான்வரப் பன்ருலை யான்மிக
உருத்த னன்கடம் புற்றமல் லாகத்துத்
தடைவி டாதனை யென்று பலாலிசன்
சார வந்தன ளோரிள வாலையே.

இது நாமாந்தரிதை என்னும் பிரகேளிகை. நாமாந்தரிதையாவது கருதிய பொருள்களை வேறுநாமங்களிலே மறைத்துவைப்பது. பிரகேளிகை கருதிய பொருளை மறைத்துக் கூறும் பாட்டு. இங்கே வேறுநாமங்களாய் நின்றவை சுன்ருகம், தாவடி, கொக்குவில், கொடிகாமம், ஆனைக்கோட்டை, கட்டுடை, உடுவில், பன்ருலை, மல்லாகம், பலாலி, இளவாலை என்னும் ஊர்ப்பெயர்கள். சுன்ருகம் - வெள்ளிமலை. சுல் - வெள்ளி. வழி - மகன். கொக்கு - குதிரை. உடுவிலான் - சந்திரன். ஆலையான் - மன்மதன். ஆகம் - சரீரம். பலாலி - பலதுளி.

கட்டளைக்கலிப்பா.

பன்னி ரண்டு கரகந் தனையெட்டுப்
பானை யைத்துண் டதரக் குயவனை
முன்னி ரண்டு குடங்கையி லேந்திய
முட்டி முட்டிமல் லாய்மாவைச் சாடியைப்
பொன்னி ரண்டு பெறும்பெருஞ் செட்டியைப்
போற்று வீர்புல வீர்சக ரந்தனை
முன்னர் வைத்த கலசம்பத் தும்பெறீஇ
முதன்மை சால்பெரு வாழ்வுறன் மெய்ம்மையே.

இதுவும் நாமாந்தரிதை. நாமங்கள் கரகம், பானை, குடம், முட்டி, சாடி, கலசம், சால் என்னும் பாத்திரப் பெயர்கள். கரகந்தனை - கையையுடைய முருகவேளை. எள் துப்பு ஆனையை (முறையேயொத்த) துண்டம், அதரம், குபம், அனை. துப்பு - பவளம். துண்டம் - மூக்கு. குபம் - தனம். அனை - அன்னை. குடங்கை - உள்ளங்கை. சாடி - சாடினவன். சகரம் என்னும் எழுத்தை முன்வைத்த கலசம்பத்து - சகலசம்பத்து.

மடக்குக்கவி, சிலேடைக்கவி முதலியவைகளை முத்தகபஞ்சவிஞ்சதியிற் காண்க.

---

## முத்துராசர்.

இவரூர் சோழமண்டலத்துள்ள உறையூர். சமயம் சைவம். தந்தையார் செந்தியப்பர். இவர் சிங்கையாரியச்சக்கரவர்த்தி இங்கே

வந்து நல்லூரிலே தங்கி அரசியல் நடாத்திய வரலாற்றையும், அவன் கைலாசநாதர்கோவில் முதலிய சைவாலயங்கள் தாபித்த வரலாற்றையுஞ் சோழமண்டலம் முதலிய மண்டலங்களிலிருந்து பலரை யாழ்ப்பாணத்திற் கொண்டுவந்து குடியேற்றிய வரலாற்றையும் பிற வற்றையுங் கலிவெண்பாவில் அமைத்துக் கைலாயமாலை என்னும் பிரபந்தஞ் செய்தவர். குடியேற்றப்பட்டவருட் சிலர்க்குப் பேரும், முன்னிருந்த ஊரும் இங்கே இருத்திய ஊரும் பிறவுங் கூறுவர். இங்கே இருந்த ஊர் முதலிய கூறிச் சிலரை நாமுங் காட்டுதும்.

க. நல்லூர். புவனேகவாகு. மதுரைவேதியர். "இலகிய சகாத்த மெண்ணூற் றெழுபதா மாண்டதெல்லை—அலர்பொலிமாலை மார்ப னும் புவனேகவாகு—நலமிகும் யாழ்ப்பாணத்து நகரிகட்டுவித்து நல்லைக்—குலவிய கந்தவேட்குக் கோவிலும் புரிவித்தானே" என்ப தும் இக்கைலாயமாலையிற் கண்டது.

உ. திருநெல்வேலி. பாண்டிமழவன், அவன் தம்பி, செண்பக மழவன், அவன் தம்பி. இவர்கள் பொன்பற்றியூர் வேளாளர்.

ங. மயிலிட்டி. நரசிங்கதேவன். காவிரியூர் வேளாளன்.

ச. தெல்லிப்பழை. செண்பகமாப்பாணன், சந்திரசேகரமாப் பாணன். இவர்கள் வாலிநகர் வேளாளர். பூப்பாணன், கனகராயன். இவர்கள் காயல்நகர வசியர்.

ரு. இணுவில். பேராயிரவன். இவன் கோவலூர் வேளாளன். இவனை "ஆதிக்க வேளாளன்" என்பர்.

சு. பச்சிலைப்பளி. நீலகண்டன், அவன் தம்பியர் நால்வர். இவ ர்கள் கச்சூர் வேளாளர்.

எ. புலோலி. கனகமழவன். அவன் தம்பியர் நால்வர். இவர்கள் சிகரிமாநகர வேளாளர்.

அ. தொல்புரம். கூபகாரேந்திரன், நரங்குதேவன். இவர்கள் கூபகநாட்டு வேளாளர்.

கூ. கோவிலாக்கண்டி. தேவராசேந்திரன். இவன் புல்லூர் வே ளாளன்.

க0. இருபாலை. மண்ணுடுகொண்டமுதலி. இவன் சோழமண் டல வேளாளன். இவனைக் "கம்ப னுரைத்த கவியோ ரெழுபதுக் குஞ்—செம்பொ னபிஷேகஞ் செயுங்குலத்தான்" என்பர்.

கக. நெடுந்தீவு. தனிநாயகன். இவன் சேயூர் வேளாளன். இவனை "இனியொருவரொவ்வா விருகுலமுந் தூய்யன்" என்பர்.

---

## முதலாழ்வார் மூவர்.

ஆழ்வார் யாவர்க்கும் முன்னர்த்தோன்றிய முறையினாலும், முதலிற் பிரபந்தஞ்செய்த முறையினாலும் பொய்கையாழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார் என்னும் மூவரையும் முதலாழ்வார் என்பர். மூவரும் துறவுநிலையிலும், விட்டுணுபத்தியிலும், தலயாத்திரையிலும், அறிவிலும் மிக்கவர் என்றுங் கூறுவர்.

### க. பொய்கையாழ்வார்.

இவரூர் தொண்டைமண்டலத்துள்ள காஞ்சிபுரம். அவதாரம் பாஞ்சசன்னியம் என்னும் சங்கின் அவதாரம். பொற்றாமரைப் பொய்கையிலே தோன்றியகாரணத்தாற் பொய்கையாழ்வார் எனப்பட்டவர். முதலாந் திருவந்தாதி பாடினவர்.

### உ. பூதத்தாழ்வார்.

இவரூர் தொண்டைமண்டலத்துள்ள கீழைக்கடற்கரையிலிருக்குந் திருக்கடன்மல்லை எனப்படும் மாவலிபுரம். அவதாரம் கௌமோதகி என்னுந் தண்டாயுதத்தின் அவதாரம். உளனுந்தன்மை அறிதலாற் பூதத்தாழ்வார் எனப்பட்டவர் என்பர். இரண்டாந் திருவந்தாதி பாடினவர்.

### ங. பேயாழ்வார்.

இவரூர் தொண்டைமண்டலத்துள்ள மயிலாப்பூர். அவதாரம் நாந்தகம் என்னும் வாட்படையின் அவதாரம். விட்டுணுவிற் பத்தி மிக்குத் தொழுதல், சிரித்தல், அழுதல், ஆடுதல், பாடுதன் முதலிய தொழில்களை இயற்றிப் பேய்பிடித்தவர்போன்றுதிரிதலாற் பேயாழ்வார் எனப்பட்டவர். மூன்றாந் திருவந்தாதி பாடினவர்.

இம்மூவரும் ஒருவரை ஒருவர் அறியாமலே தேசசஞ்சாரஞ் செய்துவரும்நாள்களிலே ஒருநாளிரவு பொய்கையாழ்வார் நடுநாட்டினுள்ள திருக்கோவலூரிற்போய் ஒருவர் வீட்டின் இடைகழியிலே படுத்திருந்தார். அப்பொழுது பூதத்தாழ்வாரும் அங்கே வந்துநின்றார். நிற்றலைக்கண்டு "இவ்விடம் ஒருவர் படுக்கலாம் இருவர் இருக்கலாம்" என்றார். பின்னர் இருவரும் அளவளாவி இருக்

கும்போது பேயாழ்வாரும் அங்கே வந்தார். வந்த பேயாழ்வாரை இருவருங் கண்டு "இவ்விடம் ஒருவர் படுக்கலாம். இருவர் இருக்கலாம். மூவர் நிற்கலாம்" என்றனர். பின்னர் மூவருங்கூடி நின்றுகொண்டே நாராயணமூர்த்தியின் குணங்களை ஒருவர்க்கொருவர் சொல்லியுங் கேட்டுங் களித்து மகிழ்ந்தனர்.

அப்பொழுது நாராயணமூர்த்தி மழையையும் இருளையும் அதிகம் மிகும்படிசெய்து தாமும் பெருவடிவந்தாங்கி அவர்களுட் புகுந்து மிகவும் நெருக்கினர். மூவரும் "இப்பொழுது நெருக்கம் மிகுத்தவாறு என்னை?" என்று ஐயுற்றனர். பொய்கையாழ்வார் பூமி தகழியாகக் கடல் நெய்யாகச் சூரிய விளக்கை ஏற்றினர். பூதத்தாழ்வார் அன்பு தகழியாக ஆர்வம் நெய்யாக நெக்குருகும் நெஞ்சு திரியாக ஞானவிளக்கை ஏற்றினர். இவ்விரு விளக்கினாலும் இருளறப் பேயாழ்வார் பெருமானைக் கண்டமை கூறினர். மூவரும் பெருமானைத் தரிசித்து மகிழ்ந்தனர். பாடலுங் கூறினர்.

### பொய்கையாழ்வார்பாடல்.

வையந் தகழியா வார்கடலே நெய்யாக
வெய்ய கதிரோன் விளக்காகச்—செய்ய
சுடராழி யானடிக்கே சூட்டினேன் சொன்மாலை
இடராழி நீங்குகவே யென்று.

### பூதத்தாழ்வார்பாடல்.

அன்பே தகழியா வார்வமே நெய்யாக
இன்புருகு சிந்தை யிடுதிரியா—நன்புருகி
ஞானச் சுடர்விளக் கேற்றினேன் நாரணற்கு
ஞானத் தமிழ்புரிந்த நான்.

### பேயாழ்வார்பாடல்.

திருக்கண்டேன் பொன்மேனி கண்டேன் திகழும்
அருக்க னணிநிறமுங் கண்டேன்—செருக்கிளரும்
பொன்னாழி கண்டேன் புரிசங்கம் கைக்கண்டேன்
என்னாழி வண்ணன்பா லின்று.

இச்சம்பவத்தைப் பாரதபாயிரகாரர் சுருக்கியமைத்து நாட்டிலேற்றிப் "பாவருந்தமிழாற் பேர்பெறுபனுவற் பாவலர் பாதிநாளிரவில்—மூவரு நெருக்கி மொழிவிளக்கேற்றி முகுந்தனைத் தொழுத நன்னாடு" என்பர்.

சோழன் செங்கணனிட்ட சிறையினின்றுஞ் சேரன்கணைக்கா லிரும்பொறையை மீட்டற்குக் களவழிநாற்பது என்னும் பிரபந்தம் பாடினவர் எனக்கொண்டு கலிங்கத்துப்பரணியிலே "களவழிக் கவிதை பொய்கையுரை செய்யவுதியன்—கால்வழித்தளையை வெட் டியரசிட்ட பரிசும்" என்புழிக் கூறப்படும் பொய்கையாரும், புற நானூறு முதலியவற்றிற் சிலகவிகளுக்கு ஆக்கியோர் எனப்படும் பொய்கையாரும் மேற்கூறப்பட்ட மூவருள் ஒருவராகிய பொய்கை யாழ்வாரே என அநுமானிப்பாரும் உளர். ஆராய்க.

களவழிநாற்பது.

வெள்ளிவெண் ணாஞ்சிலான் ஞால முழுவனபோல்
எல்லாக் களிறு நிலஞ்சேர்ந்த—பல்வேற்
பணைமுழக்கு போர்த்தானைச் செங்கட் சினமால்
கணைமாரி பெய்த களத்து.

---

## முருகேசபண்டிதர்.

இவரூர் யாழ்ப்பாணத்துள்ள சுன்னாகம். குலம் வேளாளர் குலம். சமயம் சைவம். காலம் இற்றைக்குப் பதினாறு வருடங்களுக்கு முன்.

வெண்பா.

ஆண்டு விகாரிவரு மாவணிமூ வேழு செவ்வாய்
மாண்ட முதற்பிரத மைத்திதிமார்த்—தாண்டனுள்
மூடுபெருங் கீர்த்தி முருகேச பண்டிதனார்
நாடுங் கதிக்குரிய நாள்.

இவர் பூதத்தம்பிக்கு மைந்தர். சுப்பிரமணியருக்குக் கனிட் டர். சிவசம்புப்புலவரிடத்துஞ் சங்கரபண்டிதரிடத்துஞ் சிலசில நூல்கள் கற்றவர். பாரதம், இராமாயணம், சேதுபுராணம் முதலிய இலக்கியங்களும், நன்னூல், அகப்பொருள் முதலிய இலக்கணங்க ளும் நன்கு பயின்றவர். பஞ்சலக்கணமும் வல்லவர். பஞ்சலக்கணப் பயிற்சியை வித்துவான் புன்னைக் கணேசையர் கட்டளைக்கலித்து றையும் புலப்படுத்தும்.

கட்டளைக்கலித்துறை.

எழுத்தொடு சொற்பொருள் யாப்பணி யென்னு மிலக்கணங்கள்
பழுத்துள நாவினன் பாக்களோர் நான்கொடு பாவினங்கள்
வழுத்திடப் பாடு முருகேச பண்டிதன் வாதியெனத்
தொழத்தகு விற்பனன் சென்று பரகதி துன்னினனே.

யாழ்ப்பாணத்திலும் சிதம்பரம், கும்பகோணம், சென்னை, திருப்பற்றூர் முதலிய இடங்களிலுந் தமிழ் உபாத்தியாயராயிருந்தவர். அங்கே பலர்க்குத் தமிழாசிரியர். இங்கே சித்தாந்தப்பிரசாரகர் சரவணமுத்துப்புலவர்க்கும், பல தமிழ்நூலாக்கியோர் முத்துத்தம்பிப்பிள்ளைக்கும், நமக்கும், பிறர்க்குந் தமிழாசிரியர். யாழ்ப்பாணத்திற் கற்பித்த இடங்களைப் பின்வருங் கொச்சகங் காட்டும்.

தரவுகொச்சகம்.

அன்னைநகர் புன்னைநகர் சொல்லியதென் கோவைநகர்
மன்னுசிறுப் பிட்டியளை வெட்டியொடு மல்லாகந்
துன்னியகல் வளைமுதலாந் தொன்னகர்வாழ் மாணவர்க்கு
பன்னுதமிழ் சொன்னவன்மன் முருகேச பண்டிதனே.

பலவகையமகுந் தொடைநயம் முதலியவைகளும் பொருந்த விரைந்து கவிபாடும் பெருந்திறலுமுடையவர். மடக்குச் சிலேடை முதலிய கவிபாடும் வன்மையுமுடையவர்.

கட்டளைக்கலித்துறை.

விரும்பிய வாசு கவிக்கொரு காளமேகமென்பர்
கரும்பியல் பாகப் பொருட்டொடை யாற்கவிக் கம்பனென்பர்
அரும்பொருள் கூறு மறிவிற் பரிமே லழகனென்பர்
வரம்பில சீர்த்தி முருகேச பண்டித வள்ளலையே.

மயிலணிச்சிலேடைவெண்பா, ஊஞ்சல், பதிகம், சந்திரசேகர விநாயகருஞ்சல், குடந்தைவெண்பா, நீதிநூறு, பதார்த்ததீபிகை முதலிய பிரபந்தங்களும், பல தனிநிலைக்கவிகளும் பாடினவர். மயிலணி - சுன்னாகத்தைச் சேர்ந்த ஓரிடம். குடந்தை - கும்பகோணம். பதார்த்ததீபிகை - தர்க்கசங்கிரகமூலத்தைக் கட்டளைக்கலித்துறையில் அமைத்துப் பாடியது.

குடந்தைவெண்பா.

மாமியொடு கூடி மகிழ்ந்து மனைதோறுங்
கோமி யுறையுங் குடந்தையே—ஏமுனையில்
தாரணித் தேரார் தமையெரித்தார் பூமகனார்
தாரணித் தேரார் தலம்.

கோமி - சரசுவதி. ஏ - அம்பு. தார் - கொடிப்படை. தேரார் - பகைவர். பூமகன் - பிரமா. தாரணி - பூமி.

நீதிநூறு.

கள்ளொடு காமங் கடுங்கோபஞ் செய்தகுடி
தள்ளரிய துன்பர் தனில்வீழும்—பிள்ளைகளைப்

பெற்றுவ தென்ன பெரும்பழக்க மன்னவர்க்குக்
கற்பிப்ப ரேயரிது காண்.

விரோதச்சிலேடை.

நெட்டையிலை வைத்திருக்குஞ் செவ்வே ளல்ல
நெடிதோங்கித் தண்டேந்து மாலு மல்ல
கட்டுவா னாரளிக்கும் பிரம னல்ல
கனிவெட்டி யெடுத்தலாற் சுரங்க மல்ல
நட்டவரைத் தனபதியா யிருக்கச் செய்யும்
நன்மையினு னம்வணங்கு மீச னல்ல
சிட்டரெலாங் கொள்ளுமொரு பொருளே யாகுஞ்
செகமறிய விப்பொருளைச் செப்பு வீரே.

இங்கே குறிக்கப்பட்ட பொருள் வாழை. நெட்டையிலை - நெடிய வேலை. நெடிய இலை. வான் ஆர் - ஆகாயம், பூமி. கனி - சுரங்க வஸ்து. நட்டவர் - நண்பர், தாபித்தவர்.

நடுவெழுத்தலங்காரம்.

மைந்தன்விதை மாமிகவர் வழிமீ னென்று
மதனவேள் புறவிதழிவ் வேழின் மீது
வந்தநடு வெழுத்தெனக்குச் செய்தான் மற்றை
வரிகள்பதி னன்கினையுந் தானே கொண்டான்
அந்தநாள் வளைத்துச்சி தரித்துத் தம்மை
அருச்சிக்கு மவர்க்ககற்றி யங்கை யேந்தி
முந்தவதன் கீழிருந்து நடனஞ் செய்து
முனிந்துரித்தான் மயிலணிவாழ் முதல்வன் றானே.

இங்கே நடுவெழுத்தாற் கொள்ளப்பட்ட பொருள் தத்துவரா மற் செய்தான் என்பது. நடுவெழுத்து எடுக்கும்படி கொள்ளப்பட்டசொற்கள் "மைந்தன், விதை" முதலியவற்றுற் பெறப்பட்ட மதலை, வித்து, மாதுலை, கவலை, ஆரால், காமன், புல்லி என்னும் ஏழு சொற்களும் என்க. வரிகள் பதினன்கு—இவைகளிலே நடுவெழுத்து நீங்கிய மற்றை எழுத்துகள். அவற்றை மலை முதலியனவாகக்கொண்டு வளைத்து முதலிய எச்சங்களோடும் முறையே சேர்த்துப் பொருள் அறிக.

இவர் நிரம்பிய புலமையிலார் நூலுரைகளிற் குற்றங்காட்டி வாதஞ் செய்யும் வழக்குமுடையவர். பஞ்சிகைகளிலே வாதவிஷயமாகப் பல கடிதங்கள் வரைந்தவர். நாவலரவர்களையும் பிறரையும் வெல்லக்கருதித் தம்பத்திரிகையிலே சைவவிரோதமும் பிறவுமாகப்

பல விடயங்கள் எழுதிய கந்தோலிக்கு வித்துவான் அருளப்பமுத லியார் செய்த அலங்காரபஞ்சகம் என்னும் நூலிலே குற்றங்காட்டி அலங்காரபஞ்சகசண்டமாருதம் எனக் கண்டனம் ஒன்று வரைந்த வர். ஒன்று காட்டுதும்.

அலங்காரபஞ்சகசண்டமாருதம்.

அரும்பிரா மணத்தினிய கனியுதவு மருங்கொடி
 பருதியம் பரத்தி
இருந்தாரா சாத்தி சழுமொரு நீதியிறைமகள்
 இணையறு மறத்தி
பொருந்தவெஞ் ஞான்று ஞானசக் கிலிச்சிபுல்லனே
 யருள்கான் குறத்தி
மருந்தெனப் புகழு மருத மடுவினில்வதிசெப
 மாலைமா மரியே.

அருங்கொடி இருந்தராசு என்னுந் தொடர்களை அரும்—கொடி, இரும்—தராசு எனப்பிரித்தது ஏன்? இவற்றிற்கு மை இறுதி யாவதன்றி "இனமிகல்" என்பதனுற்ரேற்றிய மகரவொற்றும் இறுதியாகுமா? மணத்தினியகனி என்பதற்கு வாசனையைக்கொ ண்ட இன்பமாகிய கனி என்றுரைத்தவர் மணத்து இனிய எனப் பதம் பிரித்தது என்னை? மணத்து என்னும் வினையெச்சம் வாசனை யைக்கொண்ட என்னும் பெயரெச்சப்பொருளைத் தருமா? இனிய என்பதற்கு இன்பமாகியது எனப் பொருளுரைத்தது என்னை? இனிமைக்கு இன்பம் பிரதிபதமாகுமா? சக்கிலிச்சி என்பதில் இச்சி என்பதற்கு விரும்பி எனப் பொருளுரைக்க ஆன்ரேர் வழக்கும் உண்டா?

இவர் கந்தபுராணசபையில் விருத்தியுரை சொல்ல வல்லவரல் லர் என்று சிலர் சொல்லியதை நோக்கி உரைகூறுவாரை முன்னிலை யாக்கி உரைகூறும் நெறியை அசதியாடி இலங்கைநேச பஞ்சிகை யில் யாம் எழுதிய கடிதத்தையும் இப்பொழுது நூல்களை நிரம்பக் கல்லாது விரிவுமாத்திரம் பாடமாக்கிச் சொல்வார்க்குத் திருத்தஞ் சித்திக்கும்பொருட்டும் கற்பவர்பொருட்டுஞ் சுருக்கிக் காட்டுதும்.

கந்தபுராணவியாக்கியானம்.

கந்தபுராணத்து வள்ளியம்மை திருமணப்படலத்துக்கு விருத் தியுரை பேசும் உரையாசிரியர்களே!

நீவிர் எத்தனையோ பெண்சனங்களும் ஆண்சனங்களும் புரா ணங்கேட்டற்கண் நம்பிக்கையோடும் வந்து உங்கள் வாய்களையே

எதிர்பார்த்திருக்க நீவிர் அவர்களுக்குக் கொஞ்சமும் விளங்காமல் வெளிப்படையான இயற்சொற்களையெல்லாம் திரிசொற்களாகமாற்றிச் சொல்லுகிறீர்கள்! பூ என்பதற்கு வீ என்கிறீர்கள்! மறைந்துபோனார் என்பதற்கு அந்தர்த்தானமாயினர் என்கிறீர்கள்! சித்தியாரிற் சில செய்யுள்களையும் அவற்றின் கடினவாக்கியம் அமைந்த பெரிய வியாக்கியானங்களையும் எடுத்துப் படிக்கிறீர்கள்! சில கவிகளில் வேதாந்த சித்தாந்தப் பிரசங்கமும் நடாத்துகிறீர்கள்!

அதிகாரம், அவாய்நிலை முதலியவற்றால் வேண்டுமிடத்து உரைகளை வருவித்துரைக்கவேண்டும் என்னும் விதியினை அறியாது வாயில் வந்தன வந்தனவற்றை விரித்து அங்ஙனம், இங்ஙனம், என்புழி, இருப்புழி, ஈண்டுவிரிப்பிற் பல்கும். ஆண்டுக் காண்க. என்பன முதலிய இலக்கணச்சொற்களையும் இடையிடைவைத்து நெடுநேரஞ் சொல்லி எக்கவிகளிலும் வித்தியாகம்பீரம் விளக்குகிறீர்கள்! அரியனவும் இன்றியமையாதனவுமாய சில அணிகளை எடுத்துக் கூறுதலே சிறப்பென அறியாது தன்மையணி, உவமையணி, ஒட்டணி, பரவணி முதலிய பல வணிகளையுஞ் சொல்லுகிறீர்கள்! தேமா, புளிமா, கருவிளம் முதலிய யாப்பிலக்கண வாய்பாடுகளையுங் கூறுகிறீர்கள்! அகப்பொருள்விளக்கம், நன்னூல் முதலியவற்றிலே நெட்டுருப்பண்ணிய சூத்திரங்களையும் நெடுநேரம் படிக்கிறீர்கள்!

எத்தனையோ சனங்கள் ஏனிங்கே வந்தோம்? என்று பெருமூச்சுவிட நீவிர் ஒரு மூச்சும்விடாமல் வாணன்கோவையுந் திருக்கோவையும்படிக்கிறீர்கள்! சிலகவிகளில் ஞானக்கருத்துஞ் சொல்லுகிறீர்கள்! வேங்கைமரமாதல், காந்தருவமணஞ்செய்தல் முதலியவற்றிற்கு ஒன்றும்பேசாமல் இங்ஙனம் மணமயர்ந்தது உலகில் இல்லறம் நிகழ்தற்கென்று சொல்லித் "தென்பாலுகந்தாடும்" என்னுந் திருவாசகத்தையும் "போகியா யிருந்துயிர்க்குப் போகத்தைப் புரிதலோரார்" என்னுஞ் சித்தியாரையும் பலவிடத்தும் பழம்பாடமாகப் படிக்கிறீர்கள்! முராரி என்பதற்கு முரன் என்னும் அசுரனுக்குப் பகைவர் என்கிறீர்கள். தேவர் என்பதற்கு ஒன்றுஞ் சொல்லாது சும்மாவிடுகிறீர்கள்.

உங்கள் விருத்தியுரையாற் சிலவிடங்களிற் "செந்தினை யிடியுந் தேனும்" என்ற பாட்டுவரை "வைகறைவிடியல் செல்ல" மற்றைநாளினும் மத்தியானமாகின்றதே. இப்படி விருத்தியுரை கூறும் நீவிர் உரையில்லாத ஒரு நூலுக்காவது இப்படலத்துக்காவது உரையெழுதி வெளிப்படுத்தலாமே! அங்ஙனஞ் செய்யாததென்னையோ!

உரையெழுதி வெளிப்படுத்தினுற் பொருளும் புகழும் ஒருங்கு சித்திக்குமே!

இங்கே சில திருத்தி மாற்றப்பட்டன. இதனைக் கண்ட உரையாசிரியர்கள் சிலர் மாறுகக் கடிதங்கள் வரைந்தனர். அக்கடிதங்களுக்கு உத்தரம்மாத்திரம் நாவலரவர்களைக்கொண்டு எழுதுவித்துப் பிரசரிக்கப்பட்டது. புராணசவையிலே சென்று உரைகூறும் முறை அமைந்திருத்தலால் உரைகூறுவார்க்குப் பயன்படும் என்பது நோக்கி அதனையுஞ் சற்றே சுருக்கிக் காட்டுதும்.

கடிதங்கட்குத்தரம்.

கடிதர்களே!

பலவூர்களினுமுள்ள பலரையும் பொதுப்படக் கண்டித்த கண்டனத்தை நீங்கள் உங்கள் உங்கள் மேலே இட்டுக்கோபிப்பது நீதியன்று. புராணப்பிரசங்கசபையிலே வந்திருக்கிறவர்களுள்ளே சிலரொழிய மற்றவர்களெல்லாரும் கல்வியில்லாதவர்களே. ஆதலால் மிக வெளிப்படையாகிய நடையிலே பிரசங்கிப்பதே முறை. அங்கே இலக்கணங்கள் எடுத்துச்சொல்வது தகுதியன்று. உங்கள் பிரசங்கங்கள் தங்களுக்கு விளங்கவில்லை என்றே வெகு சனங்கள் குறைசொல்லிக்கொண்டு திரிகிறுர்கள். சிவபுராணபடனவிதியிலே இருபத்தேழாம்பிரிவைப் பாருங்கள்!

சிவஞானசித்தியார் முதலிய சித்தாந்தநூல்கள் படித்தற்குரியார் இவர் என்பது திருக்கோவையாருரையிறுதியிலுள்ள தமிழ்ப்புலமையிலே பதினேந்தாம் பிரிவினும், இரண்டாஞ் சைவவினுவிடையினும் கண்டுகொள்ளக்கடவீர். எங்காயினும் இன்றியமையாத இடத்திலே ஒரு துண்டு வாக்கியம் உதாகரிப்பது தகுதி.

மயிலணிச்சிலேடைவெண்பா.

வெற்றிவடி வேன்முருகன் மேவு மயிலணியைப்
பற்றிச் சிலேடைவெண் பாநூறு—சொற்றிடவே
கம்பொருகை யானனத்தன் காளு னருளுநன்மே
கம்பொருகை யானனத்தன் காப்பு,

நூல்.

க. பூவிரத நித்தமுனி புக்கவரு மாவனமும்
மாவிரதஞ் சேரு மயிலணியே—மேவிருவர்
மாதனத்து வந்தார் மகிழ்ந்து வரைக்கந்த
மாதனத்து வந்தார் மனை.

௨. சேயவிளங் காளையருஞ் செய்தவரு மோதனத்து
வாயசு ரூட்டு மயிலணியே—பாயத்
தகரை நயத்துகைத்தான் ருனவர்க ளாம்பா
தகரை நயத்துகைத்தான் சார்பு.

௩. பூங்குழலார் கண்ணும் புரவிதன்றி யார்முகமும்
வாங்கலை நோக்கா மயிலணியே—மாங்கனியைக்
கண்ணிமையிற் சேவலார் கைக்கொளப்பூச் சூழ்கடம்பின்
கண்ணிமையிற் சேவலார் காப்பு.

௪. கோகனகப் பூமேலுங் கோவேந்தர் வீதியிலும்
வாகனங்க ளேறு மயிலணியே—ஆகவத்தில்
வந்துகைக்குந் தேரார் மடிந்தருளப் பாகனென
வந்துகைக்குந் தேரார் மனை.

௫. விண்ட மலர்போல் விரும்பிவர மெஞ்ஞான்றும்
வண்டிசை பாடு மயிலணியே—தொண்டர்கள்போய்
ஆறக் கரத்தா னமைத்தங் கவர்க்கருளும்
ஆறக் கரத்தா னகம்.

௬. போய்க்கழனி வித்துரும் போரரச ருஞ்செவியின்
வாய்க்கவிதை நாடு மயிலணியே—சீர்க்கனற்கு
மாரனெனத் தோன்றினன் வள்ளிக்கு மையல்செய்
மாரனெனத் தோன்றினன் வாழ்வு.

௭. ஊற்றூர் புனற்றடமு மூர்ப்புறஞ்சே ருங்கடமும்
வாற்று மரைசேர் மயிலணியே—போற்று
தவருக் கினியான் றமிழ்முனிவ னுதியமா
தவருக் கினியான் றலம்.

௮. மாணிக்க மேடையினும் வண்புலவோர் நாவினுமே
வாணிவந் தோங்கு மயிலணியே—வேணுவைக்கொண்
டாக்குவித்தார் மெய்ய ரபத்தரெனக் கண்ணிடவன்
பாக்குவித்தார் மெய்ய ரகம்.

௯. காரிகை யார்வதனங் கண்டமிவை கண்டுதட
வாரிசங் கோடு மயிலணியே—சேரமரர்
வேந்தைக்கேட் டுக்களித்தார் மெய்மையைப் பொனென்னுமொரு
வேந்தைக்கேட் டுக்களித்தார் வீடு.

௧௦. பேறுபெற்றூர் தம்மனமும் பேணிநக ரப்புறமும்
மாறுருக்கங் காட்டு மயிலணியே—சிறியபின்
வேட்டுவரை மேவினர் மெல்லியலாம் வள்ளிதனை
வேட்டுவரை மேவினர் வீடு.

கக. மாயாத வன்பினரும் வான்வீரர் தானிகளும்
வாயாரப் பாடு மயிலணியே—போயாத
வந்தருங்கா னங்கடந்தார் வண்டணிகை யின்வாழ்ந்த
வந்தருங்கா னங்கடந்தார் வாழ்வு.

க௨. தப்பா மொழிப்புலவர் தாமுந் தவசமுங்கோ
வைப்பாடல் செய்யு மயிலணியே—இப்பாரில்
வரு மொருவினை னேதுருகா நிப்பெயரோ
ரே மொருவினை னார்.

க௩. வாளையின்மா மாத்திரரும் வண்டு மெழும்பித்த
வாதசுர மாற்று மயிலணியே—ஓதும்
வியாகத் துதித்திடுவார் வேடிச்சி யைத்தே
வியாகத் துதித்திடுவார் வீடு.

க௪. அஞ்சாவடை யாரடியு மம்பகமுஞ் செவ்விய
மஞ்சரியை மாறு மயிலணியே—நஞ்சஞ்சு
வைத்தானை வேலினன் மல்குசுரந் தன்னெனச்செய்
வைத்தானை வேலினன் வாழ்வு.

க௫. தண்டலையும் பொன்னின் நளியுந் தவமதுவார்
வண்டுறக்கங் காட்டு மயிலணியே—தொண்டிலரா
கத்தினிறை வாகநத்தார் காய்கேயர் மேலையுல
கத்தினிறை வாகநத்தார் காப்பு.

க௬. விண்டலஞ்சேர் கோபுரமு மெய்யோ சருமேக
மண்டலந் தாங்கு மயிலணியே—வண்டரைத்தன்
பத்துக் களித்திடுவான் பாவைவள்ளி நாயகியின்
பத்துக் களித்திடுவான் பற்று.

க௭. மாசுதவிர் தங்குழலின் மானூர்கண் மேனிலையில்
வாசம் புரியு மயிலணியே—மாசுறுசூர்
அங்கங் கெடுத்தா ரிவைவள்ளி காணவரு
அங்கங் கெடுத்தா ரகம்.

க௮. புஞ்சமிதி யெட்டியரும் போர்வீர ருங்கட்டா
மஞ்சிகையுள் வைக்கு மயிலணியே—தஞ்சமென
வேதனைமுன் னிட்டார் விலைகெடுத்தார் வெஞ்சிறையில்
வேதனைமுன் னிட்டார் வீடு.

க௯. ஓசைபெறும் வண்டினமு மும்பரொடு நாடோறும்
வாசவரும் பாடு மயிலணியே—பாசிழையாம்
அட்ட கலாபத்தா ராலடியேற் கெய்துவினை
அட்ட கலாபத்தா ரகம்.

உ0. பத்தர் மனமும் பதியோரு முன்னுபர
வத்து வரையா மயிலணியே—முத்தப்
பழனி மலையார் பயந்தருளும் வேற்கைப்
பழனி மலையார் பதி.

உக. கின்னைமொழி யார்விழியுஞ் சேழ்கிளரும் வார்காதும்
வள்ளையிலே மானு மயிலணியே—கொள்ளானி
உத்தரத்திற் சாற்றினு ருண்மையைக்கும் பற்கிருக்கில்
உத்தரத்திற் சாற்றினு ரூர்.

---

## மெய்கண்டதேவர்.

இவருடைய பிள்ளைத்திருநாமம் சுவேதவனப்பெருமாள் என்பது. இவர் ஏறக்குறைய இற்றைக்கு அறுநூற்றெண்பது வருடங்களுக்கு முன்னே நடுநாட்டிலே திருப்பெண்ணுகடம் எனப்படுந் திருத்தூங்கானை மாடத்திலே வேளாளர்குலத்திலே சிவபத்தியிற் சிறந்த அச்சுதர்களப்பாளருடைய அருந்தவத்தாலே சாமுசித்தராய் வந்து பிறந்தவர். திருவெண்ணெய்நல்லூரிலே காங்கேயபூபதி எனப்படும் மாதுலர் வீட்டில் வளர்ந்தவர். திருக்கயிலையினின்றுந் தென்பொதியஞ் செல்லவந்த பரஞ்சோதிமுனிவராற் சிவஞானபோத உபதேசமும் மெய்கண்டார் என்னுந் திருநாமமும் அடைந்தவர். பொல்லாப்பிள்ளையார் முன்னிலையிற் புகுந்த சிவாகமப்பொருள்களெல்லாம் பொருந்த ஆராய்ந்து தெளிந்தவர். பெரியதோர் மலை சிறியதோர் கண்ணடியிலே அடங்கித் தோன்றல்போலப் பெரிய ஞான சாத்திரங்கள் கூறும் பெரும்பொருளெல்லாம் சிறியவான சூத்திரங்களிலே அரும்பொருளாக அடங்கித் தோன்றவைத்துச் சிவஞானபோதம் என்னுஞ் சித்தாந்தஞ் செய்தவர். இவர் வளர்ச்சிக்குந் தெருட்சிக்கும் பிரமாணங்களாக "வெண்ணெய் நல்லூர்க் காங்கெய பூபதிமனையிற் கலப்பித்தானே" என்னும் வெண்காட்டுப் புராணத்தையும் "வெண்ணெய்ப் பொல்லாத விபமுகத்துப் புத்தேடன்பாற் புனிதசிவாகமப் பொருண்மை பொருந்தவாய்ந்து" என்னுஞ் சேதுபுராணத்தையும் நோக்குக.

இவர் சந்தானகுரவருள் ஒருவர். தாயுமானவராற் சுத்தாத்துவித மெய்கண்டநாதர் எனவுஞ் சேதுபுராணகாரரால் "நில்லாத நிலையிதுமற் றென்றுமொன்ருய் நிற்கு நிலையிதுவென மெய்ந்நெறி தேர்ந்தவர்" எனவுந் துதிசெயப்பெற்றவர்.

## தாயுமானவர்.

பொய்கண்டார் காணுத புனிதமெனு மத்துவித
மெய்கண்ட நாதனருண் மேவுநா ளெந்நாளோ.

புனிதமெனுமத்துவிதம் சுத்தாத்துவிதம். சுத்தாத்துவிதமாவது விசிட்டம் கேவலம் என்னும் அடைமொழிகளால் விசேடிக்கப்பட்டு விசிட்டாத்துவிதம், கேவலாத்துவிதம் என நிற்கும் அவைபோல ஒன்றுன் விசேடிக்கப்படுதலின்றிச் சுத்தமாய்நின்று பொருளுணர்த்தும் அத்துவிதம். சுத்தம் - வேறென்றொடுங் கலவாத தூய்மை. வேறென்றால் விசேடிக்கப்படாமை என்றவாறு.

## அத்துவிதம்.

அத்துவிதம் என்பதன் பொருள் இருபொருள் இருவகையன்றித் தம்முட்கலந்து பிரிவறநிற்கும் ஒற்றுமையில்லை என்பதாம். அ - அன்மை. துவிதம் - இருவகை. துவிதம் என்பதனுல் மலத்தொடு கூடலுங் கூடாமையும்பற்றி இறைவனும் ஆன்மாவும் என இருபொருளாய் வேறுதலும் அன்மைப்பொருளுணர்த்தி அதன்முன்னின்ற அ என்னும் இடைச்சொல்லால் நிறைவுபற்றி உலகெலாமாதலும் பி..ன்றி உடனுதலும் பெறப்படும். "உலகெலாமாகி வேறுயுடனுமாய்" என்ற சித்தியாரும் இப்பொருட்டு. இந்தச்சுத்தாத்துவிதமே சைவர்கொ..வது. விசிட்டாத்துவிதம் வைஷ்ணவர்கொள்வது. விசிட்ட என்ப.. குணமுடைமைமுதலியவற்றுல் விசேஷிக்கப்பட்ட எனப் பொருள்படும். ..வலாத்துவிதம் வேதாந்திகள் கொள்வது. கேவலம் - தன்னின் வேறென்றில்லாத தனி. அத்துவிதம் என்பதற்கு அவர் கூறும்பொருள் ஒன்று என்பதேயாம். அ - இன்மை என்பர்.

வேதாந்திகள், ஒன்றே என்னும் பொருளை விரித்துப் பிரமம் ஒன்றே அறிவுடைப்பொருளாகிய உயிரும், அறிவில்பொருளாகிய மண் புனல் முதலானவைகளுமாய்ப் பரந்து காணப்படுகின்றது. எல்லாம் பிரமம்; பிரமந்தவிர வேறொருபொருளும் இல்லை என்று கூறுவர். இக்கொள்கைக்குப் பிரமாணம் வினவுங்கால் வேதம் பிரமாணம் என்பர். பிரமாணம் என்பது அளந்தறிதற்கருவி. பிரமம் இத்தன்மையது என அளந்தறிதற்கு வேதம் அளவைக்கருவியாகுமாயின்; அளவைக்கருவியாகிய வேதம், அளக்கப்படும்பொருள் என இருபொருளாகும். அளக்கின்றவனுஞ்சேர முப்பொருளாகும். பின் எல்லாம் பிரமம் என்பதும் ஒன்றே என்பதும் எப்படி? வேதம் பிரமத்தின் வேறு?

இவர்கள் "தலையெனப்-பேசன்மித்தை பிறிதிலை யாவியுந்-தேசு மேவு சிவனுமொன் றுருமே" என்பது தழுவி ஆன்மா ஒன்றே என்றும் பல ஆன்மாக்கள் இல்லை என்றும் வாதித்தலால் ஏகான்ம வாதிகள் எனப்படுவர். ஆன்மாக்களெல்லாம் ஒன்றேயாயின்; ஒரு சரீரத்துள்ள ஆன்மா நடக்க விரும்பும் சமயத்தில் மற்றொரு சரீரத்துள்ள ஆன்மா கிடக்க விரும்புவதென்னையோ! ஓரான்மா அதுவும் இதுவும் வேறன்று நானே பிரமம் என வாதபித்தங்கொள்ளும் போது மற்றோரான்மா அதுவும் வேறே இதுவும் வேறே எனப் பேத சித்தங்கொள்வது என்னையோ! இங்ஙனங் குணம் தொழின் முதலியவற்றால் வேறுபடுவன ஒன்றாவது எப்படி! மாயாவாதிகளும் இவர்களேயாவர்.

இந்த ஏகான்மவாதிகள் முதலிய சமயவாதிகள் பலர் சிவஞான போதத்திலும் சிவஞானபோதபாடியத்திலுங் கண்டிக்கப்பட்டனர். பாடியத்திலே ஆறாஞ் சூத்திரவுரை முதலிய பிற்பாகம் நமது நண்பர் சுவாமிநாதபண்டிதராற் பெருமுயற்சியோடும் அச்சிடப்பட்டிருக்கின்றது. இதிலே அத்துவிதம் என்னுஞ் சொல்லின் பொருளும் ஏகான்மவாதம் முதலிய பல சமயநூற்கொள்கைகளும் அவற்றின் மறுப்புக்களும் சித்தாந்தத்துணிவும் தலைமைபெற உரைக்கப்பட்டிருக்கின்றன. சிவஞானபோதம் பாண்டிப்பெருமாள் விருத்தியுரையுமுடையது.

சிவஞானபோதம்.

பண்ணையு மோசையும் போலப் பழமதுவும்
எண்ணுஞ் சுவையும்போ லெங்குமாம்—அண்ணறான்
அத்துவித மாத லருமறைக ளொன்றென்னா
தத்துவித மென்றறையு மாங்கு.

---

## மோசிகீரனார்.

இவரூர் பாண்டிமண்டலத்துள்ள மோசிகுடி என்பர். இவர் கடைச்சங்கப்புலவருள் ஒருவர். இவர் சேரமான்தகடூரெறிந்த சேர லிரும்பொறை என்பவனாற் சாமரைவீசப்பெற்றவர். அவனை இயன் மொழிவாழ்த்துப்பாடி உவப்பித்தவர். இவ்வியன்மொழிவாழ்த்தும் இவர் பாடிய பிறகவிகளும் புறநானூற்றிலே வருகின்றன. இவர் கவி சில குறுந்தொகையிலும் வருகின்றன. திருவள்ளுவமாலையிலும் ஒன்று வருகின்றது. வேறும் உண்டு என்பர்.

புறநானூறு.

நெல்லு முயிரன்றே நீரு முயிரன்றே
மன்ன னுயிர்க்கு மலர்தலை யுலகம்
அதனால், யானுயி ரென்ப தறிகை
வேன்மிகு தானை வேந்தற்குக் கடனே.

---

## வடமலையப்பர்.

இவருர் சிறீரங்கத்தின் அருகிலுள்ள ஒரு கிராமம் என்றும், குலம் வேளாளர்குலம் என்றும், காலம் ஏறக்குறைய இற்றைக்கு இருநூற்றிருபது வருடங்களுக்கு முன் என்றும் அரசராய் வீற்றிருந்த பிரதான நகரி பாண்டிமண்டலத்துள்ள திருநெல்வேலி என்றுங் கூறுவர். சமயம் சைவம். இவர் பல தனிநிலைக்கவிகளாலும் புலவராற்றுப்படையாலும் புகழப்பட்டவர். சைவபுராணத்துள் ஒன்றாகிய மச்சபுராணத்தைத் தமிழிற்பெயர்த்துப் பாடினவர். புலவராற்றுப்படைகாரர் "நானூற்றுக்கோவையும் நாற்கவி வண்ணமும்—பலர் புகழ் சீர்த் தலபுராணமும்—இருநிலம் புகழுமொரு கலம்பகமும்" பாடினவர் என்றும், "செந்தமிழ்க்குதவுந் தியாகவாரிதி" என்றும், "சத்திய வாசகமுந் தமிழறி புலனும்—புத்தி சாதுரியமும் பொலிவுறு நிபுணன்" என்றும், "இரசைப் பதிவள ரிருவப் பனையருள்—வரிசைப் பெரிய வனவட மலையப்பனே" என்றும் இவ்வாறே இவரைப் புகழ்வர்.

மச்சபுராணம்.

வேரி நாண் மல ருற்றிடும் வேங்கையே
கோர மின்றிக் குலவிடும் வேங்கையே
சார வெஃகுஞ் சரிக்குமா தங்கமே
பாரின்மன் னிப் பரம்புமா தங்கமே.

வேரி - தேன். வேங்கை - ஒரு மரம், புலி. மாதங்கம் - யானை, பெரிய பொன். இது கடைமடக்கு.

---

## வரதபண்டிதர்.

இவருர் யாழ்ப்பாணத்துள்ள சுன்னாகம். குலம் காசிமாநகர வேதியர்குலம். சமயம் சைவம். காலம் ஏறக்குறைய இற்றைக்கு இருநூறு வருடங்களுக்கு முன் என்பர். இலக்கண இலக்கியங்களும், வைத்தியசாத்திரமும் பிறவுந் தெரிந்தவர். வரகவித்துவம்

அமைந்தவர். சிவராத்திரிப்புராணம், ஏகாதசிப்புராணம், அமுதாகரம், கிள்ளைவிடுதூது, பிள்ளையார்கதை முதலிய பிரபந்தங்கள் செய்தவர். அமுதாகரம் - வைத்திய நூல். கிள்ளைவிடுதூது காங்கேயன்றுறைக்கு அருகிலுள்ள கன்னியவளையில் வீற்றிருக்குங் குருநாதசுவாமி மேலது.

கிள்ளைவிடுதூதிலே சிவபிரான் பரவைக்குத் தூதுபோனகதை, பாண்டவர்க்குக் கண்ணபிரான் தூதுபோனகதை, இராமருக்கு அனுமான் தூதுபோனகதை, இந்திரற்கு நளன் தூதுபோனகதை, சடையப்பமுதலியார் பீதாம்பரங் கிழித்துக் காலிற் சிலந்தியைச் சோழனுக்குக் காட்டியகதை முதலிய கதைகளையும், மாவிட்டபுரத்துள்ள கோவிற்கடவை, தெல்லிப்பழையிலேயுள்ள தோதரை முதலிய தலங்களையும், மாவிட்டபுரம் முதலிய ஊர்களில் வசிக்கும் வேளாளர் முதலியோரையுங் கூறினவர். இறுதியில் "இறுதிபயப்பினு மெஞ்சாதிறைவற்—குறுதி பயப்பதாந் தூது" என்னுந் திருக்குறளையும் எடுத்துக் கூறினவர். இவற்றால் இவர் திருக்குறள், பெரியபுராணம், திருக்கைவழக்கம் முதலியன கற்றவர் என்பது பெறப்படுகின்றது. கிள்ளைவிடுதூது இவர் வழித்தோன்றலாகிய உபாத்தியாயர் இரத்தினேசுரையரால் அச்சிடப்பட்டது.

சிவராத்திரிப்புராணம்.

காவரசு மலரயன்மால் கடவுளர்க்காச் சென்றமர்செய் காமனைமைம்
பூவரசு படவிழித்துப் புனவேங்கை யத்தியதள் புனைந்து போர்த்த
தேவரசு மனமகிழத் திருப்பதிக மிசைத்தமிழிற் சிறக்கப் பாடும்
நாவரசு பதம்பரசு நமக்குயர்பொன் னாட்டரசு நல்கு மன்றே.

காவரசு - இந்திரன். ஐம்பூவரசு - மன்மதன். வேங்கை - புலி. அத்தியதள் - யானைத்தோல்.

---

## விசாகப்பெருமாளையர்.

இவரூர் தொண்டைமண்டலத்துள்ள தணிகையம்பதி. குலம் சங்கமர்குலம். சமயம் வீரசைவம். காலம் ஏறக்குறைய இற்றைக்கு ஐம்பது வருடங்களுக்கு முன். இவர் கந்தப்பையருக்கு மைந்தர். நைடதம், பிரபுலிங்கலீலை என்பவற்றின் முற்பாகங்களுக்கு உரை செய்த சரவணப்பெருமாளையருக்குச் சியேட்டர். இலக்கண இலக்கியங்களில் வல்லவர். இலக்கணச்சுருக்கவினாவிடையும், நன்னூற் காண்டிகையுரையும் பிறவுஞ் செய்தவர். இலக்கணச்சுருக்கவினா

விடையிலே எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி என்னும் ஐந்திலக்கணமுஞ் சுருக்கிக் கூறுவர்.

தற்சிறப்புப்பாயிரம்.

உலகு மேதகு யிவனெனக் கொருமுத லெனக்கோண்
டிலக வாழரு ளிடத்தனு மீசனை யிறைஞ்சிக்
குலவு நூற்பொரு ளுணர்த்திய குரவரைப் பழிச்சி
அலகில்சீ ரெழுத் தாதியைந் தறைகுவ னமைந்தே.

---

## விசுவநாதசாத்திரியார்.

இவரூர் யாழ்ப்பாணத்துள்ள அராலி. குலம் வேதியர்குலம். சமயம் சைவம். காலம் ஏறக்குறைய இற்றைக்கு எண்பது வருடங்களுக்கு முன். இவர் இலக்கிய லக்கணங்களுஞ் சோதிடசாத்திரமுங் கற்றவர். அப்பொழுதையரசினரால் "இராசாவின் கணிதர்" என்னும் பட்டமும் பெற்றவர் என்பர். கவிபாடுந்திறமுமுடையவர். வண்ணைக்குறவஞ்சி, நகுலமலைக்குறவஞ்சிமுதலிய பிரபந்தங்களும், பல தனிநிலைக்கவிகளும் பாடினவர்.

வண்ணைக்குறவஞ்சி.

க. சித்திர முளரிக் கண்ணர் சிறந்தவா மனத்த ராசை
வத்திர முடைய ரஞ்சக் கரத்தர்பொன் வனந்தா மத்தர்
இத்திற வயன்மா லீச னிவர்களி லிறைவ ரான
அத்தர்தாள் வணங்கி வண்ணைக் குறவஞ்சி யறைகு வேனே.

இக்கவியில் முன்னிரடியும் பிரமா, விட்டுணு, சிவன் என்னும் மூவருக்கும் சிலேடை. முப்பொருளையும் இலக்கமிட்டு முறையே எழுதுவாம். சித்திரம் - அழகு.

முளரிக் கண்ணர்—

க. தாமரைமலரை ஆசனமாகவுடையவர். முளரி - தாமரை. கண் - இடம்.

உ. தாமரைமலர்போலுங் கண்ணுடையவர்.

ங. அக்கினிக் கண்ணுடையவர், முளரி - அக்கினி.

சிறந்து அவாம் அனத்தர்—

க. சிறப்புற்று விரும்பப்படுகின்ற அன்னவாகனமுடையவர். அவாவும் என்பது வகரவுகரம் நீங்கி அவாம் என நின்றது.

சிறந்த வாமனத்தர்—

உ. சிறந்த குறளுருவமுடையவர். வாமனம் - குறளுருவம்.

சிறந்த ஆம் மனத்தர்—

ங. அன்பினாற் சிறந்தனவாகிய மனங்களில் இருப்பவர்.

ஆசை வத்திரமுடையர்—

க. திக்குமுகமுடையவர். ஆசை - திக்கு. வத்திரம் - முகம்.

உ. பொற்சீலையுடையவர். ஆசை - பொன். வஸ்திரம் - சீலை.

ங. திக்காகிய சீலையுடையவர்.

அஞ்சம் கரத்தர்—

க. அன்னக்கொடி தாங்கிய கையுடையவர். அஞ்சம் - அன்னம்.

அம் சக்கரத்தர்—

உ. அழகிய சக்கராயுதமுடையவர்.

அஞ்சு அக்கரத்தர்—

ங. ஐந்தெழுத்தாகிய மந்திரமுடையவர்.

போன் வனம் தாமத்தர்—

க. பொன்னிறமாகிய ஒளியுடையவர். தாமம் - ஒளி.

உ. அழகிய துளசிமாலையுடையவர். வனம் - துளசி.

ங. பொன்போன்ற கொன்றைமாலையுடையவர். தாமம் - கொன்றை.

நகுலமலைக்குறவஞ்சி.

உ. குலவுதிரு வனம்பரித்தோர் பொன்சா ரங்கர்
கோத்தரணி நன்குடைய தாகக் கொண்டோர்
நிலவுறுமெண் கோவுடைய ரத்தி தன்னை
நீடுவந்த பகவரென நின்ற மூவர்
உலகுபுகழ் மலரயன்மால் சிவனெ னச்சொல்
லுற்றவரிற் றலைவர்பத முவந்து போற்றிச்
கலவமயி லாடனமிடு நகுல சையக்
காமர்குற வஞ்சிதனைக் கழறு வேனே.

இக்கவியினும் முன்னீரடியும் பிரமா, விட்டுணு, சிவன் என்னும் மூவர்க்குஞ் சிலேடை. குலவுதல் - விளங்கல்.

திரு அனம் பரித்தோர்—

க. அழகிய அன்னத்தாற் சுமக்கப்பட்டவர்.

திரு வனம் பரித்தோர்—

உ. இலக்குமி வசிக்குந் துளசியைத் தரித்தவர்.

ங. சிறந்த நீராகிய கங்கையைத் தரித்தவர்.

போன் சார் அங்கர்—

க. பொன்னிறஞ் சார்ந்த சரீரமுடையவர்.

போன் சாரங்கர்—

உ. அழகிய சாரங்கம் என்னும் வில்லுடையவர்.

ங. பொன்மயமாகிய மானையுடையவர். சாரங்கம் - மான்.

தாணி கோ நன்கு உடையது ஆகக் கோண்டோர்—

க. பூமி கடனீரை நன்குடையதாகச் சிருட்டித்துக்கொண்டவர். தாணி - பூமி. கோ - நீர்.

கோ தாணி நன் குடையதாக கோண்டோர்—

உ. பக மலையாகிய நல்ல குடையுடையதாகக்கொண்டவர். கோ - பசு. தாணி - மலை. கோ - சாதியொருமை.

கோ தரணி நன்கு உடையது ஆக கோண்டோர்—

ங. கண்ணுனது சூரியனை நன்குடையதாகக்கொண்டவர்.

எண் கோ உடையர்—

க. எட்டுக் கண்களையுடையவர். கோ - கண்.

உ. எண்ணப்படும் ஆசியவுடையவர்

ங. எட்டுத்திக்காகிய வஸ்திரமுடையவர். உடை - சீலை.

அத்தி தனை நீடு உவந்த பகவர்—

க. * * * * *

உ. பாற்கடலைப் பெரிதும் விரும்பிய பகவர்.

ங. எலும்பு மாலையைப் பெரிதும் விரும்பிய பகவர்.

---

## வில்லிபுத்தூராழ்வார்.

வில்லிபுத்தூராழ்வார் என்பது முன்னரே பாண்டிமண்டலத்திலேயுள்ள வில்லிபுத்தூரிலே அவதரித்துப் பெரிய பிரபந்தம் பாடிய பெரியாழ்வார் என்னும் விட்டுணுபத்தர்க்கு வழங்கப்பட்ட பெயராயிருக்கும் பெருமை நோக்கிப் பின்னர் இவர்க்கும் இடப்பட்டுவழங்கியதோர் பெயர். இவரூர் திருமுனைப்பாடிநாட்டிலுள்ள

சனியூர். குலம் வேதியர்குலம். சமயம் வைஷ்ணவம். காலம் ஏறக் குறைய இற்றைக்கு ஐந்நூறு வருடங்களுக்கு முன் என்பர். இவர் பாயிரம் பாடிய வரந்தருவார்க்குத் தந்தையார். வீரராகவாசாரி யர்க்கு மைந்தர் என்பர். வரந்தருவார் வீராகவர் குரு என்பது போதர "வீராகவ னருள்பெறு வில்லிபுத்தூரன்" என்பர். இவர் விட்டுணுவிடத்தும் விட்டுணுபத்தரிடத்தும் பத்திமிக்கவர். வரந் தருவாரும் "பைந்துழாய் முடிப் பரமனைப் பலகவித் துறையுஞ்— சிந்தையான் மொழிந் தன்பர்தந் திருவுளம் பெற்றோன்" என்பர்.

இவர் இயல் இசை நாடகம் என்னும் முத்தமிழினும் வடமொ ழிக் கலைகளினும் முறைபோகிய உத்தம பண்டிதர். ஐந்து பாவுடை நால்வகைக் கவிக் கதிபதியாய் வந்தவர். சந்தக்கவி பாடுதலினுஞ் சமர்த்தர். தென்னர், சோழர், சேரர் என்னும் மன்னர் மூவரும் வழங்கிய வரிசை பெற்றவர். வாதுகளிலே தோற்ற புலவர்காது களைக் குடைந்து தோண்டி அறுத்தலாற் "குறும்பியளவாக் காதைக் குடைந்து தோண்டி—எட்டினமட் டறுப்பதற்கோ வில்லியில்லை" எனப் பாடப்பட்டவர். சங்கத் தமிழ்நூல்களை நன்கு கற்றுணர்ந்து வக்கபாகையில் அரசுவீற்றிருந்த ஆட்கொண்டான் என்னுங்கொங் கர்குலவரசர் "நீயும் நானும் பிறந்த திசைக்கு இசை நிற்பப் பாரத மாம் பெருங்கதையைப் பெரியோர் தங்கள் சிறந்த செவிக்கு அமுத மெனத் தமிழ்மொழியின் விருத்தத்தாற் செய்க" என்றபடி பார தம் என்னும் பிரபந்தம் பாடினவர்.

பாரதத்திலே கொங்கர்குல அரசருடைய வெற்றி, வீரம், பாவ லர் மானங் காத்தல், பரிசு கொடுத்தல், யாவருக்கும் இல்லையென் னுமல் ஈதல் ஆதிய உயர்குணங்களைச் சில கவிகளில் உவமையாய் வைத்துக் கூறுவர். சோழ பாண்டியர்களையும் வியந்து கூறுவர். விட்டுணுமூர்த்தியையும், விட்டுணுபத்தர்களையும், சிவபிரானையுஞ் சிவபத்தர்களையும் பெருமையிற் சிறக்க அருமையில்வைத்துஞ் சில விடங்களில் எடுத்துக் கூறுவர்.

கொங்கர்குலவரசர் கோடை.

க. கோவல்சூழ் பெண்ணை நாடன் கொங்கர்கோன் பாகை வேந்தன்
பாவலர் மானங் காத்தான் பங்கயச் செங்கை யென்ன
மேவல ரெமரென் னுமல் வெங்களந் தன்னி னின்ற
காவலன் கன்னன் கையும் பொழிந்தது கனக மாரி.

சோழனுடைய வெற்றி புலப்படுமாறு "வடமண்டலிகர் திறை வாரிய நேரியன்" என்றும், "எங்கு மொரு குடையா லிடு நீழலன்" என்றும், "வென்றி வளவனை யார் நிகர்வரே" என்றுங் கூறுவர்.

பாண்டியனுடைய வீரம் புலப்படுமாறு "வானவர் முதல்வன் சென்னி வரிவளை யுடைத்து மீண்டோன்" என்றும், தமிழ் வளர்க்கும் பெருமை புலப்படுமாறு "முழுதுணர்ந்தருள் முனிவரன்புகன் மும்மை வண்டமிழும்—பழுதறும்படி தெளிஞரேறிய பலகையொன்றுடையான்" என்றுங் கூறுவர். நாராயணமூர்த்தியின் தலைமை புலப்படுமாறு "சீதநாண்மலர்க் கோயின்மேவுசெந்திருவினாயகன்—பூதநாயகன் வீரதநாயகன் விபுதநாயகன்" என்றும், முத்தொழின் முதன்மையும் முற்றறிவும் நிறைவும் புலப்படுமாறு "ஞாதமுமுலகம்படைத்தளித்தழித்து ஞானமாயகிலமு நிறைவுற்று" என்றுங் கூறுவர். சிவபரத்துவம் புலப்படுமாறு "தன்னேர்வடிவிலொருகூறு தையலாளு முன்னோன்" என்றும், "ஓரேனந் தனைத்தேட வொளித்தருளு மிருபாதத் தொருவன்" என்றுங் கூறுவர். திருமங்கையாழ்வார் பெருமை புலப்படக் "கலியனெங்கண் மங்கையாதி" என்றும், திருஞானசம்பந்தர் பெருமை புலப்படுமாறு "கூறிய செஞ்சொலேடு குறித்தெதிர் கொண்ட வையை" என்றுங் கூறுவர்.

வடமொழியிலுள்ள சங்கிருதி, பிரகிருதி, விகிர்தி முதலிய சந்தவகைகளையும், தத்திதம் அவ்வியயம் முதலிய சொல்வகைகளையும் பெரும்பாலும் பிரயோகிப்பர். "அண்டர் குலபதியாம் விடை வாகனன்" என்பது சங்கிருதி என்னும் சந்தம். குந்தி, மாதவி, யாதவி, மாருதி, ஆங்கிலி முதலியன தத்திதச் சொற்கள். ஆபாதம், அதவா முதலியன அவ்வியயச்சொற்கள். குந்தி என்பதிலே தத்தித விருதி புணர்ந்து கெட்டுப்போயிற்று. கெடினும் புணர்ந்ததுபோலின்று குந்தி என்பது குந்திதேசராசன் எனவும், குந்திதேசராசன் பூமி எனவும், குந்திதேசராசன் மகள் எனவும் பொருள்படும். பெற்ற பிதாவாகிய சூரன் என்பவனாலே தத்தபுத்திரியாகக் குந்திபோசனுக்குக் கொடுக்கப்பட்டுக் குந்திபோசன் வீட்டிலே வந்து வளர்ந்த காரணத்தாற் பாண்டவர் தாயுங் குந்தி என்னும் பேருடையளாயினள்.

பாரதம்.

உ. புந்தியாற்கலைமகள்பொற்பினாற்பூந்திருப்புனைகற்பால்
அந்திவாயருந்ததிபெரும்பொறையினாலவனிமானிகரென்னக்
குந்திபோசனிற்சூரனென்பவன்மகள்குருகுலந்தழைத்தோங்க
வந்தியாவரும்பிருதையென்றடிதொழவளர்கின்றாள்.

சூரன் என்பவன் மகள் குந்திபோசன் இல் வந்து வளர்கின்றாள் என இயைக்க. சூரன் - வசுதேவன் தந்தை, தேவகன் மைந்தன். குந்திபோசன் - சாத்துவன் மகன். இல் - வீடு. பிருதை

என்பது சூரனிட்ட பிள்ளைத்திருநாமம். "முன்னுரைத்திட்டசூரன் மொய்குழற் பிருதைதன்னைத்—தென்னுறு குந்திபோசன் றனக்குத் தெத்தெனவளித்தான்" என மச்சபுராணகாராருங் கூறுவர்.

வியாசபாரதத்திலுள்ள சில கதைகளை மிகச் சுருக்கிக் குறிப்பால் விளங்கும்படியும் பாடுவர். ஒருநாள் பசியினால் வருந்தித் தன் பால்வந்த வியாசமுனிவரைக் காந்தாரியானவள் உணவு முதலியன கொடுத்து மகிழ்வித்த கதையை "ஆர்வமுற்றி" என்பதில் அமைத்துக் கூறுவர்.

பாரதம்.

ங. பூந்தார்வியாதமுனிதாளிணைபோற்றியன்பு
கூர்ந்தார்வமுற்றியவன்பால்வரங்கோடலெய்திக்
காந்தாரிநூறுமகவானகருப்பமொன்று
வேர்ந்தாதரிக்கத்தரித்தாள்வடமீனொடொப்பாள்.

ஆர்வம் முற்றி என்பதற்கு வியாசமுனிவருக்குப் பசிகாரணமாக எழுந்த வேட்கையை அன்ன பானாதிகள் கொடுத்து முடித்து எனப் பொருள் கொள்க. ஆதரித்தல் - விரும்பிப் புணர்தல். வடமீன் - அருந்ததி.

வடசொல்லன்றி வடசொற்றொடராக ஐந்தாறு சொற்கள் தொடர்ந்துநிற்கும் பிரயோகங்களுங் கூறுவர். அவை: "மானகவச வராசதுரியோதனன்" "பரதநாத வேதபரத்து வாசன்" "கபோல விகடகட கரிதுரகம பதாதி யிரதம்" "மாதவ யாதவ வாசவ கேசவ" முதலியன. இவர்க்குஞ் சகோதரர்க்குமுண்டாய தாயபாக வழக்கு, தாயபாகத்தாற் போர்புரிந்தழிந்த பாண்டவர் நூற்றுவர் சரித்திரந் தெரிந்தால் ஒருபோது தணிந்துவிடும் எனக் கருதி அரசர் ஆஞ்ஞைசெய்தபடி இப்பாரதத்தைப் பாடினர் என்றுங் கூறுவர்.

பாரதம்.

ச. மன்னு மாமறை முனிவருந் தேவரும் பிறரும்
பன்னு மாமொழிப் பாரதப் பெருமையும் பாரேன்
மன்னு மாதவன் சரிதமு மிடையிடை வழங்கும்
என்னு மாசையால் யானு மீதியம்புதற் கிசைந்தேன்.

இக்கவியோடுஞ் சிறப்புப்பாயிரத்தோடும் தாயபாகங் காரணமாகப் பாடுவித்தார் என்பது மாறுபாடுறும். பாரதப் பெருமையாவது பாரதர் கதை கூறும் நூலின் பெருமை. பாரதராவார் பரதன் என்னும் பிரபல அரசனுடைய மரபிற் பிறந்த அத்தி, குரு, சந்தனு, வீட்டுமன், பாண்டு, திருதராட்டிரன், பாண்டவர்,

நூற்றுவர் முதலானோர். பாதனுவான் துட்டியந்தனுக்குச் சகுந்தலை யிடம் பிறந்தவன். பாரதர் கதை கூறும் நூல் பாரதம் என்க.

பாரதப் பெருமையாவது எண்ணிலவாகிய புண்ணிய கதைகளையுடைமையும், வேதப்பொருளால் அலங்கரிக்கப்பட்டு விளங்குதலும், ஐந்தாம் வேதம் எனப்படுதலும், விநாயகர் ஏடாக மாமேருவெற்பாக வங்கூர் எழுத்தாணி தன் கோடாக எழுதப்பெறுதலும், சகல சாத்திரங்களுக்கும் உபப்பிருங்கணமாதலும் பிறவுமாகிய பெருமை என்க. "மன்னுமாதவன்" என்புழி மாதவன் என்பதை மாது + அவன் = மாதவன் எனக்கொண்டு சிவசரிதமும் இடையிடை வாலாற் பாடினர் என்றும், அருணகிரிநாதர் சாபத்தால் இழந்த கண் பெறலே அதன் காரணம் என்றுங் கூறுவாருமுளர். நிற்க.

வடநூலார் சுலோகம் ஒன்றிற் சுருக்கிக் கூறிய பாரதமொழிபெயர்ப்புப் பாட்டினையும் படிப்பவர் பாரதகதையைச் சுருக்கி அறியும்பொருட்டுக் காட்டுதும்.

ஏகவிருத்தபாரதம்.

ஐவர்நூற் றுவர்க டோற்ற மரக்குமா ளிகையும் வேதல்
கைவரு சூதிற் றோல்வி கானகஞ் செலல் விராடன்
தெய்வகல் வீட்டில் வாழ்க்கை நிகழ்நிரை மீட்டல் போர்க்கு
மெய்வெளி யாறு நூறு வீரர்சா வைவர் வாழ்வே.

---

## விளம்பிநாகனார்.

இவர் பதினெண்கீழ்க்கணக்குள் ஒன்றாகிய நான்மணிக்கடிகை என்னும் நீதிநூல் செய்தவர். இதன்கண் இன்னிசைவெண்பாவும் நேரிசைவெண்பாவும் வரும். ஒவ்வொரு பாவிலும் இரத்தினத்துண்டம்போன்ற நான்கு பொருள் கூறலால் நான்மணிக்கடிகை எனப்பட்டது. கடிகை - துண்டம். இதன்கண் பலவகை நீதிகளையுங் கூறுவர். தனக்குத் துணைவேண்டினல் தருமஞ்செய்க என்பர். வெல்ல விரும்பினுற் கோபம் விடுக என்பர். கொடுக்க விரும்பினல் அன்னங்கொடுக்க என்பர். படிக்க விரும்பினல் இளமையிற் படிக்க என்பர். இங்ஙனம் பல கூறுவர்.

நான்மணிக்கடிகை.

க. மனைக்கு விளக்கம் மடவாண் மடவாள்
தனக்கு விளக்கந் தகைசால் புதல்வர்
காதற் புதல்வர்க்குக் கல்வியே கல்விக்
கோதிற் றகைசா லுணர்வு.

ஒரு வெண்பாவிலே நூல் பல கற்றலால் வரும் பயனைச் சாலவும் நன்மைபெறக் கூறுவர். ஒருவன் நூல் பல கற்பதனால் அவனுடைய மிக்க அறியாமை குறையும்; அறியாமை குறைதலால் அவன் புல்லறிவுநீங்கி இவ்வுலகியலின் பொய்ம்மை மெய்ம்மைகளை அறிவான்; அவையறியவே மெய்ந்நெறியிற் செல்லுவான்; அந்த மெய்ந்நெறியால் இங்கே புகழை நாட்டிவிட்டுப் பின் அங்கேயுள்ள வீட்டுலகிற் புகுவான். வெண்பாவையும் கூறுதும்.

நான்மணிக்கடிகை.

உ. கற்பக் கழிமட மஃகும் மடமஃகப்
புற்கந்தீர்ந் திவ்வுலகிற் கோளுணருங் கோளுணர்ந்தாற்
றத்துவ மாய நெறிபடரு மந்நெறி
இப்பா லுலகத் திசைநிறீஇ யப்பால்
உயர்ந்த வுலகம் புகும்.

---

## வீரகவிராசர்.

இவரூர் பாண்டிமண்டலத்துள்ள நல்லூர் என்றும், குலம் பொற்புலவர்குலம் என்றும், காலம் ஏறக்குறைய இற்றைக்கு நானூறு வருடங்களுக்குமுன் என்றும், இவர் காளி வழிபாட்டினர் என்றுங் கூறுவர். இவர் அரிச்சந்திரபுராணம் பாடினவர். அதனைப் புல்லாணித் திருமால் சந்நிதியில் அரங்கேற்றினவர்.

அரிச்சந்திரபுராணம்.

செங்கோல றத்தின் முறையேசெ லுத்து திறலோ னெவர்க்கு முரவோன்
வெங்கோப யானை விறன்மன்ன னெம்மை விடுவிக்க வெண்ணி வருநாள்
பங்கேரு கத்து மலர்போல் விளங்கு வதனு மகிழ்ந்த பரிவால்
எங்கேயெ னுசை மகனென் றுரைக்கின் இனியேது சொல்வன் மகனே.

---

## வீரமாமுனிவர்.

இவர் தத்துவபோதகசுவாமி எனவும், தைரியநாதசுவாமி எனவுஞ் சொல்லப்படுவர். இவரூர் மேலைத்தேசத்துள்ள இத்தாலி. சமயம் கத்தோலிக்க சமயம். காலம் இற்றைக்கு நூற்றெழுபத்து நான்கு வருடங்களுக்கு முன் என்பர். இவர் பரதகண்டத்தின் தென்பாகத்திலுள்ள தமிழ்நாட்டில் வந்து திரிசிரபுரம், காயற்பட்டணம் முதலிய நகரிகளிலே வசித்தவர். மேலைத்தேச பாஷைகளுள்ளும் பரதகண்டபாஷைகளுள்ளுஞ் சில சில பாஷைகள் கற்றுணர்ந்தவர் என்பர்.

தமிழ்ப்பாஷையிலே பலவகை இலக்கியங்களையும், இலக்கணங்களையும், வேறு நூல்களையுங் கற்றவர். நூலுரைகள் செய்யுந் திறமுமுடையவர். எழுத்து, சொல் முதலிய பஞ்சலக்கணங்களையும் விளக்கித் தொன்னூல்விளக்கம் என்னும் இலக்கணநூலும், திவாகரம் முதலிய நிகண்டுச்சொற்களையும், வேறு சொற்களையுங் கூட்டிப் பெயரகராதி முதலிய வகைகளுங் காட்டிச் சதுரகராதி என ஓர் அபிதாநிகநூலுஞ் செய்தவர்.

இவையன்றிக் கதலிகசமயச் சார்பாய்த் தேம்பாவணி, திருக்காவலூர்க்கலம்பகம், வேதியரொழுக்கம், வேதவிளக்கம், அடைக்கலமாலை முதலிய நூல்களுஞ் செய்தவர்.

தேம்பாவணி.

மருடரு வலியுருவே மருளறு சினவுருவே
அருடரு தயையுருவே யளவறு திருவுருவே
தெருடரு கலையுருவே செயிரறு மனுவுருவே
பொருடரு மணியுருவே பொழிமண வடிதொழுதேன்.

---

## வெள்ளிவீதியார்.

இவரூர் பாண்டிமண்டலத்துள்ள மதுரைமாநகரம். கடைச்சங்கப் புலவருள்ளே ஒருவர். கணவனைப் பிரிந்திருந்தவர். திருவள்ளுவமாலையிலும் ஒரு செய்யுள் செய்தவர். நற்றிணை குறுந்தொகைகளிலுஞ் சில கவிகள் செய்தவர்.

குறுந்தொகை.

காலே பரிதப் பினவென் கண்ணே
நோக்கி நோக்கி வாளிழந் தனவே
அகலிரு விசும்பின் மீனினும்
பலரே மன்றவிவ் வுலகத்துப் பிறரே.

---

## வென்றிமாலைக்கவிராசர்.

இவரூர் பாண்டிமண்டலத்துள்ள திருச்செந்தூர். குலம் வேதியர் குலம். சமயம் சைவம். இவர் வரகவி எனவும் படுவர். திருச்செந்தூர்ப்புராணம் என்னும் பிரபந்தஞ் செய்தவர். புராணத்திலே சில கவிகளிலே மடக்குஞ் சிலேடையும் வரலாலும், சிலேடை ஒன்றிலே காசு, நாள், மலர், பிறப்பு என்னும் யாப்பிலக்கணவாய்பாடு வரலாலும் இலக்கணந் தெரிந்தவர் என்பது அநுமானிக்கப்படும்.

திருச்செந்தூர்ப்புராணம்.

ஆசின் மிக்கமென் மதுரமாய்ச் சித்திரத்தளவி
ஓசை பெற்றுவித் தாரமா யைந்திணை யுடன்று
காசு நாண்மலர் பிறப்புடன் காட்டிமெய்க் கலசப்
பூசு ரன்றமி ழொத்தது வித்தகப் பொருணை.

---

## வேதகிரிமுதலியார்.

இவரூர் தொண்டைமண்டலத்துள்ள களத்தூர். குலம் வேளாளர் குலம். காலம் ஏறக்குறைய இற்றைக்கு அறுபது வருடங்களுக்கு முன் என்பர். இவர் இராமாநுசகவிராயருக்கு மாணவகர். இலக்கியலக்கணங்கள் நன்கு கற்றவர். யாப்பருங்கலக்காரிகை, நாலடியார் முதலியவைகளைப் பரிசோதித்து அச்சிட்டவர். பாடுந்திறமுமுடையவர். நீதிசிந்தாமணி, மநுநீதிசதகம் முதலிய நூல்களுஞ் செய்தவர் என்பர். உதயதாரகைப்பஞ்சிகை முதலாம்புத்தகம் முதலியவைகளிலே இலக்கணக்களஞ்சியம், இலக்கியக்களஞ்சியம் முதலிய பல விடயங்கள் எழுதினவர்.

இலக்கணக்களஞ்சியத்திலே அகத்தியம், தொல்காப்பியம், இலக்கணத்திரட்டு, பிரபந்ததீபம், கவிசாகரம், குவலயானந்தம், அரியவிதி, மயேச்சுரம், அவனியம், பஞ்சலட்சணப்பயன் முதலிய இலக்கணங்களிலிருந்து பல சூத்திரங்கள் எடுத்து எழுதினவர். இலக்கியக்களஞ்சியத்திலே ஆசிரியநிகண்டு, கயாகரநிகண்டு, பொதியநிகண்டு முதலிய நிகண்டுகளும் பிறவும் எடுத்து எழுதினவர். அவற்றுள்ளே கற்பவர்பொருட்டு அரியன சில காட்டுதும்.

அகத்தியம்.

பொருண்மை சுட்டல் வியங்கொள வருதல்
வினைநிலை யுரைத்தல் வினுவிற் கேற்றல்
பண்பு கொளவருதல் பெயர்கொள வருதல்
என்றிவை யனைத்தும் பெயர்ப்பய னிலையே.

இது பயனிலையிலக்கணங் கூறுஞ் சூத்திரம். பெயர் - எழுவாய். உ-ம். பசு இது; பொருண்மைசுட்டல். பசு வாழ்க; வியங்கொள வருதல். பசு வந்தது; வினைநிலையுரைத்தல். பசு யாது? வினுவிற் கேற்றல். பசு வெள்ளை; பண்புகொளவருதல். பசு நான்கு; பெயர் கொள வருதல்.

## இலக்கணத்திரட்டு.

### தலைமாணாக்கன்.

க. தலைமா ணாக்கன் றனக்கோ தியபொருள்
பொற்கலத் தமுதம் பொழிந்தது போலுமே.

### இடைமாணாக்கன்.

உ. இடைமா ணாக்கற் கீர்த நற்பொருள்
தேனெடு நீர்சமஞ் சேர்த்தற் றுமே.

### கடைமாணாக்கன்.

ங. கடைமா ணாக்கன் காதுறப் புகல்பொருள்
கமரினு ளான்பால் கவிழ்த்ததை யொக்கும்.

### பண்புந்தொழிலும்.

ச. இ உ ஐம்முத லேறிய மெய்கள் அம்
அர் அல்விகுதி குணந்தொழிற் பெயர்க்குமாம்.

### இ ஏறிய மெய்விகுதிகள்.

இ ஏறிய மெய்விகுதிகள் சி, தி, வி முதலியன. அவைகட்குப் பண்புப் பெயரில் மாட்சி, நன்றி முதலியனவும், தொழிற்பெயரில் புணர்ச்சி, மறதி முதலியனவும் உதாரணங்களாய் வரும். எல்லா விகுதிகளும் இரண்டுக்கும் வருவனவல்ல. ஏற்புழி அறிந்துகொள்க.

### உ ஏறிய மெய்விகுதிகள்.

உ ஏறிய மெய்விகுதிகள் கு, சு, து, பு முதலியன. அவைகட்குப் பண்புப்பெயரில் நன்கு, சேது, நன்று முதலியனவும், தொழிற்பெயரில் போக்கு, பாய்த்து, வளர்ப்பு முதலியனவும் உதாரணங்களாய் வரும்.

### ஐ ஏறிய மெய்விகுதிகள்.

ஐ ஏறிய மெய்விகுதிகள் கை, மை, வை முதலியன. அவைகட்குப் பண்புப்பெயரில் செம்மை, மழவை முதலியனவும், தொழிற்பெயரில் வருகை, பொறுமைமுதலியனவும் உதாரணங்களாய் வரும்.

அம் என்னும் விகுதிக்குப் பண்புப்பெயரில் நலம், திண்ணம் முதலியனவும், தொழிற்பெயரில் கூட்டம், வாட்டம் முதலியனவும், அர் என்னும் விகுதிக்குப் பண்புப்பெயரில் நன்னர் என்பதும், அல் என்னும் விகுதிக்கு வாடல், பாடல் முதலியனவும் உதாரணங்களாய் வரும்.

### இன்மை நன்மை.

ரு. அஃ அந் நிர்நார் அபஅவ திருமொழி
ஆதிக் கின்மையாஞ் சந்த நன்மையாம்.

இ-ள். அ முதலியன சொல்லின் முதலிலே இன்மை என்னும்பொருளை உணர்த்திநிற்கும். சத், சு என்னும் இரண்டும் நன்மை என்னும் பொருளை உணர்த்திநிற்கும் என்க. இவை வடமொழி. உதாரணம் அமலம், அநசனம், நிர்க்குணம், துர்க்கீர்த்தி, அபநயம், அவமானம், நிருமலம், சற்குணம், சுகுணம் என வரும்.

உயிர்ப்பொருள்.

௬. உயிர்ப்பொரு ளுயிரிலாப் பொருளிரு வகைய
ளுருதல் பறத்த னடத்த லெனவே
மூவகை யாகு முயிரினப் பொருளே.

உயிரிலாப்பொருள்.

௭. இயற்கை செயற்கை யிருவகை யினமும்
உயிரிலாப் பொருளென் றுரைத்தனர் புலவர்.

சவலைவெண்பா.

௮. இருகுறள் சவலை யொருவிகற் பாகும்.

(இ-ள்.) தனிச்சொலின்றி இருகுறள்வெண்பா அமைந்து வருவது சவலைவெண்பாவாகும். அது விகற்பம் ஒன்றாகி வரும். விகற்பம் - எதுகைவேறுபாடு.

உதாரணம்.

அட்டாலும் பால்சுவையிற் குன்றா தளவளாய்
நட்டாலு நண்பல்லர் நண்பல்லர்
கெட்டாலு மேன்மக்கண் மேன்மக்க ளேசங்கு
சுட்டாலும் வெண்மை தரும்.

பிரபந்ததீபம்.

க. வினவும் விடையும் விரவியோர் செய்யுளிற்
காட்டல் சல்லாபக் கவியென் றாகும்.

சல்லாபம் வினவும் விடையுங் கூடியது. முன்சொன்ன பரஞ்சோதிமுனிவர் சரித்திரத்தில் வரும் "கறுத்ததையெவன்" என்னுங் கவி இதற்கு உதாரணமாகக் கொள்ளற்பாலது.

சீட்டுக்கவி.

௨. சீட்டுக் கவிதனைச் செப்பு மிலக்கணம்
தெய்வ வணக்கமுந் தேசிக வணக்கமும்
தன்பெரும் புகழ்ச்சியுந் தலைவன் புகழ்ச்சியும்
எய்த வாசிரிய விருத்தத் தியம்பலே.

திட்டுக் கவி என்பதே தகர சகர வொற்றுமைபற்றிச் சீட்டுக்கவி என வழங்கிற்று என்பது சிலர் கருத்து. திட்டு - எழுதப்படுவது. தேசிகன் - குரு. தலைவன் - பாடப்படும் பிரபு.

## சமுத்திக்கவி.

ஈ. சொன்ன வெழுத்திலுஞ் சொன்ன பொருளினும்
அந்நிலை தன்னி லிருவகைப் பொருட்கும்
முன்னிய கருத்து முடிவுறப் பாடல்
சமுத்தி யென்று சாற்றுவ ரதுவே
கொடுத்த பொருளெல்லாங் குறைபா டின்றித்
தொடுத்த யாப்பிற்றுய்த் துகளற நிற்றலே.

சமுக்தி என்னும் வடமொழி சமுத்தி எனத் தற்பவமாயிற்று. சமுத்தி - நன்கு சொன்னது. சுருக்கமாகச் சொல்வது. வடநூலார் சமஸ்யை என்றதும் இதனையேயாம். சமஸ்யையாவது பாடுவோன் முட்டுறும்படி இதனை வைத்துப்பாடுக என எழுத்து, சொல், அடி முதலியவற்றுட் கொடுக்கப்படும் ஒன்று. சமுச்சை எனவும் வழங்குவர். எழுத்துஞ் சொல்லுங் கொடுக்கப்பட்டுப் பாடியதற்குச் சிவப்பிரகாசசுவாமிகளுடைய "குடக்கோடு" என்னும் வெண்பாவையும், அடி கொடுக்கப்பட்டுப் பாடியதற்குச் சிவஞானமுனிவருடைய "வரையேறவிட்ட" என்னும் விருத்தத்தையும், பொருள் கொடுக்கப்பட்டுப் பாடியதற்குப் பொய்யாமொழிப்புலவருடைய "பொன்போலுங் கள்ளிப்பொறி" என்னும் வெண்பாவையும் உதாரணமாகக் கொள்க. அவைகள் முன்னர்க் காட்டப்பட்டன.

## கவிசாகரம்.

### கட்டளைக்கலித்துறை.

க. முதற்சீர் நான்கும் வெண்டளை பிழையா
கடைச்சீ ரொன்றும் விளங்கா யுடைத்தாய்
நேர்பதி னாறு நிரைபதி னேழுமாய்க்
கடையேக் கொண்டிறுங் கட்டளைக் கலித்துறை.

### திருக்குக்கவி.

௨. ஈரெழுத்து முதலா வீரா றெழுத்துளும்
ஓரடி போல நான்கடி தன்னிலும்
முதலெழுத்து வேறு மொழிவது திருக்கே.

(இ - ள்.) நான்கடிகளினும் முதலெழுத்து வேறாய் நிற்க இரண்டு எழுத்து முதலாகப் பன்னிரண்டு எழுத்துக்களுள்ளே ஓரடிபோல எழுத்துக்கள் வரும்படி பாடப்படுங் கவி திருக்குக்கவி எனப்படும். எ - று. இதனைத் திரிபு எனவுஞ் சொல்லுவர். திருக்குக்கவிகளைப் புகலூரந்தாதி, மறைசையந்தாதி முதலியவைகளிற் காண்க. புகலூரந்தாதியில் ஒன்று காட்டுதும்.

புகலூரந்தாதி.

நோக்க மருக்கும் விழிச்செல்வர் பாற்கவி நூறுரைத்துத்
தாக்க மருக்கு முருகா வருளென்பர் தண்செருந்தி
பூக்க மருக்குல வும்புக லூரரைப் போற்றியுய்யார்
பாக்க மருக்குத் தென்கொல்சொல் வாணர் பரிவிதுவே.

(இ-ள்.) நோக்கம் - பார்வை. அருக்கும் - குறைக்கின்ற. தாக்கு அமருக்கு. மரு - பரிமளம். கமருக்கு - நிலப் பிளப்புக்கு. உகுத்து - சொரிந்து. எ - று.

இக்கவியிலே நான்கடியினும் முதலாமெழுத்து வேறாய் நிற்க இரண்டாம் எழுத்து முதல் ஆறும் எழுத்துவரையும் ஓரடிபோல எழுத்துக்கள் வருதல் காண்க.

யமகக்கவி.

ங. ஈரெழுத்து முதலா வீரைந் தெழுத்துளும்
ஓரடி போல நான்கடி யுரைத்தல்
யமக மென்றே யறைந்தன ரறிஞர்.

(இ-ள்.) இரண்டெழுத்து முதலாகப் பத்தெழுத்துக்களுள்ளும் நான்கடியும் ஓரடிபோல வரப் பாடும் கவி யமகக்கவி. எ-று.

யமகம் - முன்வந்த எழுத்துக்கள் வேறு பொருளிலே பின்னும் வருவது. யமகத்தைத் தண்டியாசிரியர் நான்கடியும் முதன் மடக்கு என்பர்.

மதுரையமகவந்தாதி.

வையம் படைத்த மலரோன் வலாரி வலக்கையின்மேல்
வையம் படைத்தனி யாழிப் பிரான்வழி வந்துதன்மேல்
வையம் படைத்த மதனனைவென் றூன்மதிற் கூடல்பெற்றால்
வையம் படைத்தகை வாம்பரி பொங்குக்கைம் மாவருமே.

(இ-ள்.) வையம் - பூமி. வலாரி - இந்திரன். வை - வைத்த. அம் - அழகு. ஆழி - சக்கரம். வை - கூர்மை. அம்பு அடைத்த - அம்பை அடைவித்த. வையம் - தேர். படை - காலாள். கைம்மா - யானை என்க.

இக்கவியிலே முதலாம் எழுத்துத் தொடங்கி ஏழாம் எழுத்து வரையும் நான்கடியும் ஓரடிபோல வருதல் காண்க.

குவலயானந்தம்.

இலக்கணமுமிலக்கியமும்.

க. இலக்கணக் கருத்தே யிலக்கிய மறிநெறி
இலக்கிய மென்ப திலக்க ணத்தியைந்
தந்நெறி யானே யமைவ தென்ப.

கருந்து.

௨. பொருளென நல்லோர் புகல்வது கருத்தே
கருத்தெனப் பெறுவதைத் தொகைவகை விரியாற்
சொல்லிப் பயனைத் தோற்றுவ தேபொருள்.

தொகையினிலக்கணம்.

௩. பொதுமொழி பிண்ட மெனவே கருத்தைப்
புகலப் பெறுவது தொகையென வறையும்.

(இ - ள்.) தொகையாவது பொதுமொழியாகவும் பிண்டமாகவுங் கருத்தினைச் சொல்வது என்க.

பொதுமொழியாவது ஒருபெயராய்ப் பலபொருட்குப் பொதுவாய் வைக்குஞ் சொல். அது தலைமையும் பன்மையும்பற்றி வரும். பிறர் சரிதமு முளவாயினும் மார்க்கண்டேயப்படலம் என்றது தலைமைபற்றிய பொதுமொழி. பதம் முதலிய பிறிதுமுளதாயினும் எழுத்ததிகாரம் என்றது பன்மைபற்றிய பொதுமொழி. நன்னூலாரும் "விரவிய பொருளாற் பொதுமொழி தொடரி னதுபடலமாகும்" என்பர்.

இங்ஙனமே சூத்திரம், நூல், கவி முதலியவற்றின் முகப்பிற் பெயராய் இட்டுக்கொள்ளும் பொதுமொழிகளும் அவற்றின் கருத்தைச் சுருக்கி விளக்கும் என்க. "அ இ உத் தனிவரிற் சுட்டே" என்னுஞ் சூத்திரத்தின் தலையிற் சொல்லும் பெயராகிய சுட்டு என்னும் பொதுமொழியானது அச்சூத்திரத்திற் சொல்லக்கருதிய கருத்தைச் சுருக்கி விளக்குதல் அறிக. சூத்திரங்களின்முன் சுட்டு, வினு என்பனபோலப் பெயர்கூறிப்போதலே பொதுமொழியாகக் கருத்துரைத்தல் என்க.

பிண்டமாவது பலவற்றையுந் திரட்டிக் கூறுவது.

வகையினிலக்கணம்.

௪. கருத்தின் விரிவைக் கற்றோர்க் கினிதாய்
வகுத்துக் காட்டல் வகையென வறையும்.

விரிவினிலக்கணம்.

௫. இலக்கிய வழக்க முடனே கருத்தின்
விதப்பி னுரைப்பது விரிவா கும்மே.

மிஞ்சுகரு.

௬. விதரண சௌரிய மெனும்வினை மொழியாற்
பொய்த்தோற் றம்பெறக் கூறிடி னதனை
மிஞ்ச கருவென விளம்பினர் புலவர்.

(இ - ள்.) கொடையும், வீரமும் எனப்படுஞ் செயல்கள் சொல்லும் வகையினாலே போலியாகத் தோன்றும்படி சொல்லப்படுமாயின் அதனை மிஞ்சுகரு என்று புலவர் சொல்லினர். எ - று.

விதரணம் - கொடை. சௌரியம் - வீரம். மிஞ்சுதல் - மிகுதல். கரு - காரணம்.

வாதக்கருப்பொருள்.

எ. பிரமாணம் பிரமேய மையங் காரியம்
திர்சனஞ் சித்தாந்த மவயவந் தர்க்க நிர்ணயம்
ஆபாசம் விதண்டஞ் சலநிக் கிரகம்
வாதஞ் செற்பஞ் சாதி யெனும்பதி
னாறும் வாதக் கருப்பொரு ளாமே.

க. பிரமாணமாவது பொருள்களை அறிவினாற்றலால் அளந்து அறிதற்குக்கொள்ளும் அளவைக்கருவி. அது காண்டல், கருதல், உரை முதலியனவாகும்.

உ. பிரமேயமாவது காண்டல் முதலிய அளவைக்கருவிகளால் அளந்தறியப்படும்பொருள். அது ஆன்மா, உடம்பு, இந்திரியம், அர்த்தம், புத்தி, மனம், பிரவிருத்தி, தோடம், பிரேத்தியபாவம், பலம், துக்கம், வீடு எனப் பன்னிருவகைத்து.

ஆன்மாவாவது அறிவிற்கு இடனாயுள்ளது. அது சீவாத்துமா, பரமாத்துமா என இருவகை. உடம்பு உயிரின்போகத்திற் கிடனாயுள்ளது. அது அண்டசம் முதலிய நால்வகையுடையது. இந்திரியம் மெய் வாய் முதலியன. அர்த்தம் பிருதிவி, அப்பு முதலியன. புத்தி அறிவு. மனமாவது சுகம் முதலிய அநுபவிக்குங் கருவியாகிய இந்திரியம். பிரவிருத்தியாவது தொழிற்பாடு. தோடம் - குற்றம். அது காமம், வெகுளி, மயக்கம் என மூவகை. பிரேத்தியபாவம் மறுபிறப்பு.

ங. ஐயமாவது பலவிதமான அறிவு.

ச. காரியமாவது சுகம் முதலிய பயன்.

ரு. திருட்டாந்தம் துணிவுக்கு அநுகூலமாகக்கொள்ளப்படும் பொருள். திருட்டாந்தம் - காணப்பட்ட முடிவு.

சு. சித்தாந்தமாவது பிரமாணமுடைமையால் அங்கிகரிக்கப் பட்டபொருள். சித்தாந்தம் - சித்தித்த முடிவு.

எ. அவயவமாவது வழியளவையின் உறுப்புக்களாகிய பிரதிஞ்ஞை முதலியன.

அ. தர்க்கமாவது நெருப்பில்லையாயிற் புகையுமில்லை என்பது போன்ற பிறழ்ச்சியுணர்வு. தர்க்கம் - ஆராய்வு.

௯. நிர்ணயம் - நிச்சயமான அறிவு.

௧0. ஆபாசமாவது மெய்போலத்தோன்றும்போலியேது. அது அசித்தம் முதலியன. ஆபாசம் - போலி.

௧௧. விதண்டமாவது தன்பக்கத்தை நிறுத்தாது எதிரிபக்கத்தைமாத்திரம் மறுத்துரைக்கும் விவாதம்.

௧௨. சலமாவது ஒரு பொருள் கருதிச் சொன்ன சொற்கு வேறுபொருள் படைத்துக்கொண்டு பழித்தல்.

௧௩. நிக்கிரகமாவது தோல்விக்குக் காரணமான நிலை. அது மேற்கோளழிவு, வேறுமேற்கோள் முதலியன.

௧௪. வாதமாவது மெய்யறிய விரும்பிய இருவர் தம்முட் கூறும் வினவிடை.

௧௫. செற்பமாவது பிறன்மதம் மறுக்கும் வாயிலாகத் தன் மதம் நிலைபெறச் சொல்லும் வார்த்தை.

௧௬. சாதியாவது தனக்குக் கேடு பயப்பதாய்ப் பிறனுக்கு நயம்பயக்கும் போலியுத்தரம்.

இப்பதினாறும் வாதி, பிரதிவாதி என்னும் இருவரும் வாதஞ் செய்தற்கண் அறியப்படும் கருப்பொருள் என்க. கருப்பொருள் - காரணமானபொருள், உட்பொருள். இந்தப் பதினாறு பொருள்களையும் நியாயசூத்திரம் முதலிய தருக்கநூல்களுட் காண்க.

அரியவிதி.

பொருளிடங் காலஞ் சினை குணந் தொழில் வினை
இடையுரி யொன்பது மேற்கு மடுக்கே.

உ-ம். ௧. பொருள், பாம்பு பாம்பு. ௨. இடம், வீடு வீடு. ௩. காலம், விடியல் விடியல். ௪. சினை, கை கை. ௫. குணம், நன்று நன்று. ௬. தொழில், செய்யாமை செய்யாமை. ௭. வினை, பாடுவான் பாடுவான். அ. இடை, ஏ ஏ. ௯. உரி, சிவ சிவத்த.

மயேச்சுரசூத்திரம்.

அகவல் வெண்பா வடிநிலைபெற்றுச்
சீர்நிலை பெறாஉந் தொடைநிலை தெரியாது
நடைவயி னோடி நெய்வார்க் கன்ன
நலமுடைத் தாகிய பொருளொடு புணர்ந்த
எழுத்தறி யாதே யியலுமென் றிசைப்பர்.

### பூதபுராணவிலக்கணம்.

அகப்பா வகவலில் வஞ்சிக் குரிய வடியிரண்டும்
புகப்பான் மையவல்ல வென்பர்தொல் லோர்கள் புகரில்வஞ்சி
அகப்பாப் பொருளணே யாவென்ப நாவல ராற்கருதிப்
புகப்பான் மையுமொரு சார்புல வாணர் புகன்றனரே.

### இலக்கியக்களஞ்சியம்.

### கயாகரநிகண்டு.

பரிதி யாதித்த னிமகரன் பதங்கன் பனிப்பகை விண்மணி யென்றூழ்
அருணன்மார்த் தாண்டன் பாற்கரன் கதிரோ னுயிரங் கதிரினன் றபனன்
இருள்வலி சண்டன் சூரியன் மித்திர னெல்லியம் போருக நண்பன்
தருமொழி வேந்தன் சூரனே சவிதா தரணிகண் சுடரவ னென்பார்.

### ஏகபாதநிகண்டு.

அத்திரி யொட்டகம் விண்ணுங் கருணேயு மாகு மென்பர்
அத்திரி மாவும் வரையுங் கழுதையு மாகுங் கண்டாய்
அத்திரி திக்கயந் தன்னுடனே மிக்க வஞ்சனமாம்
அத்திரி தானுங் கறுப்புமென் றேதுவ ரான்றவரே.

### போதியநிகண்டு.

### போன்னிலக்கணம்.

தட்டுநீட்டுக்குற றணவினின் றுருகல் தன்னெடை குறைதலில் லாமை
கொட்டு கடினமின் மையா ணிக்குக் கூறுமாற் றறிவித்தல் சோதி [ளல்
விட்டுவிட் டொளிர்தல் மிகுபடத் திருத்தல் வெவ்வழல் வென்றியைக் கொள்
கட்டிசாய்த் திடுகிற் பள்ளங்கொண் டதிக கனங்கொளல் கனகலக் கணமே.

### ஔவைநிகண்டு.

### திபஞறுவகைவாசப்போருள்.

ஏலந்தக் கோலஞ் சூட னிலவங்கஞ் சாம்பி ராணி
காலஞ்செல் லகில்சந் தோங்கு கத்தூரி புளுகு மௌவல்
கோலமார் மருக் கொழுந்து வெட்டி குங்கும மிலாமிச்சம்வேர்
சாலுஞ்சண் பகஞ்சவ் வாது சாற்றுஞ் சோடசவா சப்பேர்.

---

## வேலையசுவாமி.

இவர் சிவப்பிரகாசசுவாமியுடைய சகோதரர். வெள்ளியம்பலத்தம்பிரானுக்கு மாணவகர். இலக்கணலக்கியங் கற்றவர். நல்லூர்ப்புராணம், வீரசிங்காதனபுராணம் முதலியவைகளையுஞ் சிகாளத்திப் புராணத்துப் பின்னிரு சருக்கங்களையும் பாடினவர்.

சீகாளத்திப்புராணம்.

பின்னவரு முன்னவரும் பேசு கதைநிரம்பத்
தன்னேரிகர் காளத்தி தன்னில் வாழ்—முன்னவவென்
னெஞ்சத் தியங்காம வியென் னுளத்திருந்தே
அஞ்சத்தி யானே யருள்.

---

## வைத்தியநாததேசிகர்.

இவரூர் சோழமண்டலத்துள்ள திருவாரூர். குலம் அபிடிக்தர்குலம். சமயம் சைவம். காலம் இற்றைக்கு இருநூற்றிருபது வருடத்துக்கு முன் என்பர். இவர் வன்மீகநாததேசிகர்க்கு மைந்தர். படிக்காசுப்புலவருக்கு ஆசிரியர். தொல்காப்பியம் முதலிய இலக்கணங்களையும், சங்கச்சான்றோரிலக்கியங்களையும் நன்கு கற்றவர். எழுத்து, சொல் முதலிய ஐந்திலக்கணங்களையும் அமைத்துக் கூறிச் சூத்திரமுமுரையுமாக இலக்கணவிளக்கம் என்னும் இலக்கணமும், திருவாரூர்ப்பன்மணிமாலை, நல்லூர்ப்புராணம், மயிலம்மை பிள்ளைத்தமிழ் முதலிய பிரபந்தங்களுஞ் செய்தவர். இலக்கண விளக்கத்திலே எழுத்தும், சொல்லும் தொல்காப்பியத்துள்ள எழுத்துச் சொல்லையும் நன்னூலையும், பொருளிலே அகப்பொருள் நம்பியகப்பொருளையும் புறப்பொருள் தொல்காப்பியப் புறப்பொருளையும், அணி தண்டியலங்காரத்தையும், யாப்பு யாப்பருங்கலக்காரிகையையுந் தழுவிப் பெரும்பாலும் வேறுபாடின்றி வருதல் அறிவார்க்கு நன்கு புலப்படும். சில சூத்திரங்களினும் உரைகளினும் சில சில பாகங்களை அவற்றினின்று படியெடுத்துங் கூறுவர்.

உரையிலே நற்றிணை, குறுந்தொகை, அகம், புறம், நாலடி, நான்மணி, சிந்தாமணி, சிலப்பதிகாரம் முதலியவற்றிலிருந்து பல செய்யுள்கள் உதாரணமாகக் காட்டுவர். அகத்திணையிலே திருக்கோவை, வாணன்கோவை, கப்பற்கோவை முதலிய பல கோவைகளுங் காட்டுவர். சில நூற்களுக்குப் பெயருங் கூறுவர். இறையனாரகப்பொருளுரை, பரிமேலழகருரை முதலியவைகளையுஞ் சிலவிடங்களில் எடுத்துச் சேர்ப்பர்.

கப்பற்கோவை.

காவைப் பொருவுசெக் கைக்கரு மாணிக்கன் கப்பல்வன்னிக்
கோவைப் பொருசெய்ய வேற்கொற்ற வாகின் குறைநயந்து
மாவைக் குளிர்நிழ லாக்கிய வென்னை மறப்பினுமென்
பூவைக்கு நல்லுயிர் நீயுடம் பேகொண்டு போகின்றதே.

பாண்டிக்கோவை.

பெருந்தா மரைப்பதம் போற்றிநிற் பார்பிற விப்பிணிக்கு
மருந்தா யெபெரு மான்மது ரேசர் வரையிலிந்தக்
கருந்தாரை வேற்கண்ணிக் கென்னகண் மாயங் கலந்ததண்டர்
அருந்தா வமுதருந் தப்புகுந் தாலு மருந்திலவே.

திருவாரூர்ப்பன்மணிமாலை.

காவா யெனச்சிறு தெய்வந் தனைத்தினங் கைதொழுது
நாவாய் தழும்பப் புகழ்ந்தென் பயன்கதி நாடினமும்மைத்
தேவாயத் தேவிற்குங் கோவாய் மணிப்பொற்சிங் காதனஞ்சேர்
பூவாய் மதிக்கண்ணி யாரூர்ப் பிரான்பதம் போற்றுமினே.

---

## வைத்தியநாதமுனிவர்.

இவரூர் யாழ்ப்பாணத்துள்ள அளவெட்டி. பிற்காலவாசம் சிதம்பரம். குலம் வேளாளர்குலம். சமயம் சைவம். காலம் ஞானப்பிரகாசமுனிவர்காலம் என்பர். வடமொழி தென்மொழிகளில் வல்லவர் என்றுங் கூறுவர். கவிபாடுந் திறமுடையவர். மடக்குத் திருக்குமுதலியனவும் பாட வல்லவர். வியாக்கிரபாதமான்மியத்தைத் தமிழிற் பெயர்த்து வியாக்கிரபாதபுராணம் எனப் பாடினவர்.

வியாக்கிரபாதபுராணம்.

க. மாதங்க வரைவி லேந்தி மாலம்பாற் புரங்க ளெய்த
மாதங்க மொருபா லுற்ற வானவன் மைந்தன் வாழும்
மாதங்க மார்பி னுன்றன் மருகனுன் மங்கை முக்கண்
மாதங்க முகத்தி னுன்றன் மலர்ப்பதம் வழுத்து வாமே.

மாதங்கவரை - மேரு. மாது அங்கம். மா தங்கு அ மார்பினுன் - விட்டுணு. நான்ம் அங்கை - தூங்கிய அழகிய கை. நாலும் என்பது "செய்யுமென்" என்னுஞ் சூத்திரவிதிப்படி உகரம் நீங்க லகரம் னகரமாகி நான்ம் என நின்றது. மாதங்கம் - யானை.

நடராசர்.

உ. ஏதமில் கார ணத்தாற் சராசர மெவையு மாகி
ஆதியாய் நடுவா யீறு யநாதியா யருளா யோக்குஞ்
சோதியோர் வடிவ மாகிச் சுரர்தொழச் சுடர்சேர் பொன்னின்
போதமார் சபையு ளாடும் புனிதனைப் போற்றல் செய்வாம்.

---

## வைத்தியலிங்கப்பிள்ளை.

இவரூர் யாழ்ப்பாணத்துள்ள வல்லிபட்டித்துறை. சமயம் சைவம். காலம் ஏறக்குறைய இற்றைக்குப் பதினைந்து வருடங்களுக்கு முன். இவர் சிவசம்புப்புலவருக்கு மாணவகர். இலக்கியலக்கணங்கள் கற்றவர். சிந்தாமணிநிகண்டு முதலிய நூல்களுங் கந்தரலங்காரவுரை முதலிய உரைகளுஞ் செய்தவர். சைவமகத்துவத்துக்கு மாறுயெழுந்த சைவமகத்துவதிமிரபானு முதலிய கண்டனங்களையெல்லாம் சைவமகத்துவபானு முதலிய நூல்களாற் கண்டித்தவர். உதயபானு முதலிய பத்திரிகைகளிலுஞ் சில விடயங்கள் எழுதினவர்.

சிந்தாமணிநிகண்டு.

சீர்செறி செஞ்சடைக்கட் டிகழ்மதிப் பிளவு தாங்கும்
ஏர்செறி கரிமுகன்ற னிணைமல ரடியை யேத்தி
கேர்செறி யிளைஞ ரோர்சொற் கொருபொரு ணேராயோரப்
பார்செறி நிகண்டுசிந்தா மணியெனப் பகர்வ னென்றே.

---

இன்னுஞ் சுருக்கியும் விரித்துங் கவியொடு பெயர்மாத்திரையுமாக எடுத்துக்கூறற்குரிய புலவர்கள் சங்கப்புலவருள்ளும் மற்றைப் புலவர்களுள்ளும் பலருளர். அவர் நாமங்களுள்ளுஞ் சில கூறுவாம்.

## சங்கப்புலவர்.

| | |
|---|---|
| அகம்பன்மாலாதனர் | இளங்கிரனர் |
| அஞ்சிலஞ்சியார் | இளந்திரையனர் |
| அஞ்சிலாந்தையார் | இளந்தேவனர் |
| அண்டர்மகன்குறுவழுதி | இளநாகனர் |
| அணிலாடுமுன்றிலார் | இளம்போதியார் |
| அம்மள்ளனர் | இளவெயினனர் |
| அம்மூவனர் | இளவேட்டனர் |
| அரிசில்கிழார் | இறையனர் |
| அழிசிநச்சாத்தனர் | உக்கிரப்பெருவழுதி |
| அறிவுடைநம்பி | உல்லோச்சனர் |
| ஆதிமந்தியார் | ஐயூர்முடவனர் |
| ஆதிவாயிலார் | ஓரம்போகியார் |
| ஆலங்குடிவங்கனர் | கல்குல்வெள்ளத்தார் |
| ஆலத்தூர்கிழார் | கடுகுபெருந்தேவன் |
| ஆலம்பேரிசாத்தனர் | கடுவன்மள்ளன் |

கடுவனிளமள்ளனர்
கண்ணகனர்
கண்ணங்கொற்றனர்
கண்ணம்புல்லனர்
கணக்காயனர்
கயத்தூர்கிழார்
கயமனர்
கவுணியனர்
கள்ளம்பாளனர்
காசிபன்கீரனர்
காப்பியஞ்சேந்தனர்
காமஞ்சேர்குளத்தார்
காரிக்கண்ணனர்
காவன்முல்லைப்பூதனர்
கிள்ளிமங்கலங்கிழார்
கீரங்கீரனர்
குட்டுவன்கீரனர்
குடவாயிற்கீரத்தனர்
குண்டுகட்பாலியாதனர்
குதிரைத்தறியனர்
குளம்பனர்
குப்பைக்கோழியார்
குமட்டூர்க்கண்ணனர்
குறுங்குடிமருதன்
குன்றியனர்
குறுங்கோழியூர்க்கிழார்
கூகைக்கோழியார்
கூடலூர்க்கண்ணனர்
கொட்டம்பலவனர்
கொடிஞாழன்மாணிபூதனர்
கொள்ளம்பக்கனர்
கொற்றங்கொற்றனர்
கொற்றனர்
கோவூர்க்கிழார்
சல்லியங்குமரனர்
சாத்தந்தையார்
சிறுகருந்தும்பியார்
சிறைக்குடியாந்தையார்
செங்கண்ணனர்
செங்குன்றூர்கிழார்
சேகம்பூதனர்
தாமோதரனர்
தாயங்கண்ணனர்
திப்புத்தோளார்
தும்பிசேர்கீரன்
தூங்கலோரியார்
தொல்கபிலர்
நக்கண்ணையார்
நத்தத்தனர்
நப்பாலத்தனர்
நப்பூதனர்
நம்பிகுட்டுவனர்
நல்கூர்வேள்வியார்
நல்லந்துவனர்
நல்லாவூர்கிழார்
நல்விளக்கனர்
நற்சேந்தனர்
நற்றங்கொற்றனர்
நற்றமனர்
நாகன்றேவனர்
நெடுங்கழுத்துப்பரணர்
நெய்தற்றத்தனர்
பனம்பாரனர்
பாண்டியன்மாறன்வழுதி
பாலைபாடியபெருங்கடுங்கோ
பிரமசாரி
பிரான்சாத்தனர்
பூதங்கண்ணனர்
பூதன்றேவனர்
பூதம்புல்லன்
பெருங்கண்ணனர்
பெருங்கவுசிகனர்

| | |
|---|---|
| பெருங்குன்றூர்க்கிழார் | மீளிப்பெருந்தூண்டிலார் |
| பெருஞ்சித்திரனர் | மீனெறிதூண்டிலார் |
| பெருந்தலைச்சாத்தனர் | மோசிகொற்றன் |
| பெரும்பதுமனர் | வடமவண்ணக்கர் |
| பெருவழுதி | வன்பரணர் |
| பேராலவாயிலார் | வாலம்பேரிசாத்தனர் |
| பொதும்பில்கிழார் | விட்டகுதிரையார் |
| பொத்தியார் | வெண்கொற்றன் |
| பொன்மணியார் | வெண்பூதன் |
| போதனர் | வெண்மணிப்பூதியன் |
| மார்க்கண்டேயனர் | வெள்ளைக்குடிநாகனர் |
| மாறன்வழுதி | வேட்டக்கண்ணன். |

## மற்றைப்புலவர்.

| | |
|---|---|
| அகோரதேவர் | சிவவாக்கியர் |
| அம்பலவாணக்கவிராயர் | சுப்பிரதீபக்கவிராயர் |
| ஆறுமுகசுவாமி | சேந்தனர் |
| உலகநாதர் | தண்டியாசிரியர் |
| உலகுடையநாயனர் | தாண்டவமூர்த்தி |
| ஒப்பிலாமணிப்புலவர் | தாண்டவராயர் |
| கடவுண்மாமுனிவர் | திருப்பாணாழ்வார் |
| கந்தப்பிள்ளை | திருப்பாற்கடனாதர் |
| கவிராசபண்டிதர் | திருவரங்கத்தமுதனர் |
| கவிவீரராகவமுதலியார் | தோலாமொழிப்புலவர் |
| காங்கேயர் | நமச்சிவாயக்கவிராசர் |
| குகைநமச்சிவாயர் | நல்லாதனர் |
| குணசாகரர் | நெல்லைநாதர் |
| குமாரதேசிகர் | பத்திரகிரியார் |
| குலசேகரபாண்டியர் | பரமானந்தர் |
| குலசேகராழ்வார் | பெரியாழ்வார் |
| கோனேரியப்பமுதலியார் | மதுரகவியாழ்வார் |
| சத்திமுற்றப்புலவர் | மனவாசகங்கடந்தார் |
| சத்தியஞானி | மார்க்கசகாயதேவர் |
| சபாபதிமுதலியார் | வரதுங்கபாண்டியர் |
| சரவணப்பெருமாள் | விசுவநாதப்பிள்ளை |
| சர்க்கரைப்புலவர் | வீரபாண்டியப்புலவர். |

இங்ஙனம் இன்னும் பலர் எடுத்துக்கூறற்குரியராய் விளங்குகின்றனர். ஆங்காங்குக் காண்க.

முற்றிற்று.

# அருஞ்சொற்பொருள்.

அ

அக்கரம் - எழுத்து.
அகந்தை - கெர்வம்.
அகிலாண்டவல்லி - உமை. [ல்.
அசதியாடல்-நகைத்துப்பேசுத
அட்டாவதானம் - எட்டுவிஷயங் களை அவதானித்தல்.
அத்தி - யானை, கடல்.
அதிவர்ணாச்சிரமம் - வருணாச்சி ரமங்களைக் கடந்து கடவுளை யுந் தன்னையும் அறிந்து நிற் கும் நிலை.
அந்தருத்திரேகம் - உள்ளேயுள் ள முயற்சி. அந்தர் - உள். உத் திரேகம் - முயற்சி.
அநசநம் - உணவின்மை.
அபிடித்தர் - குருவாக அபிடேக ஞ் செய்யப்பட்டவர்.
அபியுத்தர் - அறிஞர்.
அம்மம் - ஸ்தனம்.
அருச்சகர் - பூசகர்.
அருணை - அண்ணாமலை.
அல்லவை - பாவம்.
அளகேசன் - குபேரன்.

ஆ

ஆசங்கை - ஐயம்.
ஆசிரிதர் - அடைந்தோர்.
ஆசுகவி - நால்வகைக் கவிகளுள் ஒன்று. அஃது எழுத்து, சொ ல் முதலியவற்றுட் கொடுத்த சமுத்தியை அமைத்து விரை ந்துபாடுங்கவி. இது கடுங்கவி எனவும் படும்.

ஆ

ஆடம்பரம்-அலங்காரமானதோ ற்றம்.
ஆடுறுபசி - வருத்தும்பசி.
ஆதிசைவர் - சிவப்பிராமணர்.
ஆதீனம் - மேன்மையான இடம். அதி - மேன்மை. ஈன - ஒரு விகுதி.
ஆப்பி - பசுச்சாணி.
ஆபாதம் - பாதந்தொடங்கி.
ஆபிதானிகம் - சொற்பொருளு ணர்த்தும் நூல்.
ஆய்ப்பாடி - இடைச்சேரி.
ஆயம் - பெண்கள் கூட்டம்.
ஆருகதம் - அருகசமயம்.
ஆரூரன் - சுந்தரமூர்த்தி.
ஆழ்வார் - விட்டுணுபத்தர். விட் டுணுவின் குணங்களாகிய அ மிர்தவெள்ளத்திலே ஆழ்தல் பற்றி வந்த பெயர் என்பர்.
ஆற்றுப்படை - வழிப்படுத்தல்.
ஆறலைத்தல் - வழிப்பறித்தல்.
ஆன்பால் - பசுப்பால்.

இ

இதழி - கொன்றை.
இந்தனம் - விறகு.
இரசவாதம் - இரசத்தால் வாதி க்கும் வித்தை.
இரட்டுதல் - இரண்டாக்கல்.
இரட்டைமணிமாலை - வெண்பா, கலித்துறை என்னும் இரு செய்யுள்களாலும் வரும் பிர பந்தம்.

இ

இரப்புனியார்-இரந்துண்போர்.
இருக்கை - வசிக்குமிடம்.
இருபாவிருபது - வெண்பாவுங் கலித்துறையுமாக இருபது செய்யுள்கொண்ட பிரபந்தம்.
இலக்கியம் - உதாரணம்.
இலேககர் - எழுத்தாளர்.
இலைப்புரைகிளைத்தல் - தேடல்.
இலௌகிகம் - உலகத்திற்குரிய [து.
இளருதல் - தழைத்தல்.
இறவு - இருல்.
இறைகொளல் - தங்குதல்.

ஈ

ஈழம் - பொன்.

உ

உத்தரம் - மறுமொழி.
உதிசி - வடக்கு.
உபயம் - இரண்டு.
உபப்பிருங்கணம் - முதனூற் பொருளை யாவரும் விளங்கும்படி வேண்டுஞ் சொற்பெய்து விரித்துரைக்கும் வாக்கியம்.
உலா - தலைவன் பவனிவருதலைப் பேதை, பெதும்பை முதலிய மகளிர் கண்டு மயங்கலும் பிறவுங்காட்டிக் கலிவெண்பாவிற் செயப்படும் பிரபந்தம்.
உலோகாயதம் - புறச்சமயங்களுள் ஒன்று; அது இவ்வுலக இன்பமே மெய்யெனக்கூறுஞ் சமயம்.

எ

எட்டுத்தொகை - கடைச்சங்கத்தைச்சார்ந்த எட்டுத்தொகை நிலைச்செய்யுள். அது நற்றிணை, குறுந்தொகைமுதலியன.

ஐ

ஐயப்பாடு - ஐயப்படுதல்.
ஐயிருவட்டம் - அழகிய பெரிய ஆலவட்டம்.

ஓ

ஓரி - கடையெழுவள்ளல்களில் ஒருவன்; இவன் மலைமண்டலத்துள்ள கொல்லிமலையையும், அதனைச் சூழ்ந்த நாட்டினையும் ஆண்ட ஒரு சிற்றரசன்.

க

கசடு - குற்றம்.
கட்டுரைத்தல்-உறுதிபெறச்சொல்லல்.
கண்கூடு - பிரத்தியக்ஷம்.
கண்பிசைதல் - அழுதல்.
கணிச்சி - மழுப்படை.
கணை - அம்பு.
கபடம் - வஞ்சகம்.
கமர் - நிலப்பிளவு.
கமலை - திருவாரூர்.
கர்ணபரம்பரை - கேள்வி.
கரவடம் - களவு.
கரா - முதலை.
கரும்பொன் - இரும்பு.
கலைமகள் - சரசுவதி.
கவிச்சக்கரவர்த்தி-கவிராசர்க்கு முதல்வர்.
கவித்துவம் - கவிபாடுந் தன்மை.
கவிராசர் - கவிகட்கரசர்.
கவுணியர் - ஞானசம்பந்தர்.
கற்றை - மயிர்த்தொகுதிபோல்வன.
கன்னல் - கரும்பு.
கனகராசி - பொற்குவை.
கனி - சுரங்கம்.

கா

கார்க்கசியம் - கடினமுள்ளது.
காவாலி - நிலையிலாதோன்.

கா

காவியம் - கவியாற் செய்யப்பட்டது. கவி - புலவன்.
காஷாயம் - துவர்தோய்த்தசீலே.

கி

கிரிதீபம் - மலைவிளக்கு.
கிழி - முடிச்சு.
கிள்ளை - கிளி.

கீ

கீழ்க்கணக்கு - அடிநிமிர்வில்லாச் செய்யுள்களாலே அறம் முதலிய பொருள்களைக் கூறும் பிரபந்தம்.

கு

குடந்தம் - கைகூப்பி மெய்வளைத்துநிற்றல்.
குடந்தை - கும்பகோணம்.
குடாரம் - கோடரி.
குரவை - கைகோத்தாடல்.
குரும்பி - புற்றுஞ்சோறு.
குளிர் - கிளிகடி கருவிகளுள் ஒன்று.

கூ

கூடசதுர்த்தம் - நான்காமடியில் எழுத்துக்கள் மற்றை மூவடிகளிலும் மறைந்துநிற்கப் பாடப்படுஞ் சித்திரகவி.
கூரத்தாழ்வார் - சோமயாசியின் குமாரராகிய ஒரு விட்டுணு பத்தர்.

கே

கேவலம் - தனிமை.

கை

கைங்கரியம் - தொண்டு.
கைம்மிகல் - அளவின்மிகல். ஐ.க- அளவு குறித்த ஓரிடைச்சொல்.

கொ

கொங்கு - தேன்.
கொம்மைகொட்டல் - கைதட்டியழைத்தல்.
கொற்றவன் - அரசன்.
கோமுத்தி - திருவாவடுதுறை.
கோமூத்திரி - ஒரு சித்திரகவி.

கோ

கோவை - களவு, கற்பு என்னுங் கைகோள் இரண்டினும் வருங் கிளவிகளால் ஐந்திணையும் மாறுபடாமல் அகப்பொருள் தழுவி நானூறு கட்டளைக்கலித்துறைகளாற் பாடப்படும் பிரபந்தம்.
கோழி - உறையூர்.
கோளரி - சிங்கம்.

கௌ

கௌரவம் - மேன்மை.
கௌமோதகி - விட்டுணுவின் சங்கு.

ச

சகசம் - கூடப்பிறந்தது.
சகவாசம் - கூடவசித்தல்.
சகாத்தம் - சாலிவாகன சகன் என்பவனுடைய வருடம்.
சங்கதம் - சமஸ்கிருதபாடை.
சங்கமம் - சிவபத்தர்.
சங்கமர் - வீரசைவர்.
சங்கை - ஐயம்.
சண்டாளி - புலைச்சி.
சதகம் - நூறுகவியாலாய நூல்.
சதாசாரம் - நல்லொழுக்கம்
சந்தமாலை - ஒரு பிரபந்தம்.
சந்தோகன் - சாமவேதகீதன்.
சந்நியாசி - முற்றத்துறந்தோன்.
சம்பிரதாயம் - பரம்பரை.
சமணம் - அருகசமயம்.
சயம் - வெற்றி.
சயிலம் - மலை.

ச

சல்லாபம் - வினவும் விடையுங் கூடியது.
சலஞ்சாதித்தல் - சொல்வோன் கருத்துக்கு மாறுக அவன் சொல்லிய சொற்கு வேறு பொருள் கூறிச் சாதித்தல்.

சா

சாத்தேயம் - சத்தியை வழிபடுஞ் சமயம்.
சாநவி - கங்கை.
சாமுசித்தர் - முற்செனனத் தவத்தினலே அந்தக்காண சுத்தாராய்ப்பிறந்து சிவத்தியானஞ் செய்யும் பெரியோர்.
சாரம் - உட்பொருள்.
சான்ருேர் - பெரியோர்.

சி

சித்தர் - சித்தியில் வல்லவர்.
சித்தாந்தம் - முடிந்தமுடிபு.
சியேட்டர் - முன்பிறந்தோர்.
சிரம் - தலை.
சிவத்துவிசர் - சிவப்பிராமணர்.
சிவபரத்துவம் - சிவனுடைய கடவுட்டன்மை.
சிறுகாப்பியம் - கோவை, உலா, அந்தாதி முதலிய சிறிய காவியம்.
சின்னூல் - நேமிநாதம்.

சு

சுதர்சனம் - விட்டுணுவின் சக்கரம்.
சுபக்கம் - தன்பக்கம்.

சே

சேட்டி - முருகபிரான்.
செம்பியன் - சோழன்.
செய்கரை - யாற்றணை.
செற்றம் - பகை.
செறுநர் - பகைவர்.

த

தசை - நிலை.
தசாதன் - சூரியன் மரபிலுள்ள அஜமகாராசாவின் மகன்; பத்துத்திக்கிலுஞ் செல்லுந் தேருடைமையாலே தசரதன் எனப்பட்டான். தசம் - பத்து. ரதம் - தேர்.
தட்டை - கிளிகடி கருவிகளுள் ஒன்று; அது மூங்கிலைக்கணுக் கணுவாய்ப் பிளந்து ஒன்றிலடிப்பது.
தடைவிடை - ஆட்சேப சமாதானம்.
தண்ணெனவு - குளிர்ச்சி.
தர்க்கம் - நியாயவாதம்.
தருக்கு - களிப்பு.
தருமசாத்திரம் - மிருதிநூல்.

தா

தார்க்கிகர் - தருக்கம் வல்லவர்.
தாலம் - நாக்கு.

தி

திமிரம் - இருள்.
தியாகம் - கொடை.
திராவிடம் - தமிழ்.
திருக்கு - நான்கடியிலும் இரண்டாம் எழுத்துத் தொடங்கி ஏழெழுத்துவரையிலும் ஒன்ருய்வரும்படி எழுத்தமைத்துப் பாடப்படும் பாட்டு.

து

தும்பி - வண்டு.
துமிதம் - துளி.
துவிபாஷாவாதி - இரண்டு பாஷை பேசுவோன்.

தே

தேசிகம் - அழகு.
தேசிகர் - குரு.
தேத்தடை - தேன்கூடு.

ந

நயம் - அழகு.
நரபாலன் - அரசன்.
நவை - குற்றம்.
நன்னன் - ஒரு சிற்றரசன்.

நா

நாராயணன் - விட்டுணு.
நாவலர் - அறிஞர்.

நி

நிதிபதி - குபேரன்.
நிரசனம் - தள்ளல்.
நிரோட்டம் - மேலுதடும், கீழுதடும் ஒன்றுது உச்சரிக்கப்படும் எழுத்தாலமைந்த கவி.

ப

பகிரங்கம் - வெளியாதல்.
பஞ்சலக்கணம் - ஐந்திலக்கணம்.
பஞ்சவிஞ்சதி - இருபத்தைந்து.
பஞ்சிகை - பத்திரிகை.
பட்டிமண்டபம் - வித்தியாமண்டபம்.
படுதரன் - மிகவல்லோன்.
பண்பு - குணம், செயல், தகுதி.
பத்துப்பாட்டு - நூறடி சிறுமையும் ஆயிரம் அடி பெருமையுமாகச் செய்யப்படும் அகவற்பாட்டுப் பத்து.
பரத்துவம் - கடவுட்டன்மை.
பரதகண்டம் - இமய மலையின் தென்பாலுள்ள பூமி.
பரபக்கம் - பிறன்பக்கம்.
பராக்கு - பாராமை.
பரி - குதிரை.
பரிசில் - உபகாரம்.
பரிபாலகர் - நன்கு காப்பவர்.
பரிபூரணம் - நிறைவு.
பரியந்தம் - எல்லை.
பலதலை - ஐயம்.
பழனம் - வயல்.
பனுவல் - பாட்டு.

பா

பாடியம் - உரை.
பாண்டவர் - பாண்டுராசாவின் புத்திரர்.
பாணினீயம் - பாணினிசெய்த வியாகரணம்.
பாரகாவியம் - பெரியகாவியம்.

பி

பிரதானநகரி - இராஜதானி.
பிரபந்தம் - பாமாலை.
பிரவேசித்தல் - உட்புகல்.
பின்னல் - சடை.
பின்னிலை - ஏவல்.

பு

புகலி - சீகாழி.
புகாக்காலை - போசனகாலம்.
புகார் - காவிரிப்பூம்பட்டினம்.
புட்படுத்தல் - பறவைகளைக்கொல்லல்.
புலமை - அறிவு.
புலரி - விடியல்.
புலை - புலாலுண்ணல்.
புளினம் - மணற்குன்று.
புற்கம் - இழிவு.

பெ

பெருக்காளர் - வேளாளர்.
பெருங்காப்பியம் பெரியகாவியம்.
பெருநாவலர் - திருவள்ளுவர்.
பெருமகன் - அரசன்.

போ

பொதுமொழி - ஒருவிடயத்துக்குப் பொதுமையும் விசேடமும் நோக்கி அதன் முகத்திலிடும் பெயர்.

பௌ

பௌத்தம் - புத்தசமயம்.
பௌராணிகர்-புராணபண்டிதர்.

ம

மகோததி - பெருங்கடல்.

ம

மடக்கு - மடங்கிவருவது.
மடவோர் - மூடர்.
மதலை - கொன்றை.
மதுரம் - இனிமை.
மதுரகம் - இருப்பை.
மலைமண்டலம் - சேரநாடு.
மறைசை - வேதாரணியம்.

மா

மாகம் - மாகர்செய்நற்காரியம்
மாசிகம் - மாதத்துக்கு உரியது.
மாதவி - குருக்கத்திக்கொடி.
மாபாடியம் - விரிவுரை.
மான்மியம் - மகத்துவம்.
மானம் - பெருமை.

மீ

மீமாஞ்சை - ஆறுசாத்திரங்களு ள் ஒன்று. அஃது உண்மை ஆராய்ந்துரைப்பது.

மு

முத்தகம் - தனிநிலைச்செய்யுள்.

மெ

மெல்லம்புலம்பன் - கடற்கரையி ல் வசிப்போன்.

வ

வஞ்சி - கருவூர்.
வஞ்சினம் - சபதம்.
வண்ணம் - சந்தம்.

வ

வரகவி - வரம் பெற்றுப் பாடும் புலவன்.
வருடைமான் - மலையாடு.
வருணனை - அலங்காரம்.
வள்ளல் - கொடையாளி.
வனம் - வன்னம்.

வா

வாசஸ்தானம் - வசிக்குமிடம்.
வாதபுரேசர் - திருவாதவூரர்.

வி

விசிட்டம் - மேன்மை.
விசிட்டாத்துவிதம் - பரமான்மாவுஞ் சீவான்மாவும் வேறு வேறாயினும் உடம்பில் உயிர்போலச் சீவாத்துமாவுள்ளே பரமாத்துமா இருந்து இயக்குதலாற் பரமாத்துமாவுக்குஞ் சீவாத்துமாவுக்கும் ஒற்றுமை கூறும் மதம்.
விசுவம் - பூமி.
வித்துவான் - அறிஞன்.
விருது - வெற்றிச்சின்னம்.
விரையாக்கலி - ஆணை.

வே

வேதியர் - வேதம் ஓதுதற்கும், ஓதுவித்தற்கும் உரியர்.

வை

வைதிகம் - வேதசம்பந்தமுள்ள நெறி.

# விலைப் புத்தகங்கள்.

ரூ. அணா

யாப்பருங்கலக்காரிகைப் புத்துரை. இது விடயங்களையும் உதாரணங்களையுந் தனித்தனி பிரித்துச் சேர்த்து விளக்கியது; கட்டளைக் கலிப்பா, கட்டளைக் கலித்துறை, நூறுவண்ணம் என்பவைகளின் இலக்கணங்களும், விருத்தபேதங்களும், சிலசில உதாரணங்களும் விசேடமாகச் சேர்க்கப்பட்டுளது. க— 0

இலக்கியச்சொல்லகராதி. இது சிந்தாமணி, சிலப்பதிகாரம் முதலியவைகளினும், பாரதம், இராமாயணம், கந்தபுராணம் முதலியவைகளினும் வருகின்ற அருஞ்சொற்களாகிய இலக்கியச்சொற்கள் பலவற்றிற்குப் பொருள்விளக்குவது. க— 0

அகப்பொருள்விளக்கப் புத்துரை. இது பல சூத்திரங்களுக்குப் புத்துரை கூறியும், விடயங்களையும், உதாரணங்களையும் ஒருங்கு கூட்டிவிளக்கியும் பலவாறு புதுக்கியது. க— 0

ரூ. அணா

வினைப்பகுபதவிளக்கம். இது நன்னூலினுள்ள "நடவாமடிசீ" என்னுஞ்சூத்திரத்தை அநுசரித்துப் பல வினைப்பகுபதங்களையும் வினையடியாகப் பிறந்த பல பெயர்ப்பகுபதங்களையும் பகுதி, விகுதி காட்டி முடித்துச்செல்வது. ... ... ... 0— அ

இதோபதேசம். இது பஞ்சதந்திரத்திலும், மகாபாரதம் முதலிய நீதிநூல்களினுமிருந்து எடுக்கப்பட்ட நீதிவாக்கியங்களையும், விநோத கதைகளையுமுடையது. ... ... 0— அ

நீதிநெறிவிளக்கப் புத்துரை. இது பலவிததிருத்தங்களையும், முதனூலுரைகளோடியையும் பொருத்தங்களையும் வேறு நூற்பிரமாணங்களையுமுடையது 0— ௬

இலக்கணசந்திரிகை. — இது நன்னூல் முதலிய இலக்கணங்களிலே அமையாது பாரதம், இராமாயணம் முதலியவற்றிலே வந்து வழங்கும் ஆரிய

| | ரூ. | அணா |
|---|---|---|
| பதங்களுக்கும், அரியனவாய பல தமிழ்ப் பதங்களுக்கும்விதிகாட்டி விளக்குவது. ... | 0— | ச |
| மேகதூதக்காரிகை. இது குபேரன் சாபத்திற் பிரிந்திருந்த இயக்கனொருவன் தன் மனைவிக்கு மேகத்தைத் தூதுவிட்டதாகப் பலவிதவருணனையமைத்து வடமொழியிற் காளிதாச மஹாகவி செய்த மேகதூதத்தின் பொருள்களைத் தமிழிற் பெயர்த்துக் கட்டளைக்கலித்துறையிற் செய்தது. ... ... | 0— | ச |
| சூடாமணிநிகண்டு முதலாவது. இஃது அருகன் சிவன் முதலிய தேவர்களின் நாமங்களாகிய அருகன், எண்குணன், சங்கரன்முதலிய பதங்களுக்கெல்லாம்வடநூல்களிலுந் தமிழ்நூல்களிலுந் தேடி எழுதப்பட்ட ஒன்றும் பலவுமாகிய பொருள்களையுஞ் சிலவற்றின் கதைகளையுமுடையது.... ... ... | 0— | ச |

| | ரூ. | அணா |
|---|---|---|
| சூடாமணிநிகண்டு இரண்டாவது. இதுவும் முதலாவதுபோல எழுதப்பட்ட சொற்பொருளுடையது. ... | 0— | ரு |
| திருவாதவூரர்புராண — வுரை. ... ... ... | க— | 0 |
| திருவாதவூரர்புராணம் மூலம். ... ... ... | 0— | ச |
| ஆத்திசூடிவெண்பா கதைகளோடு.... ... ... | 0 — | ச |
| நகுலமலைக்குறவஞ்சிநாடகம். ... ... ... | 0— | ரு |
| கலைசைச்சிலேடைவெண்பா அரும்பதவுரை. | 0— | உ |
| மறைசையந்தாதி அரும்பதவுரை. ... ... | 0— | உ |
| சாணக்கியநீதிவெண்பா. | 0— | உ |
| சிவத்தோத்திரக்கவித்திரட்டு. ... ... ... | 0— | உ |
| சதாசாரக்கவித்திரட்டு. | 0— | உ |
| முத்தகபஞ்சவிஞ்சதி.... | 0— | உ |
| ஆசாரக்கோவை.... ... | 0— | உ |
| பழமொழிவிளக்கம். ... | 0— | உ |
| யாப்பருங்கலப்பொழிப்புரை. ... ... ... | 0— | ரு |
| உரிச்சொனிகண்டு. ... | 0— | சு |
| ஏகவிருத்தபாரதாதி. ... | 0— | உ |
| ஈழமண்டலத்தேவாரம். | 0— | க |
| சிவஞானபோதபாடியம். | ச— | 0 |

இங்ஙனம்,

சுன்னாகம்:
நவ௵
ஆவணி௴.

அ. குமாரசுவாமிப்பிள்ளை,
யாழ்ப்பாணம்.